Who cares if your hair is different?

# Sunsilk cares –
## with 3 special shampoos

**Pick the one that's perfect for you**

**Sunsilk Lemon Shampoo**
**For Greasy Hair:** Gently washes out excess grease... gives you days of clean, bouncing, silken hair.

**Sunsilk Tonic Shampoo**
**For Dry Hair:** Contains Allantoin to nourish your hair... revives that silken lustre, leaves hair softly glowing.

**Sunsilk Beauty Shampoo**
**For Normal Hair:** Perfectly balanced to keep your hair in beautiful condition, weaving silk into every strand.




**Sunsilk** – more than a shampoo, a cosmetic for your hair

*Quality Products by HINDUSTAN LEVER*

LINTAS-SS. 11-I

கல்கி



சிறுகதைச் சிறப்பிதழ்

## பொருளடக்கம்

சாதாரண, ஆனி, 14 - 1970, ஜூன் 28



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விபரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |

ஆளும் கட்சிக்குக்
கம்யூனிஸ்ட் ஆதரவு



நன்றி: "ஹிந்து"




Rak — மார்க்கண்டேயர் சரணாகதி!



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 29 ● இதழ் 48



# எது பெரிய அபாயம்?

"கட்சியின் ஆதரவு போதிய அளவில் பிரதம மந்திரிக்குக் கிடையாது. அவர் தொடர்ந்து பதவியில் இருப்பதற்காகத் தேசம் கம்யூனிஸ்ட் பாதையில் செல்லவேண்டியிருக்கிறது'' என்று 'மைலிந்தியா' வருந்துகிறது. மேலும் அது கூறுகிறது: ''மேற்கு வங்க கவர்னர் ஸ்ரீ தவானின் கருத்துக்களைக் கொண்டுள்ள ராஜீய சக்திகள் (கம்யூனிஸ்டுகள்) தருகின்ற ஆதரவு போய் விட்டால் பிரதமர் அலங்கோலமாகக் கவிழ்ந்து விடுவார். ஒரு நபரின் பதவிப் பேராசையைத் திருப்தி செய்வதற்காக, கம்யூனிஸ்ட் பிடிப்பில் தேசமனைத்தும் விழுந்துவிடும்படியான நிலைமை உருவாக்கப்படுகிறது.''

கம்யூனிஸ்டுகளின் அபாயமே வகுப்புவாதிகளின் அபாயத்தைவிடப் பெரிதாக உள்ளது. இச்சமயத்தில் வகுப்புவாத அபாயத்தை மட்டுமே ஆளும் கட்சி பெரிதுபடுத்தி வருவது தகாது. இதேபோல், நமது சமூகத்தின் நிரந்தரப் பகுதியினராக இருந்துகொண்டு, தமது மதத்தைக் கைவிடாமலேயே தேசிய முயற்சிகளில் ஒத்துழைக்கத் தயாராக இருப்பவர்கள் விஷயத்தில், ''ஆர்கனைஸர்'' போன்ற ஜனசங்க பத்திரிகைகளும் அமைப்புகளும் இன்னும் நியாயமாக நடந்து கொள்ள வேண்டும். மெய்யா பொய்யா என்று உறுதிப்படாத பழங் கதைகளை வெளியிட்டுக் கொண்டிருப்பதால் யாருக்கும் நன்மையில்லை. நன்மையில்லை என்பது மட்டுமல்ல, தீமையும் ஏற்படுகிறது. தமது ஆட்சியை நிலைநிறுத்துவதற்காகப் பல நூற்றாண்டுகளுக்குமுன் ஒரு பிரிவைச் சேர்ந்த மன்னர்களும் கொடுங்கோலர்களும் மோசமாக நடந்து கொண்டிருக்கலாம். அதைக் கொண்டு இன்றைய பிரஜைகளில் எந்தப் பிரிவினரின் நடத்தையைப் பற்றியும் மாசு கூற முடியாது. இதுபோன்ற வகுப்புவாதப் பிரசாரம் உண்மையான கம்யூனிஸ அபாயத்தை உணர்ந்தறிய முடியாதபடி புழுதியைக் கிளப்பத்தான் பயன்படுகிறது. தேசத்திலுள்ள கம்யூனிஸ்ட் கட்சிகளும் அவற்றின் சக்தி வாய்ந்த அந்நிய நண்பர்களுந்தான் இந்திய ஜனநாயகத்துக்கு அபாயம் விளைவிப்பவர்கள். ஐம்பது கோடி மக்கள் கொண்ட இந்தச் சமுதாயத்தைக் கம்யூனிஸ்ட் சார்பு நாடாக்கிக் கொள்ளவே அவர்கள் விரும்புகின்றனர்.

கம்யூனிஸ்ட் கட்சிகள் வன்முறையுடன் கூடிய தேசத் துரோக நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகின்றன. ஆனால் அவற்றைவிட வகுப்புவாதந்தான் அதிக அபாயமுள்ளது என்று புது காங்கிரஸ் தலைவர்கள் கருதுகிறார்கள். அவர்களது இந்த நிலை அபாயம் நிறைந்தது. 'இந்திய சர்க்காரின் இப்போதைய மனப்பான்மை நீடித்து, இதே அடிப்படையில் அவர்களது கொள்கைகள் உருவாகும் பட்சத்தில், ஒரு நாள் திடீரென இந்தியாவானது மாஸ்கோவுக்குப் பணயம் வைக்கப்பட்டிருக்கும்' என்று ஜூன் 17ந் தேதி தலையங்கத்தில் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' எழுதியுள்ளது. ''இந்தியன் எக்ஸ்பிரஸ்'' சும்மா பீதியைப் பரப்புகிறது என்று கருத முடியாது. தமக்கு ஜனசங்கந்தான் பெரிய முட்டுக்கட்டை என்றும், கம்யூனிஸ்டுகள் தமது ஆசைகள் கைகூடச் செய்வதற்கு முட்டுக்கட்டை போடவில்லை என்றும் பிரதமருக்குப் புலப்படுகிறது. எனவே கம்யூனிஸ்டுப் பேராபத்தைப் பொருட்படுத்தாமல், வகுப்புவாதம்தான் முதல் அபாயம் என்று அவர் வற்புறுத்திச் சொல்லுகிறார். சுதேசியான கம்யூனிஸ்டு ஆட்சியோ, அந்நிய கம்யூனிஸ்டு ஆதிக்கமோ வேண்டியதில்லை என்பதுதான் இந்திய மக்களின் கருத்து. எனவே, ஸ்ரீமதி காந்தி அவர்களைத் தவறான வழியில் இட்டுச் செல்லும்படி விடலாகாது.

# ராஜாஜியின் கருத்துக்கள்

பழைய மன்னர்களுக்கு அளித்த புனிதமான வாக்குறுதியைப் புறக்கணிப்பது இப்போதைய இந்திய சர்க்காரின் உத்தேசம். இதை ஸ்ரீ கே. சந்தானம் கண்டித்திருப்பதைக் கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். இது பழகிப்போன விவகாரமாக இருக்கலாம். ஆனால் அக்கிரமமான திட்டத்தைக் கைவிடுவதற்குக் காலம் கடந்துவிடவில்லை. ஸ்ரீ சந்தானம் தெளிவாகவும் அழுத்தம் திருத்தமாகவும் இதை வற்புறுத்தி இருக்கிறார். உடன்பாட்டைச் சட்டவிரோதமாக மீறுவது யோக்கியமான காரியம் அல்ல. மாஜி மன்னர்கள் அடங்கி ஒடுங்கிப் பணிந்து விடப் போவதில்லை. ஸ்ரீ சந்தானம் கூறுகிறார்:

''மகாத்மா காந்தியின் பெயரைத் தமது நோக்கங்களுக்காகப் பயன்படுத்துவதற்கு ஆளும் காங்கிரஸ் தலைவர்கள் முன்வந்திருப்பது பரிதாபகரமானது. காந்திஜி இன்று உயிருடன் இருந்திருந்தால் சாகும் வரை உண்ணாவிரதத்தை மேற்கொண்டிருப்பார் என்பதைப் பற்றி எனக்குச் சந்தேகமே இல்லை. ராஷ்டிரபதி தேர்தலின்போது முதல் உண்ணாவிரதம் தொடங்கியிருக்கும். ராஜமானிய ஒழிப்புப் பிரேரணை வந்தபோது அடுத்த உண்ணாவிரதம் நடந்திருக்கும். காந்திஜி கொலை செய்யப்படுவதற்குச் சில வாரங்கள் முன்னர்தான் அவர் ஓர் உண்ணாவிரதத்தை மேற்கொண்டார் என்பது நினைவிருக்கலாம். பிரிவினை ஒப்பந்தப்படி பாகிஸ்தான் அரசுக்கு இந்திய சர்க்கார் ரூபாய் 55 கோடி தருமாறு நிர்ப்பந்திக்கவே அந்த உண்ணாவிரதம் மேற்கொள்ளப்பட்டது. வெளிப்படையாக இந்தியாவுடன் காஷ்மீரில் பாகிஸ்தான் போரிட்டுக்கொண்டிருந்த தருணம் அது. சர்தார் பட்டேல் நிருபர்களுக்கு அப்போது ஒரு பேட்டி அளித்தார். அதற்கு நான் போயிருந்தேன். அது காந்திஜியின் உண்ணாவிரதம் தொடங்குவதற்கு இரண்டு நாள் முன்னர் நடைபெற்றது. பாகிஸ்தான் போர் நடவடிக்கையில் இறங்கியதன் காரணமாக வாக்களிக்கப்பட்ட தொகைக்கான உரிமையை அது இழந்து விட்டது என்பது சர்தார் பட்டேல் அளித்த விளக்கம். பாகிஸ்தான் என்ன செய்தாலும், செய்யாமல் இருந்தாலும் தாம் கொடுத்த வாக்கை இந்திய சர்க்கார் மீறுவது மதிப்புக் குறைவானது என்று காந்திஜி கூறினார். அவரது வாதத்தை இந்திய சர்க்கார் ஏற்றுக் கொண்டு பாகிஸ்தானுக்கு 55 கோடி ரூபாய் கொடுத்தது.

''மன்னர்களுடன் செய்து கொண்ட உடன்படிக்கைகளின் விளைவாக ஏற்பட்ட புனிதமான பொறுப்புக்களைத் தமது தீவிரமான கருத்துக்களின் காரணமாகப் புறக்கணிப்பதற்கு இந்தியாவின் தலைவர்கள் எனப்படுவோர் படாடோபமாக உரிமை கோருகையில், மகாத்மா காந்தி சும்மா இருந்திருப்பார் என்று நினைக்க இயலுமா? அந்த மன்னர்கள் தமது ஆதிபத்திய அதிகாரங்களை மட்டுமின்றி, தமது பொக்கிஷங்களையும், அரண்மனைகளையும் துறந்தனர். அதற்காக அவர்களுக்குக் கிடைத்தது மிதமான மானியத் தொகைகளும், அற்ப உரிமைகளும்தான். இதில் அடங்கியிருப்பது தார்மிகப் பிரச்னை என்பது உணரப்படவில்லை. இந்திய அரசியல் விவகாரங்கள் எந்த அளவுக்குக் கீழ்த்தரமாகி விட்டன என்பதையே இது காட்டுகிறது. இப்பொழுது நிறைவேற்றும் ராஜீய தீர்மானங்களிலும், நடைபெறும் விவாதங்களிலும் காந்திஜியின் பெயரைக் கொண்டு வந்து கலக்காமல் இருப்பதுதான் தேசப் பிதாவுக்கு நாம் குறைந்தபட்சமாகச் செய்யக் கூடிய மரியாதை.''

★

தஞ்சாவூர் நிருபர் அனுப்பிய செய்தி ஒன்றை ''ஹிந்து'' பிரசுரித்திருக்கிறது. இது ஓர் எச்சரிக்கை போன்றது. இதைக் கவனிக்காமல், நடப்பது நடக்கட்டும் என்று மாநில அரசுகள் விட்டுவிடலாகாது. நமது அரசியல் சாஸனமும், ஜனநாயகமும் அழிபடலாகாது என்று உறுதியாக நம்பும் மாநில அரசுகள் இனியும் சும்மா இருந்தால் அது படுமோசமான திறமைக் குறைவையே காட்டும்.

தஞ்சை நிருபரின் செய்தி:

'' தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள் மாணவர்களுக்கு மூன்று நாள் கல்விப் பயிற்சி அளித்தார்கள். தஞ்சாவூர் அருகில் உள்ள கணபதி நகரத்தில் இப்பொழுதுதான் அது முடிவடைந்தது. நூறு மாணவர்கள் அதற்கு வந்திருந்தனர். தமிழ்நாடு சட்டசபையைச் சேர்ந்த பிரதான இடதுசாரிக் கம்யூனிஸ்ட் அங்கத்தினர்களும், பிறரும் அதில் பேசினர். கம்யூனிஸ்டு சித்தாந்தத்தில் மாணவர்களுக்குப் பயிற்சி தருவதுதான் இந்த ஏற்பாட்டின் நோக்கம். கம்யூனிஸப் பிரசாரத்தை ஜில்லாவின் மூலை முடுக்குகளில் எல்லாம் எவ்வாறு பரப்புவது என்று அங்கு பயிற்சி அளித்தார்கள்.

## வருந்துகிறோம்

வீணை வித்வான் சேர்மாதேவி ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகளின் மறைவில் ஒரு பழம் பெரும் வித்வானை இழந்து விட்டோம். ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் குடும்பத்தைச் சேர்ந்த ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதரின் மகிமையை இசையுலகு அறியும். அவரிடம் தமது குழந்தைப் பருவத்திலிருந்து சங்கீத அப்பியாசம் பெற்றவர் சேர்மாதேவி ஸ்ரீ சுப்ரமணியசாஸ்திரிகள். பின்னர் சுப்பராம தீக்ஷிதரின் குமாரராகிய ஸ்ரீ அம்பி தீக்ஷிதரிடமும், மைசூர் மகா வித்வான் சேஷண்ணாவிடமும் பயிற்சி பெற்றார். சிறந்த வித்வானாகி எட்டையபுரம், திருவிதாங்கூர் முதலிய சமஸ்தானங்களில் பாராட்டப் பெற்றார். நிறைந்த சாஸ்திர ஞானம் பெற்றவர் ஸ்ரீ சாஸ்திரிகள். சென்னை மியூஸிக் அகாதெமியாலும், தில்லி சங்கீத நாடக அகாதெமியாலும் கௌரவிக்கப்பட்டார்.

''தமிழ்நாட்டில் நடைபெற்றுள்ள இரண்டாவது கம்யூனிஸ்டு கல்வி முகாம் இது. முந்தைய முகாம் கன்யாகுமரியில் நடைபெற்றது. வேறு மாவட்டங்களிலும் இத்தகைய பயிற்சி முகாம்கள் நடைபெறும் என்று கூறப்படுகிறது.''

★

பிரிட்டிஷ் பாணியில் அமைந்த நீதி முறையை மாற்றி ருஷிய பாணிக்குத் திரும்ப வேண்டும் என்கிறார் மேற்கு வங்க கவர்னர் ஸ்ரீ தவான். ருஷியாவில் சுதந்திர நீதி பரிபாலன அமைப்பு என்பது ஐஸ்லாந்தில் பாம்புகளைப் பற்றி வழங்கும் ஒரு கதை போன்றதே.

கதை வருமாறு: ஐஸ்லாந்தைப்பற்றிய ஒரு புத்தகத்தின் பொருளடக்கத்தில் பாம்புகளைப் பற்றி ஓர் அத்தியாயம் குறிப்பிடப்பட்டிருந்தது. குறிப்பிட்ட பக்கத்தைப் புரட்டிப் பார்த்தால் அதில் ஒரே ஒரு வரிதான் காணப்பட்டது. ''ஐஸ்லாந்தில் பாம்புகளே இடையாது'' என்பதுதான் அதன் வாசகம்.

★

உணவு தானிய உற்பத்தியின் மீது வரி விதித்து நிதி திரட்டுவதை விட, உணவு தானிய உற்பத்திக்கு அதிக முக்கியத்துவம் தரவேண்டும். விவசாயத்துக்கு வரி விதிப்பது அறிவுக்கு உகந்ததல்ல; நீதிக்கும் உகந்ததல்ல. முற்காலங்களில் வேறு இனங்களில் வரி வருமானம் மிகக் குறைவாக இருந்தபோது நில வரி முக்கியமாக இருந்தது. ஆனால் இன்று விவசாய வரியை எளிதில் ரத்து செய்துவிடலாம். அதற்குப் பதில் உணவு உற்பத்தியைப் பெருக்க ஊக்கம் அளிக்க வேண்டும்.

இந்தியாவில் விவசாயம் என்பது தேசிய வாழ்வில் கட்டுக்கோப்பாகக் கரைந்துவிட்ட ஓர் அம்சம். இதில் தற்போது சீர்திருத்தம் செய்ய வேண்டியது அவசியமே. ஆனால் இச்சீர்திருத்தம் தேசப் பண்புக்கு ஒவ்விய முறையில் அமைய வேண்டும். இப்போது 'சீர்திருத்த' ரீதியில், சிமெண்டினால் கோயில் கட்டி, அதில் மின்சார பல்புகள் போட்டு, நெருப்புப் பெட்டி பாணியில் ஜன்னல்கள் வைத்து, அசங்கியமாகப் போலீஸ் தொப்பி போல் கோபுரங்கள் அமைப்பது மாதிரி, தேசப் பண்புக்கு இசையாத சீர்திருத்தங்களைச் செய்யலாகாது. விவசாய முறை அக்பர் காலத்துக்கும் முன்னாலிருந்து வந்துள்ளது. அதில் அவசியமான மாறுதல்களைச் செய்து மகாராஷ்டிரர் காலத்திலும், பிரிட்டிஷ் காலத்திலும் அதே அடிப்படை பின்பற்றப்பட்டது. அதை அடியோடு மாற்றுவது அறிவின்மை.

விவசாயத்துக்கு முதலீடு செய்து உற்பத்தியைப் பெருக்க உதவுவோர்களும், வரி கொடுப்பவர்களுமான உடைமையாளர் — உழவை நிர்வகித்து, ஆட்களிடம் பருவத்துக்கேற்ப வேலை வாங்கும் சாகுபடியாளர் — தொழிலகங்களின் மனப்பான்மைக்கு மாறாக, நிலத்தில் 'தங்களுடையது' என்ற சொந்த உணர்வுடன் உழைக்கும் பண்ணையாட்கள் — இம்மூவரும் ஒருமித்துக் கட்டுக்கோப்பாக விவசாய முறையை உருவாக்குகின்றனர். இப்படிப்பட்ட அமைப்பில் வகுப்புப் பூசல் என்ற விஷத்தை உட்செலுத்தவே கூடாது. இவ்விஷத்தை ஊட்டுவதால் யாருக்கும் நன்மை இல்லை; மாறாக அனைவரையும் இது பாதிக்கும். சொந்த நலனில் அக்கறை கொண்ட அரசியல்வாதிகளுக்கு மக்களை ஏமாற்றி மயக்குவது எளிதாக உள்ளது. திருத்த முடியாத நிலையில் விஷமத்தை உணருவதால் பயனில்லை.

# வாழ்த்தி வழியனுப்புகிறோம்!

ரஷ்யாவில் லெனின் கிராடு நகரத்தில் ஜூலை 7ம் தேதி முதல் 12ம் தேதி வரை நடக்கவிருக்கும் ''சர்வதேச இணைப்பு'' மகாநாட்டில் கலந்து கொள்ளச் சென்னை நகர மேயர் திரு பாலசுந்தரம் தலைமையில் நகரசபை உறுப்பினர் ஐவர் கொண்ட குழு ஜூலை 1ம்தேதி ரஷ்யா செல்லுகிறது. மத்திய குழு சார்பில் திரு பாஸ்கரன், தி. மு. கழகம் சார்பில் திரு பவளவண்ணன், சிண்டிகேட் காங்கிரஸ் சார்பில் ஸ்ரீ குருவிட்டல், சுதந்திரா கட்சி சார்பில் ராஜாஜியின் குமாரரும் நகரசபை அங்கத்தினருமான திரு வி. ஆர். நரசிம்மன், நகரசபை கமிஷனர் திரு ஷெட்டி ஆகியோர் செல்கின்றனர். ரஷ்யா செல்லும் இக்குழுவினர் ஐரோப்பாவில் சில நாடுகளுக்கும் இங்கிலாந்துக்கும் சென்றுவரத் திட்டமிட்டிருக்கின்றனர். இக் குழுவினருக்குச் சென்ற வெள்ளிக்கிழமை 19ம் தேதி மாலை கல்கி அலுவலகத்தில் ஒரு தேநீர் விருந்து அளிக்கப்பட்டது.

இவ் வுபசாரத்துக்குப் பழைய மேயர் திரு முனுசாமி அவர்களும் வந்திருந்து சிறப்பித்தார். படத்தில் ரஷ்யா செல்லும் குழுவினரைக் காணலாம்.



# . உருது .




ஜஹாங்கிர் ஆர்ட் காலரியில் இன்று கூட்டம் அதிகமாக இருந்தது. ஓவியன் கதிரின் ஓவியங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. பல வருடங்கள் வரை ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும், தென்மேற்கு ஆசியாவிலும் சுற்றுப் பயணம் செய்த பிறகு கதிர் இப்போதுதான் இந்தியாவுக்குத் திரும்பி வந்திருந்தான். அந்நாடுகளில் அவனுக்குப் பெரும் புகழும் பாராட்டும் கிடைத்தன. அவன் தீட்டிய ஓவியங்கள் நியூயார்க்—லண்டன் — பாரிஸ் — பெர்லின் — மாஸ்கோ ஆகிய நகரங்களில் ஆர்ட் காலரிகளை அலங்கரித்தன. அவன் ஹாலிவுட்டில் மர்லின் மன்றோவின் படம் ஒன்றை அவள் இறப்பதற்குச் சில வாரங்களுக்கு முன்புதான் வரைந்தான். ரோமில் புதிய போப் பதவி ஏற்பு விழாவில் விசேஷ அனுமதி பெற்றுப் புதிய போப்பின் — கிறிஸ்துவ மதத்தின் மிகப் பெரிய ஆத்மீகத் தலைவரின் — படத்தைத் தீட்டி யிருந்தான். அவனுடைய புகழைக் கண்டு பொறாமைப் பட்டவர்களோ அவனுடைய மிகப் புதுமையான ஓவியக் கலையைத் தாக்கினார்கள். அவனுடைய படங்களில் தலைப்புகள் ஒட்டப்படா விட்டால் எந்தப் படம் மர்லின் மன்றோவினுடையது; அவற்றில் எது போப்பாண்டவரின் படம் என்பதைக் கண்டுபிடிக்க முடியாது என்றும் கேலியாகப் பேசினார்கள்.

ஆனால் கதிரோ, பத்திரிகையாளர் ஒருவருக்குப் பேட்டி கொடுக்கும்போது, ''கலை கணித சாஸ்திரமன்று; அது அல்ஜிப்ரா வின் சூத்திரங்களும் அல்ல; ஜியோமிதியின்

கோணங்களும் அல்ல. அதைக் குறிப்பிட்ட சில அளவுகளைக் கொண்டு கணக்கிட முடியாது. மேலும் ஓவியன் புகைப்படக்காரனாகவும் இருக்க முடியாது. ஜப்பான் மொழியை அறியாதவர்கள் ஜப்பானிய இலக்கியத்தைப் பற்றி விமரிசனம் செய்ய முடியாது. இதைப் போலவே ஓவியக் கலையின் வரலாற்றையும் அதன் நுணுக்கங்களையும் அறியாதவர்கள் ஓவியக் கலையைப் பற்றிப் பேசாமலிருப்பதே நல்லது'' என்றான். பேட்டி கலையுலக வட்டாரங்களில் பெரும் பரபரப்பை உண்டாக்கி விட்டது. பலர் அவனை வேஷக்காரனாகவும் சுய விளம்பரக்காரனாகவும் தன்னைத் தானே மேதை என்று நினைத்துக் கொண்ட மூடன் என்றும் தாக்கினார்கள். ஆனால் வேறு சிலர் அவனுடைய எண்ணங்களை ஏற்றுக் கொண்டனர். கலையுலகில் அவனைத் தங்களது ஆசிரியனாகவும் வழிகாட்டியாகவும் கொண்டாடத் தயாரானார்கள்.

எத்தனை வாய்களோ அத்தனை பேச்சுகள். அதுவும் ஆர்ட் காலரியின் கதவுகள் எல்லாருக்காகவும் திறந்து விட்ட சமயத்தில் பேச்சுக்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? பருத்திச் சூதாட்ட மார்க்கெட்டிலிருந்து நேராக அங்கு வந்த ஒரு கறுப்புத் தொப்பிக்காரன் ஓர் ஓவியத்தைக் கூர்மையாக நோக்கியவாறு, தனது நண்பனிடம் கூறினான்: ''ரோஜா நிற ஆடு! என்ன, ரோஜா நிறமுள்ள ஆடு உலகில் எங்கிருக்கிறதாம்?''

''விலையைப் பாரேன்.'' சூதாட்டக்காரன் முகத்தைச் சுளித்தான். ''முந்நூற்றைம்பது ரூபாயாம். ஐம்பது, அறுபது ரூபாய்களில் உண்மையான ஆட்டையே விலைக்கு வாங்கி விடலாமே!''

தடிப்பான கண்ணாடி அணிந்திருந்த நீண்ட மூக்குக்காரன்

# நிழல்

## கே. ஏ. அப்பாஸ்

> பிரசித்தி பெற்ற உருது எழுத்தாளரான க்வாஜா அஹமத் அப்பாஸ் பானிபத்தில் 7-6-1914ம் ஆண்டு பிறந்தவர். அலிகட் முஸ்லிம் சர்வகலாசாலையில் கல்வி பயின்றவர். ஆங்கிலத்திலும் உருதுவிலுமாக இருபத்தைந்து புத்தகங்களுக்குமேல் எழுதியுள்ள அப்பாஸ் திரைப்படத் துறையிலும் பெரும் புகழ் ஈட்டியவர். ஆழ்ந்த கருத்துக்களை அழகாக எடுத்துரைப்பதில் மிக்க வல்லவர். 'பிளிட்ஸ்' பத்திரிகையின் கடைசிப் பக்கம் இவரது பேனாவின் வலிமைக்கு ஒரு சான்று.
>
> பிரசித்திபெற்ற ஓவியன், உலகத்தின் எந்த நாட்டுக்கு ஓடினாலும் அவன் உள்ளத்தில் புகுந்தவள், அவனை எப்படி நிழலாகத் தொடர்கிறாள் என்பதைப் படிக்கும் பொழுது நிழலின் பெருமையை உணர்வீர்கள்.



''ஓவியனின் சிந்தனையில் ஆடு ரோஜா நிறங்கொண்டதாகவும் இருக்கலாம் — எத்தனை பெக்குகள் உள்ளே தள்ளிய பிறகு ஓவியன் படத்தை வரைகிறான் என்பது தான் முக்கியம்'' என்று அந்நண்பனும் பல்லவிபாடினான்.

**அட்டைப்படக் கதை**

ஒருவன் அவர்களுடைய பேச்சில் குறுக்கிட்டான்: "ஆனால் உண்மையான ஆடு ஒரு நாள் செத்துப் போகும்; அல்லது கசாப்புக்காரனின் கத்திக்கு இரையாகி விடலாம். இந்த ரோஜா நிற ஆடு—குழந்தைப் பருவத்தின் சுதந்திரம், கவலையின்மையின் அடையாளமான இந்த ஆடு — எப்போதும் இந்தப் படத்தில் இருப்பதுபோல் ஓடியாடி மகிழும்!"

இன்னொரு படத்துக்கு முன்னால் நின்றுகொண்டிருந்த மக்கள் அமைதியான அதன் உட்கருத்தை அறிய முயன்றார்கள். அந்தப் படத்துக்கு "ஆலயமணிகளின் ஓசை" என்ற தலைப்புக் கொடுக்கப்பட்டிருந்தது.

"சரி, மணிகள் எங்கு இருக்கின்றன? எனக்கு ஒரு மணியும் தென்படவில்லையே?" என்று கேட்டான் ஓர் இளைஞன்.

நீண்ட முடியோடு நின்றிருந்த ஒருவர், அவனுக்கு விளக்கிச் சொன்னார்: "இது ஆலய மணிகளின் படம் அல்ல. மணிகளின் ஓசையாம்!" — பிறகு அவர் படத்தைச் சுட்டிக் காட்டியவாறு தமது பேச்சைத் தொடர்ந்தார்: "இதைப் பாரும். படத்தில் வண்ணங்களின் வட்டங்கள் நடுப் புள்ளியிலிருந்து வெளிநோக்கிச் செல்கின்றன. மணி ஓசையின் அலைகள் பரந்து செல்வது போல் — ஆனால் இந்த வட்டங்கள் தனித் தனியாகவும் முறையாகவும் இல்லை. ஒவ்வொன்றும் மற்றவைகளுடன் இணைந்துள்ளன; மணியோசையுடன் அதன் எதிரொலிகளும் இருப்பது போல் — இப்போது வண்ணங்களைக் கவனிப்போம். இந்தப் பித்தளை போன்ற நிறத்தை......"

ஓவியக்காட்சி சாலையில் ஒரு பெரிய படத்துக்கு முன்னால் கூட்டம் அதிகமாகக் கூடியிருந்தது. ஆள் உயரமுள்ள அந்தப் படத்தின் மீது, "இது விற்பனைக்குரியது அல்ல" என்று சீட்டு ஒட்டப்பட்டு இருந்தது. 'அலங்காரம்' என்ற தலைப்பு அதற்குக் கொடுக்கப்பட்டிருந்தது.

கதிரின் இதர படங்கள், ஓவியக் கலையின் புதிய ஐரோப்பிய முறையில் தீட்டப்பட்டவை. ஆனால் இந்த ஓவியமோ இந்தியாவின் பழங்காலப் பாணியில் எழுதப்பட்டிருந்தது. நான்குபுறங்களிலும் சிதறிக் கிடந்த அருவருப்பான படங்களுக்கு மத்தியில் இது கம்பீரமாகக் காட்சி தந்தது — டுவிஸ்ட், ஜாஸ் கூச்சல்களுக்கு மத்தியில் யாரோ புல்லாங்குழலின் மீது இனிமையான பைரவி ராகத்தை இசைப்பது போன்றதோர் உணர்ச்சியை அது உண்டாக்கியது. ஒல்லியான — நளினமான மஞ்சள்நிற ரோஜாவைப் போன்ற பெண் ஒருத்தி தும்பைப்பூ போன்ற வெள்ளைச் சேலையணிந்து தோள் மீது மஞ்சள் நிறத் துவாலையுடன் குளித்த ஈரம் மேனியில் மறையாமல் வந்து நிற்கிறாள்! அவளுடைய நீண்ட கருநிறக் கூந்தலில் நீர்த்துளிகள் முத்துப் போல் ஒட்டிக் கொண்டிருக்கின்றன. இறுக்கமான சோளிக்குள்ளிருக்கும் நிறைந்த உடல் நன்கு காட்சி தந்தது. சோளிக்கும் புடவைக்கும் நடுவில் அவளுடைய இடை நிர்வாணமாக இருந்தது. மெல்லிய சேலை வழியே அவளுடைய நீண்ட அழகான கால்கள் வெளியே தெரியவில்லை என்றாலும் அதை உய்த்துணர முடிந்தது... பொன்னிறமான முகத்தின் மீது நனைந்த மயிரிழைகள் சிதறிக் கிடந்தன. அவற்றை அவள் சீப்பால் சீவி விடுவதற்காகக் கண்ணாடியில் பார்க்கிறாள். ஆனால் தனது அழகைத் தானே ரசித்தவாறு சிலையாகி விடுகிறாள். அவளுடைய உதடுகளில் மெல்லிய புன்னகை தவழ்ந்தோடுகிறது — இந்த அழகான விநாடி இப்போது அழியா ஓவியமாக மாறி விட்டது; ஒருவர் ஒரு நினைவைத் தனது இதயத்தில் நிரந்தரமாய்ப் பத்திரப்படுத்திக் கொள்வது போல்!

"இது உண்மைதான்!" எட்டத்தில் மூலையில் நின்றவாறு தனது ஓவியத்தைப் பார்த்துக் கொண்டிருந்த கதிர் எண்ணினான். "மீனாட்சிக்குத் தெரியாது. நிரந்தரமாக அவளை நான் இந்த ஓவியத்திலும், எனது இதயத்திலும் சிறையிட்டு வைத்துள்ளேன் என்பது மீனாட்சிக்குத் தெரியாது."

தனது ஓவியக் காட்சியின் போது, எப்போதுமே கதிர் ஒரு மூலையில் நின்றவாறு, தனது படங்களைப் பற்றி, தன்னைப் பற்றி, தனது கலையைப் பற்றி மக்கள் என்ன பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்பதைக் கேட்டுக்கொண்டிருப்பான். மக்களின் உண்மையான கருத்துக்களை இவ்வாறு அவனால் அறிய முடிந்தது. பத்திரிகைகளின் விமர்சகர்கள் எழுதும் நீண்ட கட்டுரைகளில் இக்கருத்துக்களை அவனால் அறிந்துகொள்ள முடியவில்லை.

'அலங்கார'த்தைப் பார்த்த ஒரு மாணவன் தன்னையறியாமல், "எவ்வளவு அழகான பெண் இவள்!" என்று பாராட்டினான். "ஓவியரிடமிருந்து முகவரியைக் கேட்டறிந்து இந்த மாடலைச் சந்திக்க வேண்டும்!"

"இத்தகைய சிறப்பு ஒரு மாடலில் எப்படி இருக்க முடியும்?" என்று இன்னொருவன் கூறினான்: "இவள் கதிரின் காதலியாக இருக்க வேண்டும்!"

தொலைவில் நின்றிருந்த கதிர் இந்தப் பேச்சைக் கேட்டுப் புன்னகை செய்தான். "மீனாட்சி இதைக் கேட்டால் சினங்கொள்வாளே!" என்று எண்ணினான்.

இப்போது அந்த இளைஞன், படத்தைக் கூர்ந்து கவனித்தவாறு, "ஒரு விஷயம் மட்டும் புரியவில்லை — எல்லாப் படங்களும் நவீன பாணிக் கலைச் சிருஷ்டிகளாக இருக்கும் போது இந்தப் படம் மட்டும் பழைய பாணியில் இருப்பானேன்?" என்று கேட்டான்.

"இது மிகப் பழைய படமாக இருக்கலாம். கதிரின் இளமைக் காலத்துச் சிருஷ்டியாக இருக்கலாம். அவன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது முதிர்ச்சி பெறாமல் இருந்திருக்கலாம்" என்று அவனுடைய நண்பன் பதிலுரைத்தான். "இந்தப் படத்தில் கலைச் சிறப்பு ஏதும் இல்லை. ரவிவர்மாவின் காலண்டர் படங்களைப் போன்றதொரு சாதாரணமான படமாகும்."

"ஆனால் இந்தப் படத்துக்கு முன்னால் இவ்வளவு கூட்டம் கூடுவானேன்? ஒவ்வோர் இதயமும் இதைப் பார்க்கத் துடிப்பானேன்?"

"இவள் அவ்வளவு அழகியாக இருப்பதே அதற்குக் காரணமாகும்."

"அது போதுமான காரணம் அல்ல, நண்பரே! ஓவியன் மிகவும் மனம் ஈடுபட்டு

இதைத் தீட்டி யிருக்கிறான். அவன் இவளை உண்மையாகவே காதலித்திருக்க வேண்டும்!''

''இப்போது ஒவ்வொருவனும் இந்தப் படத்தில், தனது காதலியை, தான் காதலித்த காலத்தைக் காணுகிறான் !''

'' இதுதான் கலையின் வெற்றியாகும். ஓவியன் தனது உணர்ச்சியைப் பார்வையாளர்களின் இதயங்களில் உண்டாக்கி விட்டால், அதுவே அவனது வெற்றியாகி விடுகிறது!''

''இந்தப் படத்தை அதிகமாகவே பார்த்து விட்டோம்; வாருங்கள், உங்களுக்கு மிகச் சிறந்த படத்தைக் காட்டுகிறேன். ஆலயமணிகளின் ஓசை....''

ஆலயமணிகளின் ஓசை....

மணிகளின் ஓசை...

கதிரின் நினைவுகளிலும் மணிகள் அடித்தன. ஆலய மணிகள்... அவற்றில் ஒளிகள் சிவப்பு, மஞ்சள், நீல நிற வட்டங்களாகச் சுற்றி வந்தன.

கதிர் சிறுவனாக இருந்தபோது எப்பொழுதாவது ஒரு வேளை கோயிலுக்குச் சென்றிருக்கக்கூடும். ஆனால் அவனது அடிமனையில் ஆலயமணிகளின் ஓசை அமுங்கிக் கிடந்திருக்கிறது.

இந்தக் கோயில் மீனாட்சியின் வீட்டுக்கு அருகில் இருந்தது.

அவன் ஓவியப் பள்ளியில் ஏழை மாணவனாக இருந்தான். வரை கலையின் ஒவ்வு நேர ஆசிரியனாகப் பணியாற்றிக் கல்லூரிச் சம்பளத்தைக் கட்டினான். மீனாட்சியோ ஒரு செல்வந்தரின் மகளாக இருந்தாள்!

ஒவ்வொரு நாளும் மாலை நேரத்தில் மீனாட்சிக்குப் படம் வரையும் கலையைப் போதிக்கச் சென்றபோது, அந்தக் கோயிலில் பூசை மணி அடிக்கும். பகல் முழுவதும் அவன் அந்த நேரத்துக்காகக் காத்துக் கிடப்பான்— ஒருவேளை மீனாட்சியும் அந்த நேரத்தை எதிர்நோக்கியவாறு பகல் முழுவதையும் கழித்து இருக்கலாம்.

வெளியே ஆலய மணியோசை முழங்கும் போது, அவன் வீட்டுக்குள் நுழைவான். மீனாட்சியும் தனது புடவைத் தலைப்பைச் சரிப்படுத்தியவாறு வரைபடப் புத்தகத்துடன் ஓடி வருவாள். ''என்ன மீனாட்சி, படத்தை வரைந்து விட்டாயா?'' என்று அவன் கேட்பான். ''ஆமாம், சார், முடித்துவிட்டேன். ஆனால் தங்களுக்குக் காட்ட மாட்டேன். முதலில் என்னுடைய சாக்லெட்டை எடுங்கள்'' என்பாள். அவன் சிரித்தவாறு தனது பையிலிருந்து சாக்லெட்டை எடுத்து நீட்டுவான் : ''இதோ உன்னுடைய சாக்லெட். ஆனால் குறைவாகவே சாப்பிடு, இல்லாவிட்டால், பருத்து விடுவாய்!'' இதைக் கேட்டு அவளும் சிரித்து விடுவாள். சாக்லெட்டின் மேல் உறையை நீக்கியவாறு சிரிப்பாள் — கதிர் அவளுக்குப் படம் வரையும் கலையைச் சொல்லிக் கொடுப்பான். காகிதத்தின்மீது படங்கள் உருவாகும். மீனாட்சி சாக்லெட் சாப்பிடுவதில் மூழ்ந்து விடுவாள்.

பிறகு கோயிலில் பூசை முடிந்துவிடும். போதனைக்குரிய ஒரு மணி நேரம் முடிந்து விட்டது என்பதை அவர்கள் உணருவார்கள். இப்போது மீனாட்சியின் அன்னையார் அவனைச் சாப்பிட வருமாறு குரல் கொடுப்பார். மணிகளின் ஓசை அடங்கியவுடன் அமைதி நிலவும். இந்த நிசப்தத்தில் யாராவது தனது இதயத் துடிப்புக்களைக் கேட்டு விடுவார்களோ என்று கதிர் பயப்படுவான்; எனவே, அவன் எழுந்து நின்று, ''மீனாட்சி, நான் நாளைக்கு வருவேன். நீ இந்தப் படத்தை முடித்துவிடு'' என்பான். ''ஆசிரியரே! எனக்குச் சாக்லெட் கொண்டு வர மறந்து விடாதீர்கள்'' என்று அவளும் கூறுவாள்.

அன்றுமாலையில் அவன் கடைசிமுறையாக மீனாட்சியைப் பார்க்கச் சென்று கொண்டிருந்தான். பத்து நாட்களும் பத்து இரவுகளும் கண் விழித்து அவன் 'அலங்கார'த்தை உருவாக்கி யிருந்தான். ''மீனாட்சி ! இன்று நான் உனக்கு ஓவியம் ஒன்றைக் காட்டப் போகிறேன்'' என்று அவன் சொல்லத் துடித்தான். ஒரு முறை இந்தப் படத்தைப் பார்த்து விட்டால் அவளுக்குத் தனது காதலைப் பற்றித் தெரிந்துவிடும் என்று நினைத்தான். 'என்னை எத்தனை ஆழமாக விரும்புகிறார் இவர்' என்பதை அவள் உணருவாள் என்ற எண்ணம் இருந்தது. ஏனெனில், இந்தப் படத்தில் அவனுடைய கலைத் திறன் இருந்தது. அது மட்டுமின்றி அவனுடைய காதலும் இருந்தது. அவன் தனது காதலை இதுவரை வெளிப்படுத்தவில்லை. இந்தப் படமே தனது காதலின் பிரகடனமாக அமையும் என்று நினைத்தான் அவன். ஆனால் இந்தப் படத்தை மீனாட்சிக்குக் காட்டும் சந்தர்ப்பம் அவனுக்குக் கிடைக்கவில்லை.

மீனாட்சியின் வீட்டுக்குச் சென்றபோது அவனுக்குத் தாடி வளர்ந்திருந்தது. பத்து இரவுகள் கண் விழித்ததால் கண்கள் சிவப்பேறியிருந்தன.

''கதிர், உனக்கு என்ன ஆச்சப்பா ?'' மீனாட்சியின் தந்தை அன்புடன் விசாரித்தார். ''உடல்நலமில்லையா? இத்தனை நாட்களாக வரவில்லையே !''

''நான் நன்றாக இருக்கிறேன். ஒரு வேலையில் ஈடுபட்டிருந்தேன். மீனாட்சி எங்கு இருக்கிறாள்? இன்று பிராக்டிஸ் செய்ய வருகிறாள் இல்லையா ?''

''இல்லை, கதிர் ! படிக்க வேண்டிய காலம் முடிந்து விட்டது.'' மீனாட்சியின் அன்னை ஒரு மிட்டாய்த் தட்டை அவனிடம் நீட்டினார். ''மிட்டாய் சாப்பிடு. இன்று மீனாட்சிக்கு நிச்சயதார்த்தம் முடிந்துவிட்டது..... பையன் — ''

திடீரென்று ஆலயமணிகள் அவனுடைய செவிகளில் பலமாக ஒலித்தன. அவனால் மேற்கொண்டு எதையும் கேட்க முடியவில்லை. பையன் யார்? என்ன செய்கிறான்? திருமணம் எப்போது என்பன போன்ற எல்லா விவரங்களையும் மீனாட்சியின் தாயார் விளக்கினார் என்றாலும், கதிரின் செவிகளில் ஆலய மணிகளின் ஓசை மட்டுமே ரீங்காரமிட்டது.

பிறகு கடைசி முறையாக மீனாட்சியைச் சந்தித்தபோது வழக்கம் போலவே அவளும் கேட்டாள்: ''எனக்குச் சாக்லெட் கொண்டு வரவில்லையா, மாஸ்டர்ஜி?''

அவன் தனது பையிலிருந்து சாக்லெட்டை எடுத்துக் கொடுத்தான். வழக்கம் போலவே, ''இதோ உனது சாக்லெட்; ஆனால் குறைவாகவே சாப்பிடு. இல்லா விட்டால் பருத்து விடுவாய்'' என்று சொன்னான். ஆனால் இப்படிச் சொன்ன போது இன்று அவனுடைய உதடுகளில் புன்னகை இருக்கவில்லை.

அன்று கடைசிமுறையாக அவன் மீனாட்சியின் வீட்டை விட்டு வெளியே வந்த போது இன்னும் பூசை நடந்து கொண்டிருந்தது. ஆலயமணிகள் ஒலித்துக் கொண்டிருந்தன.

அந்த நாள் முதல் அவனது செவிகளில் எப்போதும் மணியோசை ரீங்காரமிட்டவண்ணம் இருக்கிறது. அவன் லக்னோவை விட்டுத் தில்லிக்கு வந்து விட்டான்; ஆனால் மணிகள் அவன் காதுகளில் ஒலித்து முழங்கின. ராய் பகதூர் மாதா பிரசாத்தின் அன்புச் செல்வியான செள. மீனாட்சி, கான்பூரைச் சார்ந்த துணை மாஜிஸ்திரேட் லட்சுமிகாந்த் ஐ.சி. எஸ்.ஸுக்கு மணம் முடிக்கப்பட்டாள் என்ற செய்தியை அவன் பத்திரிகைகளில் படித்தறிந்தான்.

தில்லியிலிருந்து அவன் பம்பாய்க்கு வந்து விட்டான். பல ஆண்டுகள்வரை பழம் பெரும் ஓவியங்கள் — சிற்பங்கள் ஆகியவற்றைத் தேடி அஜந்தா — எல்லோரா குகைகளில் சுற்றியலைந்தான். அங்கும் அந்த மணிகள் அவனது செவிகளில் ஒலித்துக் கொண்டிருந்தன!

ஐரோப்பாவில் 'போர்' ஆரம்பமாயிற்று. வங்காளத்தில் பஞ்சமும் தலைவிரித்து ஆடியது. பிறகு இந்தியாவும் விடுதலை அடைந்தது — கதிர் பம்பாயிலிருந்து உதவிப் பணம் பெற்றுப் பாரீசுக்குப் போய் விட்டான். அங்கு பல வருடங்கள் தங்கி யிருந்தான். அங்கும் அவனது செவிகளில் ஆலய மணிகளின் ஓசை முழங்கிக் கொண்டே இருந்தது.

ஒரு முறை இந்தியாவுக்கு வந்தான். பம்பாயில் தங்கி யிருந்த சமயம், லட்சுமிகாந்தன் ஏதோ பதவி உயர்வு பெற்றதாகப் பத்திரிகையில் வந்த செய்தியைப் படித்தான். ஒரு நாள் நண்பர் ஒருவர் அவனை விருந்துக்கும் அழைத்தார்: ''ஸ்ரீமதி லட்சுமிகாந்தனும், ஸ்ரீ லட்சுமிகாந்தனும் விருந்தில் கலந்து கொள்வார்கள். அவர்களும் உங்கள் மாவட்டத்தைச் சார்ந்தவர்களே. அவர்களைச் சந்தித்து நீங்கள் மகிழ்ச்சி அடைவீர்கள்'' என்றார் அந்த நண்பர்.

இம்முறை ஆலயமணிகள் பலமான ஓசையை எழுப்பின. கதிர் தனது செவிகள் செவிடாகி விடுமோ என்று அஞ்சினான். தனக்கு உடல்நலமில்லை என்று சொல்லித் தப்பித்து விட்டான் — அடுத்த வாரத்திலேயே இங்கிலாந்துக்கும் சென்று விட்டான்.

மீனாட்சியை மறந்து விடுவதற்காக வேறு ஒருத்தியைக் காதலித்தால் என்ன என்று அவன் நினைத்தான். இப்போது அவனிடம் பணம் இருந்தது. கலையுலகில் பெரும் புகழும் கிடைத்திருந்தன. பல அழகான பெண்களின் அறிமுகம் இருந்தது. அவர்களுள் ஒருத்தியை அவன் தேர்ந்தெடுத்தான். 'மேரி மார்ஷான்' என்ற அந்த அழகான பிரெஞ்சு யுவதி ஆங்கிலம் படிப்பதற்காக லண்டனுக்கு வந்திருந்தாள். ஒரு நாள் கதிர் அவளைத் தனது கலைக் கூடத்துக்கு அழைத்துச் சென்றான். மேரி அங்கிருந்த படங்களைப் பார்த்துவிட்டு, ''இவை நவீன ஐரோப்பிய பாணியில் எழுதப்பட்டவை; இந்தியாவின் சிறந்த பழங்கால முறையில் ஏதும் தீட்டவில்லையா?'' என்று கேட்டாள்.

''பல படங்கள் எழுதினேன். ஆனால் எல்லாம் வீணானவை என்று நினைத்து இந்தியாவிலேயே விட்டு வந்தேன்; ஆனால் அந்தக் காலத்தில் எழுதிய ஒரே ஒரு படம் இருக்கிறது'' என்று சொல்லி அவன் மேரிக்கு 'அலங்கார'த்தைக் காட்டினான்.

மேரி வெகு நேரம் வரை அமைதியாகவும் விருப்பத்துடனும் அந்தப் படத்தைப் பார்த்தாள். பிறகு ஏதும் பேசாமலேயே எழுந்து சென்று அன்றிரவு அவள் கதிருக்கு ஒரு கடிதமும் எழுதினாள்: ''நான் அந்த அழகான இந்திய மங்கையின் நினைவுகளை எதிர்க்க முடியாது. நீங்கள் அவளை — அவளை மட்டுமே காதலிக்கிறீர்கள் என்று அந்தப் படம் கூவிக் கூவிச் சொல்கிறது. உங்களால் வேறொருத்தியைக் காதலிக்கவே முடியாது.''

இலண்டனில் அலுப்படைந்த கதிர் நியூயார்க்குக்குச் சென்றான். அங்கும் அவனுக்குப் பலமான வரவேற்புக் கிடைத்தது. விமர்சகர்கள் அவனது கலையைப் பாராட்டினார்கள். அவனுடைய பல படங்கள் நல்ல விலைக்கு விற்கப்பட்டன. கதிருக்குப் பண நெருக்கடி ஏதும் வரவில்லை. ஆனால் மன அமைதி எங்கும் கிடைக்கவில்லை. அவனது செவிகளில் ஆலயமணிகள் முழங்கிக் கொண்டே யிருந்தன. அவன் அந்த ஒலியலைகளைப் பல வண்ண வட்டங்களாக வரைந்தான். இந்தப் படம் கலையுலகில் பெரிய பரபரப்பை உண்டாக்கி விட்டது. 'இந்தப் படம் ஓவியக் கலையின் புதியதொரு திருப்பமே' என்று ஒரு விமர்சகர் எழுதினார்.

பிறகு அவன் அமெரிக்கா முழுவதும் சுற்றினான். கனடாவிலிருந்து மெக்ஸிகோவரை— மெக்ஸிகோவின் கடுமையான வெயிலும், புழுதியும் அவனுக்கு இந்தியாவை நினைவுறுத்தின. அந்நாட்டு ஓவியக் கலையும் அவனைப் பெரிதும் கவர்ந்தது. இரண்டொரு ஆண்டுகள் வரை மெக்ஸிகோவின் வெப்பத்தில் அந்நாட்டின் அழகான மங்கையர்களையும் பயங்கரமான காளைச் சண்டைகளையும் ஓவியங்களாகத் தீட்டினான். அங்கும் சோர்வு ஏற்படவே ஹாலிவுட்டுக்குச் சென்றான். அங்கு புகழ்பெற்ற நடிக நடிகையரைச் சந்தித்தான். மர்லின் மன்றோவைப் பார்த்ததும், ''மிஸ் மன்றோ! நான் உங்கள் படத்தை எழுத விரும்புகிறேன்'' என்றான்.

''நீங்களும் எனது நிர்வாணமான உடலைத் தூக்கிலேற்ற விரும்புகிறீர்களா?'' என்று கேட்டாள் அவள்.

''உங்கள் உடலில் எனக்கு அக்கறையில்லை. நான் உங்களுடைய காயமுற்ற ஆன்மாவைப் படமாக்க விரும்புகிறேன். அந்த ஆன்மா தங்களுடைய மௌனமான கண்களில் கூக்குரலிடுவதாக எனக்குத் தோன்றுகிறது'' என்று பதிலுரைத்தான் அவன்.

வெண்ணிறமான நீண்ட கவுனை அணிந்து, மர்லின்மன்றோ அவனுக்கு முன்னால் உட்கார்ந்

தான். அவளுடைய பொன்னிறக் கேசம் முகத்தைச் சுற்றிலும் தீச்சுவாலைகளைப் போல் ஒரு வட்டத்தை உண்டாக்கியது. அவளுடைய கண்களில் வேதனையும் வெட்கமும் இருந்தன. உலகின் கொடுமைகளை எதிர்த்து அவை குரல் எழுப்புவதாகவே தெரிந்தது. இந்தப் படத்துக்கும் மன்ரோவின் உருவத்துக்கும் இடையே ஒற்றுமை இருக்கவில்லை — "இது மர்லின் மன்ரோவின் படம் அல்ல. ஒரு தேவதையின் படமாகவே தெரிகிறது" என்று பலர் ஆட்சேபித்தார்கள். "ஆம்; சந்தேகமின்றி இது ஒரு தேவதையின் படமேதான். இந்தத் தேவதையை வெறியென்னும் தூக்கிலேற்றி விட்டார்கள்...." என்று பதிலுரைத்தான்.

அந்தத் தேவதை உண்மையாகவே தூக்கில் உயிரை விட்டு விட்டாள். கதிருக்கு அவளுடைய மரணம் அதிர்ச்சியைக் கொடுத்தது. பல நாட்கள் வரை அவன் தனது அறையிலேயே சிறை கிடந்தான். மட்டுமீறிக் குடித்தான். அந்தநிலையிலேயே அவனும் தற்கொலை செய்து கொண்டிருப்பான். ஆனால் அவனைப் பேட்டி காண வந்த ஊர்மிளாதோஷ் அவனைக் காப்பாற்றி விட்டாள்.

லாஸ்ஏஞ்சல்ஸ் நகரின் தினசரிப் பத்திரிகை ஒன்றின் சார்பாக மர்லின் மன்ரோ—கதிர் சந்திப்புக்களைப் பற்றித் தகவல் சேகரிக்க ஊர்மி அங்கு வந்தாள். கதவைத் தட்டிய போது அவளுக்குப் பதில் ஏதும் கிடைக்கவில்லை. (கதிர் தனது அறையிலேயே இருப்பதாக ஹோட்டல் குமாஸ்தா சொல்லியிருந்தான்) அவள் கதவைச் சற்றே தள்ளிப் பார்த்தாள். அது திறந்திருந்தது. ஊர்மி உள்ளே சென்றாள். இந்தியக் கலைஞன் மது மயக்கத்தில் தூங்குவதை அவள் பார்த்தாள். அவனுக்குப் பக்கத்தில் காலியான விஸ்கிப் புட்டிகள் கிடந்தன. தனக்கு மயக்கம் தெளிந்தபோது தனக்குப் பக்கத்தில் வெள்ளை பிராக் அணிந்த அழகான மங்கை ஒருத்தி உட்கார்ந்திருப்பதைக் கதிர் உணர்ந்தான்.

"நீங்கள் யார்?" அவன் பாதி மயக்க நிலையிலேயே கேட்டான். "சொர்க்கத்தின் தேவதையா? அல்லது ஆஸ்பத்திரி நர்சா?"

ஊர்மி புன்முறுவல் பூத்தவாறு "நான் தேவதையும் இல்லை. நர்சும் இல்லை. நானொரு நிருபர்!" என்றாள்.

அன்று முதல் அவர்கள் நண்பர்களாகி விட்டனர். வாழ்வு முழுதும் தேடிய அருமையான தோழி தனக்குக் கிடைத்து விட்டாள் என்று கதிரும் உணர்ந்தான். ஊர்மி அழகாக இருந்தாள். கல்வியறிவு பெற்றவள்; புத்திசாலி; கதிரின் கலையைப் பெரிதும் விரும்பினாள்; கதிரை விரும்பவும் செய்தாள்.

"கதிர்! நீங்கள் சந்தேகமின்றிப் பெரிய ஓவியராக இருக்கலாம். ஆனால் நீங்கள் ஒரு சிறு குழந்தையாகவே இருக்கிறீர்கள். உங்களைக் கவனித்துக் கொள்ள ஒருவர் தேவை" என்று அவள் அடிக்கடி சொல்லுவாள்.

கதிர் அவளது கண்களில் கூர்ந்து நோக்கி "எனக்கு நீ தேவைப்படுகிறாய்" என்றான்.

நீண்டதொரு முத்தம் அவர்களுடைய காதல் முத்திரையாகி விட்டது. இரண்டு உடல்களும் ஒன்றாகி விட்டன. தனது ஆன்மாவின் காயங்களில் யாரோ அன்பென்னும் மருந்தைத் தடவி விட்டார்கள் என்று நினைத்தான் கதிர்.

இந்தக் காதல் எத்தனை வேகமாக வளர்ந்ததோ, அதே வேகத்தில் தணிந்தும் விட்டது.

ஒரு நாள், கதிர் ஊர்மியைத் தனது கலைக்கூடத்தில் இருக்கச் சொல்லிவிட்டு வண்ணங்கள் வாங்கி வர வெளியே கிளம்பிய போது ஊர்மியிடம் கேட்டான்: "அன்பே! உனக்கு ஏதேனும் வேண்டுமானால் கடையிலிருந்து வாங்கி வருகிறேன்."

"எனக்குச் சாக்லெட் கொண்டு வாருங்கள்!"

"சாக்லெட்—!"

"நல்லது மாஸ்டர்ஜி! எனக்குச் சாக்லெட் கொண்டுவர மறந்து விடாதீர்கள்!"

அவனது செவிகளில் மீண்டுமொரு முறை ஆலய மணிகள் ஒலித்தன. ஊர்மி என்ன சொல்லுகிறாள் என்பதே கேட்கவில்லை.

"டார்லிங், கதிர் டார்லிங், உங்களுக்கு என்ன வந்து விட்டது? உடம்பு சரியாக இருக்கிறதா?" ஊர்மி பதறினாள்.

"நான் நன்றாக இருக்கிறேன் ஊர்மி!" அவனும் பதில் கூறினான். "ஆனால் நான் உனக்குச் சாக்லெட் கொண்டுவர முடியாது."

"சாக்லெட் கொண்டு வர முடியாதா? காரணம் என்னவோ?"

"அதை என்னால் சொல்ல முடியாது."

இவ்வாறு வாழ்க்கை ஏட்டின் அந்தப் பக்கமும் புரட்டப்பட்டு விட்டது. கதிர் அமெரிக்காவை விட்டு ஐரோப்பாவுக்குச் சென்றான். பெர்லின் — ரோம் — பாரிஸ் ஆகிய நகரங்கள் வழியே லண்டனுக்குச் சென்றான். ஒரு நாள் இந்தியா ஹவுஸில் இந்தியப் பத்திரிகைகளைப் புரட்டிக் கொண்டிருந்த சமயம், இந்தச் செய்தியை அவன் படிக்க நேர்ந்தது.

## பரிக்கல் திருப்பணி

தென்னார்க்காடு மாவட்டம் திருக்கோவிலூர் தாலுக்காவிலுள்ள புராதனப் பிரசித்திபெற்ற பரிக்கல் ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்மஸ்வாமி கோவிலைச் செப்பனிடத் தர்மகர்த்தாக்களால் ஒரு திருப்பணிக் குழு அமைக்கப்பட்டுத் திருப்பணி வேலைகள் தொடங்க விருக்கின்றன. இந்தக் கைங்கர்யத்துக்குச் சுமார் ரூபாய் மூன்று லட்சம் தேவைப்படுமென மதிப்பிடப்பட்டுள்ளது. பொதுமக்களும் மற்றும் ஆஸ்திக ஸ்தாபனங்களும் தங்களால் இயன்ற அளவு திரவிய சகாயம் செய்து இக்கைங்கர்யத்தை வெற்றிகரமாகப் பூர்த்தி செய்து கொடுக்குமாறு வேண்டிக் கொள்ளப்படுகின்றனர். நன்கொடைகள் "பரிக்கல் ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்மஸ்வாமி கோவில் திருப்பணி பண்டு" என்ற பெயருக்கு ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்ம ஸ்வாமி பக்தஜன சபா, 25, குப்பையச் செட்டித் தெரு, சென்னை-33 என்ற முகவரிக்கு அனுப்பப்படலாம்.

''பம்பாய்: நியூ இந்தியா மில்லின் மானேஜிங் டைரக்டரான லட்சுமிகாந்தன் மாரடைப்பினால் காலமானார். பதவி ஓய்வு பெறுவதற்கு முன்னால் அவர் ஐ.சி.எஸ்.ஸில் இருந்தார். கடந்த மூன்றாண்டுகளாக பம்பாயின் நியூ இந்தியா மில்லை நிர்வகித்து வந்தார். பிரபல சமூக சேவகியும், வாழ்க்கைத் துணைவியுமான மீனாட்சி லட்சுமிகாந்தனும் தமது கணவனுக்குப் பக்கத்திலேயே இருந்தார்....''

இப்போது கதிர் பம்பாய்க்குத் திரும்பி விட்டான். எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் ஒரு முறை பம்பாயில் அவனுடைய ஓவியங்களின் காட்சிக்கு ஏற்பாடாகி யிருந்தது. நகரத்தின் முக்கியமான புள்ளிகளுக்கும் அமைச்சர்களுக்கும் இலக்கிய கர்த்தாக்களுக்கும், கலைஞர்களுக்கும் சமூக சேவகர்களுக்கும் அழைப்பிதழ்கள் அனுப்பப்பட்டிருந்தன. எல்லோருமே வந்திருந்தார்கள். ஸ்ரீமதி . மீனாட்சி லட்சுமிகாந்தனுக்கும் ஓர் அழைப்பிதழ் அனுப்பப்பட்டது. அன்று மாலை கதிர் ஒரு மூலையில் நின்றவாறு படபடக்கும் இதயத்துடன் அவளுடைய வருகையை எதிர்நோக்கிக்கொண்டிருந்தான். பொழுது சாய்ந்து விட்டது. ஓவியக் காட்சி முடியும் நேரமும் நெருங்கி விட்டது. மக்கள் ஒருவர் பின் ஒருவராக வெளியே சென்று விட்டார்கள். இந்த மாலை மட்டு மின்றி, வாழ்நாள் முழுவதும் அவளுக்காகவே தான் காத்திருந்ததாகக் கதிர் நினைத்தான்.

பிறகு ஆர்ட் காலரியின் காவலன் கதிரிடம் வந்து நின்றான்: ''ஐயா! காட்சி சாலை மூடும் நேரமாகி விட்டது. இப்போதுதான் ஓர் அம்மையார் வந்திருக்கிறார்கள். தாங்கள் ஆணை யிட்டால் அவரைஉள்ளே அனுமதிக்கிறேன்!''

''நேரமாகிவிட்டது என்று சொல்லிவிடு—ஆனால் சற்றே நில்.அவர் பெயர் என்னவோ?''

''பெயர் தெரியாது ஐயா. ஆனால் அவர் இந்தக் கார்டைக் கொடுத்திருக்கிறார்.''

கதிர் அதை வாங்கிப்பெயரை வாசித்தான். அவனுடைய இதயத் துடிப்பு அதிகரித்தது.

''அவர்களை வரச் சொல்'' என்று சொல்லி விட்டு அவன் இருள் சூழ்ந்த மூலையில் ஒதுங்கி நின்றான். அவனது செவிகளில் ஆலய மணிகளின் ஓசை முழங்கியது.

கதவு திறந்தது. முதலில் காவலாளி உள்ளே வந்தான். அவனைத் தொடர்ந்து....

ஒரு பருத்த அம்மையார் தடுமாறியவாறு உள்ளே நுழைந்தாள். அவருடன் நறுமண அலை ஒன்றும் உள்ளே வந்தது. கைகள் வெட்டப்பட்ட சோளி வழியே தடித்த கைகள் வெளியே தெரிந்தன. முகவாய்க்கட்டைக்குக் கீழ மாமிசம் தொங்கியது. அவளுடைய முகத்தின் சதையில் கண்களும் மறைந்து விட்டன. வெட்டப்பட்ட கூந்தலுக்குச் சாயம் தீட்டப்பட்டிருந்தது. செவ்வண்ணம் ஏறிய உதடுகளில் யானைத் தந்தத்தால் செய்த சிகரெட் ஹோல்டரும் இருந்தது.

''இவள் யாரோ?'' கதிர் மனத்தினுள் எண்ணமிட்டான். ''இது மீனாட்சியாகத் தான் இருக்க முடியும். இல்லை! இது மீனாட்சியாக இருக்க முடியாது.''

இவள் மீனாட்சி இல்லையென்றால் இருளில் நான் மறைய வேண்டிய அவசியம் ஏன்?

அவன் உலாவியவாறு அந்த அம்மையார் நின்றிருந்த மூலைக்குச் சென்றான். அவள் தடிப்பான கண்ணாடி வழியே சுவரில் மாட்டப்பட்டிருந்த படங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''இந்தப் படங்கள் எப்படி இருக்கின்றன?'' கதிர் தலை வணங்கிக் கேட்டான்.

தடிப்பான அம்மையார் சிகரெட் ஹோல்டரைத் தனது வாயிலிருந்து வெளியே எடுத்துப் புகை மண்டலம் ஒன்றை வெளியே தள்ளினாள். ''சாதாரணமாக இருக்கின்றன. இந்த நவீன ஓவியங்களை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை'' என்றாள் அவள்.

இப்போது அவள் 'அலங்கார'த்துக்கு முன்னால் சென்றாள். அந்தப் படத்தைப் பார்த்து அவள் திகைத்தாள். ''இது நன்றாக இருக்கிறது. அழகாக இருக்கிறாள் — ஆனால் மிகவும் ஒல்லியாகவும் இருக்கிறாள். இவள் யாரோ? எங்கேயோ பார்த்ததுபோல் இருக்கிறது.''

''இல்லை. இதொரு கற்பனையாகும். ஓவியனின் சிந்தனைகளில் உருவான ஒரு பெண்'' என்று கதிரும் அவசரமாகப் பதில் கூறினான்.

''கற்பனையாகவே இருக்கலாம்'' என்று மொழிந்த அவள் சிறிது நேரம் வரை அந்த ஓவியத்தைப் பார்த்தவாறே நின்றுவிட்டாள். அவளுக்குத் தெரியாத மொழியில் அந்த ஓவியம் ஏதோ சொல்லிற்று போலும். அவளால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

பிறகு அந்த மாது பெருமூச்சு ஒன்றை வெளிப்படுத்தினாள். ''நல்லது — நன்றி'' என்று சொல்லி விட்டுத் திரும்பிச் செல்வதற்காக அவள் ஆயத்தமானாள். சற்றே நின்று, தனது கைப் பையைத் திறந்து அதிலிருந்து ஒரு பெரிய சாக்லெட்டை எடுத்தாள். அதன் உறையை நீக்கியவாறு, ''நீங்கள் சாக்லெட் சாப்பிடுகிறீர்களா?'' என்று கேட்டாள்.

''இல்லை. நன்றி. நான் சாக்லெட் சாப்பிடுவதில்லை.'' கதிர் அவசரமாகப் பதில் கூறினான்.

தனது முத்துப் போன்ற அழகான பற்களால் (அவை போலிப் பற்களாகவே இருக்க முடியும்) சாக்லெட்டின் ஒரு பெரிய துண்டைக் கடித்தவாறு ''அதனால்தான் தாங்கள் ஒல்லியாக இருக்கிறீர்கள்'' என்றாள்.

பிறகு தானே தனக்குள் சிரித்துக் கொண்டாள். சாக்லெட்டைக் கடித்தவாறு அவள் நடக்க ஆரம்பித்தாள். காலணிகளின் ஒலி சிறிது சிறிதாக எட்டத்தில் சென்று கொண்டிருந்தது.

இப்போது காலரியில் அமைதி நிலவிற்று. காவலன் மின் விளக்குகளை அணைத்துக் கொண்டிருந்தான்.

ஒன்றன் பின் ஒன்றாக எல்லாப் படங்களும் இருளில் மூழ்கிவிட்டன. கடைசியில் ஒளியின் நிலவில் 'அலங்காரம்' மட்டும்தனித்து நின்றது. அந்த ஒல்லியான — நளினமான — பொன்னிறமான நங்கை மாத்திரம் தனித்து நின்றாள்.

காவலன் அந்த ஒளியையும் அணைத்திடச் சென்றான். ''வேண்டாம்; அது இருக்கட்டும்'' என்று கதிர் தடுத்து விட்டான்.

நான்கு திசைகளிலும் பரவி யிருந்த நிசப்தத்திலும், இருளிலும் கதிர் யோசனை செய்தான். ''இந்த ஒளியும் அணைந்து விட்டால்—இந்த வாழ்வில் வேறெதுவும் எஞ்சிநிற்காது!''

தமிழாக்கம் : **முக்தார்**




நான்காம் அத்தியாயம்

## ஐயனார் கோவில்

கொடில நதிக் கரையில் பாட்டனும் பேரனும் பேசிக் கொண்டிருந்த அதே சமயத்தில் கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள திருக்காட்டு முள்ளூர் என்னும் ஊரில் நம் பழைய நண்பர்களான ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் ஒரு விநோதமான காரியத்தில் ஈடுபட்டிருந்தார்கள். அக்காலத்தில் வடகாவேரியாகிய கொள்ளிடமும் தென் காவேரியைப் போலவே புண்ணிய நதியாகக் கருதப்பட்டு வந்தது. துலா மாதத்தில் தினந்தோறும் காட்டுமுள்ளூர் ஆலயத்தில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான் ரிடபா ரூடராகக் கொள்ளிடக் கரைக்கு எழுந்தருளி ஸ்நானத்துக்கு வந்துள்ள பக்தர்களுக்குச் சேவை தருவது வழக்கம். மத்தியான வேளையில் ஒவ்வொரு நாளும் உற்சவமாகவே இருக்கும். அக்கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்து பக்தர்கள் திரண்டு வருவார்கள். சைவர்களும் வருவார்கள்; வைஷ்ணவர்களும் வருவார்கள். விஷ்ணு கோயில் அந்த ஊரில் சிறிதாக இருப்பினும் அந்தக் கோயிலிலிருந்து பகவான் கருட வாகனத்தில் ஆரோகணித்துக் கொள்ளிடக்கரைக்கு எழுந்தருளுவார்.

இவ்விதம் துலா மாதத்தில் வட காவேரியில் ஸ்நானம் செய்வதற்காக வந்து கூடியிருந்த ஜனக் கூட்டத்தி



விடையே ஆழ்வார்க்கடியான் ஒரு நாவல் கிளையை மண்ணில் நட்டு வைத்துக் கொண்டு, ''நாவலோ, நாவல்! நாவலோ நாவல்! இந்த நாவலந் தீவில் வைஷ்ணவ சமயமே மேலான சமயம் என்று நிலைநாட்டுவதற்கு வாதப் போர் புரிய வந்துள்ளேன். சைவர்கள், சாக்தர்கள், அத்வைதிகள், காபாலிகர்கள், காளாமுகர்கள், புத்தர்கள், சமணர்கள் யார் வேணுமானாலும் வாதப் போர் புரிய வரலாம். அவர்கள் வெற்றி பெற்றால் அவர்களை என் தோள் மீது தூக்கி வைத்துக் கொண்டு ஊரைச் சுற்றி ஊர்வலம் வருவேன். அவர்கள் தோற்றால் இடுப்புத் துணியைத் தவிர மற்றதையெல்லாம் இங்கே கொடுத்து விட்டுப் போக வேணும்! நாவலோ நாவல்!'' என்று கத்திக் கொண்டிருந்தான். அவனுக்கு முன்னால் ருத்திராட்ச மாலைகள், மகர கண்டிகள், கமண்டலங்கள், குண்டலங்கள், பட்டுப் பீதாம் பரங்கள், பொற் காசுகள் ஆகியவை குவிந்து கிடந்தன. இவற்றிலிருந்து அவன் வெகுநேரம் வாதமிட்டுப் பலரை வாதப் போரில் வென்றிருக்க வேண்டும் என்பது தெளிவாயிருந்தது. அவனுக்குப் பக்கத்தில் கடம்ப மரம் ஒன்றில் சாய்ந்து கொண்டு வந்தியத் தேவன் கையில் உருவிய கத்தியுடன் நின்று கொண்டிருந்தான். இப்போது அவனுடைய அரையில் உடுத்திய ஒரு துணியும் கையில் ஒரு கத்தியும் மட்டும்தான் இருந்தன. அவனுடைய தோற்றத்திலிருந்து ஆழ்வார்க்கடியான் மீது பலாத்காரத்தைப் பிரயோகிக்கப் பார்த்தவர்களை அவன் கத்தியை வீசிப் பயமுறுத்தி அனுப்பியிருக்க வேண்டும் என்று தோன்றியது. அந்தச் சமயத்தில் கூட்டமாகவும் கோஷித்துக் கொண்டும் வந்த சைவர் கூட்டம் ஒன்றைப் பார்த்து அவன் கூறிய மொழிகளிலிருந்தும் அது வெளியாயிற்று.

''எச்சரிக்கை! நியாயமாக வாதப் போர் செய்வோர் செய்யலாம். அத்துமீறி இந்த வைஷ்ணவன் மீது யாராவது கையை வைத்தால் இந்த வாளுக்கு இரையாவார்கள்!'' என்று கூறியதுடன் கத்தியையும் இரு முறை சுழற்றினான். கோபத்துடன் வந்த சைவர்கள் சாந்த மடைந்தார்கள். அவர்களில் ஒருவர், ''ஓ! வைஷ்ணவனே! ஏதோ நீ இன்றைக்கு வாதத்தில் ஜயித்துவிட்டதாக எண்ணிக் கர்வம் கொள்ளாதே! திருநாரையூருக்குப் போ! அங்கே உன்னை வாதில் வென்று புறமுதுகிட்டு ஓடச் செய்யக் கூடிய நம்பியாண்டார் நம்பி இருக்கிறார்!'' என்றார்.

''உங்கள் திருநாரையூர் நம்பியைத் திருநாராயண புரத்து அனந்த பட்டரிடம் வந்து வாதிடச் சொல்லுங்கள்! அங்கே நானும் ஒருவேளை இருந்தாலும் இருப்பேன்!'' என்று கூறினான் ஆழ்வார்க்கடியான்.

பலமுறை அவன் ''நாவலோ நாவல்!'' என்று கூவியும் யாரும் புதிதாக வாதமிட வரவில்லை. எனவே, நாவல் கிளையை எடுத்துவிட்டுச் சங்குசக்கரம் பொறித்த வெற்றிக் கொடியை ஆழ்வார்க்கடியான் நட்டான். பக்கத்தில் நின்று எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த வைஷ்ணவர்கள் சிலர் உடனே அவன் அருகில் வந்து அவனைத் தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு,

''நாராயணனே நம் தெய்வம்!
நாமெல்லாரும் துதி செய்வோம்!''

என்று பாடிக் கொண்டு கூத்தாடினார்கள். பிறகு அவர்கள், ''வீர வைஷ்ணவனே! எங்கள் இல்லத்துக்கு வந்து திருஅமுது செய்து அருள வேண்டும்!'' என்று பிரார்த்தித்தார்கள். ''அங்ஙனமே ஆகுக!'' என்று ஆழ்வார்க்கடியான் கம்பீரமாகக் கூறிவிட்டு வந்தியத்தேவனையும் அழைத்துக் கொண்டு சென்றான். இருவரும் புளியோரை, திருக்கண்ணமுது,



ததியோன்னம் ஆகிய வற்றை வயிறு முட்டும்படி ஒரு கை பார்த்தார்கள். ஆழ்வார்க்கடியான் தான் வாதப் போரில் சம்பாதித்த பொருள்களில் அங்க வஸ்திரமாக அணியக் கூடிய பீதாம்பரம் ஒன்றை மட்டும் வந்தியத்தேவனிடம் கொடுத்து விட்டு மற்றவற்றை ஸ்ரீ வைஷ்ணவர்களிடம் கொடுத்து அவற்றின் பெறுமானத்துக்குப் பொற் கழஞ்சுகள் பெற்றுக் கொண்டான்.

வைஷ்ணவ சமயத்தின் மேன்மையை நிலைநாட்டிக் கொண்டு வடக்கே ஹரித்வாரம் வரையில் போக வேண்டியிருப்பதால் தனக்குப் பொற் காசு தேவை என்பதாக அவன் தெரிவித்துக் கொண்டான். ஸ்ரீ வைஷ்ணவர்களும் மனமுவந்து பொருள்களின் பெறுமானத்துக்கு அதிகமாகவே பொற்காசுகள் கொடுத்தார்கள். பெற்றுக் கொண்டு ஆழ்வார்க்கடியானும் வந்தியத் தேவனும் பிற்பகலில் கடம்பூரை நோக்கிப் பிரயாணமானார்கள்.

கொள்ளிடத்தில் அப்போது பெரு வெள்ளம் போய்க் கொண்டிருந்த படியால் அவர்கள் ஏறி வந்த குதிரைகளைக் கொண்டு வர முடியவில்லை. அவர்கள் நதியைக் கடந்த ஓடத்தில் ஜனங்கள் அதிகமாக ஏறியிருந்தபடியால் படகு வட கரையை அடையும் சமயத்தில் கவிழ்ந்து விட்டது. மற்றவர்களைப் போல் வந்தியத்தேவனும் ஆற்று வெள்ளத்தில் விழுந்து நீந்திக் கரை சேர வேண்டியதாயிற்று. அச்சமயம் அத்தனை காலமாக எத்தனையோ நெருக்கடியான நிகழ்ச்சிகளிலும் வந்தியத் தேவன் காப்பாற்றிக் கொண்டு வந்த அவனுடைய அரைக் கச்சச் சுருளும் அதில் அவன் பத்திரப் படுத்தி வைத்திருந்த இலச்சினைகளும் இளைய பிராட்டி தந்த ஓலையும் கூட நதி வெள்ளத்தில் போய் விட்டன. அவற்றுடன் இருந்த பொன் நாணயங்களும் போய்விட்டன. புதிய குதிரைகள் வாங்குவதற்குப் பணம் சேகரிப்பதற்காகவே மேற்கூறிய யுக்தியை அவர்கள் கையாண்டார்கள். யுக்தி பலித்துக் கொஞ்சம் பணமும் கிடைத்தது. ஆனால் அந்தக் கிராமாந்தரப் பகுதிகளில் குதிரை எங்கும் விலைக்குக் கிடைக்காது என்றும் தெரிந்தது. கடம்பூர் கிராமத்தில் வாரம் ஒரு நாள் நடைபெறும் சந்தையில் ஒருவேளை குதிரைகள் விற்பனைக்கு வரலாம். இல்லாவிடில் திருப்பாப்புலியூர் சென்றுதான் வாங்க வேண்டும்.

கடம்பூருக்குப் போவதா வேண்டாமா என்பது பற்றி அந்த நண்பர்களுக்குள் விவாதம் நடந்தது. அதில் உள்ள சாதக பாதகங்களைப் பற்றி விவாதித்தார்கள். கடம்பூரில் ஆதித்த கரிகாலனின் வருகையைப் பற்றி ஏதேனும் செய்தி கிடைத்தாலும் கிடைக்கலாம். காஞ்சியிலிருந்து புறப்பட்டு விட்டாரா, எந்த வழியாக வருகிறார் என்று ஏதேனும் தகவல் தெரிந்தால் நல்லது அல்லவா? ஆனால் கடம்பூரில் தெரிந்தவர்களின் கண்ணில் படக் கூடாது. கந்தமாறனைச் சந்திக்க நேர்ந்து விட்டால் ஆபத்தாய்ப் போய் விடும். ஒருவேளை பழுவேட்டரையரின் பரிவாரங்கள் இதற்குள் வந்திருந்தால் அதுவும் தொல்லைதான்!—

"வைஷ்ணவனே! உனக்குத்தான் இரவில் சுவர் ஏறிக் குதிக்கத் தெரியுமே? சம்புவரையர் குதிரை லாயத்திலிருந்தே இரண்டு குதிரைகளைக் கொண்டு வந்து விடலாமே?" என்றான் வந்தியத்தேவன்.

"நான் சுவர் ஏறிக் குதிப்பேன். ஆனால் குதிரைகளுக்குச் சுவர் ஏறிக் குதிக்கத் தெரிய வேண்டுமே?" என்றான் வைஷ்ணவன்.

"பழுவூர்ப் பரிவாரங்கள் அங்கே வந்திருந்தால் இரண்டு குதிரைகளை அடித்துக் கொண்டு போகலாம். அவர்கள் முன்னொரு சமயம் கடம்பூரில் என்னுடைய குதிரையை விரட்டியடித்தார்கள் அல்லவா? அதற்குப் பழிக்குப் பழி வாங்க வேண்டும்!" என்றான் வாணர் குல வீரன்.

சில மாதங்களுக்கு முன்பு கடம்பூரில் அவர்கள் சந்தித்தது பற்றியும் அன்று இரவு நடந்த அபூர்வ சம்பவங்கள் பற்றியும் வழி நெடுகப் பேசிக் கொண்டு வந்தார்கள். இருவரும் சூரியன் அஸ்தமிக்கும் சமயத்துக்குக் கடம்பூரை அடைந்தார்கள்.

கடம்பூர் அவர்கள் எதிர்பார்த்தது போல் அமர்க்களப்பட்டுக் கொண்டுதான் இருந்தது. அரண்மனையும் கோட்டை வாசலும் கொடிகளாலும் தோரணங்களாலும் தொங்கல் மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டு விளங்கின. கோட்டை வாசலிலும் சரி, மதில் சுவரைச் சுற்றியும் சரி, முன்னைவிடக் காவல் பலமாக இருந்தது. பட்டத்து இளவரசர் ஆதித்த கரிகாலர் வருகிறார் என்றால், கேட்க வேண்டுமா! அதே சமயத்தில் தனஅதிகாரி பெரிய பழுவேட்டரையரும் ராணியுடன் வரப்போகிறார். இரண்டு பேருடைய பரிவாரங்களும் வரும். சில நாளைக்கு ஊர் தடபுடல் பட்டுக் கொண்டுதானிருக்கும்.

இதையெல்லாம் பற்றிக் கடம்பூர்க் கடைத் தெருவில் ஜனங்கள் பேசிக் கொண்டிருந்ததை இரு நண்பர்களும் கேட்டார்கள். ஜனங்கள் பேச்சிலிருந்து இரு சாராரும் இன்னும் வந்து சேரவில்லை என்று தெரிந்தது. சம்புவரையர் மகன் கந்தமாறன் ஆதித்த கரிகாலரை அழைத்து வரக் காஞ்சிக்கே புறப்பட்டுப் போயிருக்கிறான் என்றும் தெரிந்தது. இந்தப் பரபரப்பான பேச்சுக்களுக்கிடையில் சிலர் 'கடல் கொண்டுவிட்ட' இளவரசன் அருள்மொழிவர்மனைப் பற்

றியும் மெல்லிய குரலில் பேசினார்கள். அவ்வளவு பெரிய துக்க சம்பவம் நடந்திருக்கும்போது இங்கே விருந்துகளுக்கும் களியாட்டங்களுக்கும் ஏற்பாடு நடந்து வருவது பலருக்குப் பிடிக்கவில்லை என்பது, ஜாடை மாடையாக அவர்கள் பேசிக் கொண்டதிலிருந்து தெரிந்தது.

ஆழ்வார்க்கடியானும் வந்தியத் தேவனும் இந்தப் பேச்சுக்களையெல்லாம் காது கொடுத்துக் கேளாதவர்கள்போல் கேட்டுக் கொண்டு ஊரைத் தாண்டிப் போனார்கள். ஊருக்குள் எங்கேயும் இரவு தங்க அவர்கள் விரும்பவில்லை. ஊருக்கு அப்பால் சமீபத்தில் எங்கேயாவது பாழடைந்த மண்டபம், அல்லது சத்திரம், சாவடி இல்லாமலா போகும்? அப்படி இல்லாவிட்டால், இரவு திருநாராயணபுரத்துக்குப் போய்த் தங்கி விடுவது நல்லது. அங்கேயுள்ள பெரிய பெருமாள் கோயிலின் நூற்றுக்கால் மண்டபத்தில் நிம்மதியாகப் படுத்து உறங்கலாம். முதல் நாள் இரவு நிகழ்ச்சிகளுக்குப் பிறகு ஓர் இரவு நல்ல தூக்கம் அவர்களுக்கு அவசியமாயிருந்தது.

கடம்பூரைத் தாண்டிச் சாலையோடு சிறிது தூரம் சென்றதும் அடர்த்தியான மூங்கிற் காடு ஒன்றும், அதற்குள் ஐயனார் கோவில் ஒன்றும் தெரிந்தன.

''வைஷ்ணவரே! இனிமேல் என்னால் நடக்க முடியாது. இரவு இந்தக் கோயிலில் படுத்திருக்கலாம். யார் கண்ணிலும் படாமல் இருப்பதற்கு இது நல்ல இடம்!'' என்றான் வந்தியத்தேவன்.

''அப்பனே! நீ சொல்வது தவறு! இம்மாதிரி இடங்களுக்கு நம்மைப் போல் இன்னும் யாராவது வந்து சேர மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''அப்படி வருகிறவர்கள் குதிரைகளுடன் வந்தார்களானால் ரொம்ப நல்லது'' என்றான் வந்தியத்தேவன்.

''இந்த மூங்கிற் காட்டுக்குள் எந்தக் குதிரையும் நுழைய முடியாது. மனிதர்கள் நுழைந்து செல்வதே கடினமான காரியம் ஆயிற்றே?''

''எங்கேயாவது ஒற்றையடிப் பாதை ஒன்று இல்லாமல் போகாது. கோயில் பூசாரி வரக்கூடிய வழியேனும் இருந்து தானே ஆகவேண்டும்?''

இருவரும் அடர்த்தியாக மண்டிக் கிடந்த மூங்கிற் புதர்களைச் சுற்றிச் சுற்றி வந்து, கடைசியாகக் குறுகலான ஒற்றையடிப் பாதை ஒன்றைக் கண்டு பிடித்தார்கள். அதன்வழியாக உடம்பில் முட்கள் கீறாமல் நடந்து போவது மிகவும் பிரயாசையாக இருந்தது. இவ்விதம் சிறிது தூரம் சென்ற பிறகு கொஞ்சம் இடைவெளி காணப்பட்டது. அதில் சிறிய ஐயனார் கோவில் இருந்தது. கோவிலுக்கு எதிரே பலிபீடமும் அதையொட்டி மண்ணினால் செய்து காளவாயில் சுடப்பட்ட யானைகளும் குதிரைகளும் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. ஐயனாருக்கு வேண்டுதல் செய்துகொள்ளும் பக்தர்கள் இவ்விதம் மண்ணினால் செய்த யானைகளும் குதிரைகளும் கொண்டு வந்து வைப்பது வழக்கம்.

அவற்றைப் பார்த்ததும் வந்தியத் தேவன், ''குதிரைகளைப் பற்றி இவ்வளவு கவலைப்படுகிறோமே? ஐயனாரைக் கேட்டு இரண்டு குதிரைகள் வாங்கிக் கொள்ளலாமே?'' என்றான்.

''மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கக் கூடாது என்ற பழமொழி தெரியாதா?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''வைஷ்ணவரே! எங்கள் ஐயனார் மிகவும் சக்தி வாய்ந்த தெய்வம். கேட்ட வரத்தை உடனே கொடுக்கக் கூடியவர். உங்கள் விஷ்ணுவைப் போல் பக்தர்களைத் தவிக்க விட்டு விட்டுப் பட்டப் பகலில் தூங்கிக் கொண்டிருப்பவர் அல்ல!'' என்றான் வந்தியத் தேவன்.

''அப்படியானால் இந்த மண் குதிரைகளுக்கு உயிர் கொடுத்தாலும் கொடுப்பார் என்று சொல்லு. ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. பணம் மிச்சம்!''

''உண்மையான பக்தி இருந்தால் மண் குதிரைகளும் உயிர் பெறும்! பார்க்கப் போனால் நம் உடம்புகள் மட்டும் என்ன? பிரம்ம தேவன் மண்ணினால் செய்து உயிர் கொடுத்ததுதானே?''

''நன்கு சொன்னாய் தம்பி! இந்த உடம்பு மண்ணினால் செய்த உடம்பு என்பதை மறந்து விடுகிறோம். அதை அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொள்வதற்காகவே திருமண்ணைக் குழைத்து நெற்றியிலும் உடம்பிலும் இட்டுக் கொள்ளும்படி வைஷ்ணவ ஆசாரிய புருஷர்கள் கட்டளையிட்டிருக்கிறார்கள்!''

வந்தியத் தேவன் ''உஷ்!'' என்று சொல்லி ஆழ்வார்க்கடியானுடைய கையைப் பிடித்துக் கொண்டு இன்னொரு கையினால் எதிரே சுட்டிக் காட்டினான். சூரியன் அஸ்தமித்துச் சிறிது நேரம் ஆகிவிட்டது. நாலா புறமும் இருண்ட மூங்கில் தோப்புகள் சூழ்ந்திருந்த அச்சிறிய இடைவெளியில் மிக மங்கலாகத் தெரிந்த வெளிச்சத்தில் ஐயனாருடைய வாகனங்கள் உயிர் பெற்று அசைவதாகத் தோன்றின. ஒரு யானையும் ஒரு குதிரையும் இடம் பெயர்ந்து நகர்ந்தன. கண்ணால் கண்ட இந்த அற்புதத்தை நம்புவதா, இல்லையா

என்று தெரியாமல் வந்தியத் தேவன் சிறிது நேரம் திகைத்து நின்றான். ஆனாலும் ஐயனாருடைய அற்புத சக்தியை ஆழ்வார்க் கடியானுக்கு உடனே உணர்த்திவிடக் கூடிய சந்தர்ப்பத்தை இழக்கவும் அவனுக்கு மனம் வரவில்லை. ''வைஷ்ணவரே, பார்த்தீரா?..'' என்று அவன் சொல்வதற்குள் ஆழ்வார்க்கடியான் அவனுடைய கையை இறுக்கிப் பிடித்து, உதட்டில் விரல் வைத்துச் சமிக்ஞை காட்டி, பேச்சை நிறுத்தினான். பின்னர், இறுக்கிப் பிடித்த கையினால் வந்தியத்தேவனைப் பற்றிய வாறு அவனை இழுத்துக் கொண்டு அந்த மூங்கில் புதருக்குப் பின்னால் சென்று நன்றாக மறைந்து நின்றான்.

குதிரையும் யானையும் அசைந்து சிறிது விலகிக் கொடுத்தன அல்லவா? அப்படி விலகிக் கொடுத்த இடைவெளி ஏற்பட்ட இடத்தில் ஒரு மனிதனுடைய தலை மட்டும் தெரிந்தது. அந்தத் தலை அப்பாலும் இப்பாலும் திரும்பி நாலு புறமும் பார்த்தது. ஐயனாருடைய பலி பீடத்துக்குப் பக்கத்தில் இம்மாதிரி ஒரு தலை மட்டும் தோன்றி நாலா புறமும் சுழன்று விழித்த காட்சி மிகப் பயங்கரமாயிருந்தது. எவ்வளவோ பயங்கரங்களைப் பார்த்திருந்த வந்தியத் தேவனுடைய மெய் சிலிர்த்தது. ஆனால் ஆழ்வார்க்கடியான் தன்னைப் பிடித்திருந்த கை சிறிதும் நடுக்கமுறாமலும் தளராமலும் இருந்ததை அறிந்து வந்தியத் தேவன் நெஞ்சுறுதி கொண்டான்.

இவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்தத் தலை எழும்பி மேலே வந்தது. ஒரு மனிதனுடைய மார்பு வரையில் தெரிந்தது. பிறகு அம்மனிதன் முழுமையான உருவத்துடன் கிளம்பி மேலே வந்தான். அம்மனிதன் வெளிவந்த இடத்தில் ஒரு சிறிய பிளவு கரிய இருள் சூழ்ந்த பாதாள பிலத் துவாரத்தைப் போல, பயங்கரமாக வாயைத் திறந்து கொண்டிருந்தது.

சற்று உற்றுப் பார்த்த பின்னர் அந்த மனிதன் யார் என்பது அவர்களுக்குத் தெரிந்து விட்டது. கடம்பூர் மாளிகையில் பணியாளனாக இருந்து கொண்டே ரவிதாஸனுடைய சதிக் கும்பலிலும் சேர்ந்திருந்த இடும்பன்காரிதான் அவன்.

இதை இருவரும் ஏககாலத்தில் அறிந்து கொண்டதும் ஒருவரை யொருவர் பார்த்துத் தங்கள் வியப்பைச் சமிக்ஞையினாலேயே தெரிவித்துக் கொண்டார்கள்.

இடும்பன்காரி திறந்திருந்த துவாரத்தை அப்படியே விட்டு விட்டு, மறுபடியும் ஒரு தடவை சுற்று முற்றும் பார்த்து விட்டு, ஐயனார் கோவிலை நோக்கி நடந்தான். கோவில் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனான். சிறிது நேரத்துக்கெல்லாம் கோயிலுக்குள்ளேயிருந்து மூணுக்கு மூணுக்கு என்று வெளிச்சம் தெரிந்தது. கோவிலுக்குள் விளக்கேற்றப்பட்டிருக்கிறது என்பதை அறிந்து கொண்டார்கள்.

''தம்பி! இதைப் பற்றி என்ன நினைக்கிறாய்?'' என்று அடியான் கேட்டான்.

''ஐயனார் சக்தி யுள்ள தெய்வம் என்று நினைக்கிறேன். குதிரைக்கு உயிர் வந்ததைப் பார்க்கவில்லையா?'' என்றான் வந்தியத் தேவன்.

''அது சரி! இப்போது வந்தானே, அவனைப் பற்றி என்ன நினைக்கிறாய்?''

''அவன் ஐயனார் கோயில் பூசாரி போலிருக்கிறது. நாமும் போய்ச் சுவாமி தரிசனம் செய்யலாமா?''

''கொஞ்சம் பொறு! இன்னும் யாராவது சுவாமி தரிசனத்துக்கு வருகிறார்களா என்று பார்த்துக் கொள்ளலாம்.''

''இன்னும் யாரேனும் வருவார்கள் என்று நினைக்கிறீர்களா?''

''பின் எதற்காக இவன் விளக்குப் போடுகிறான்?''

''பூசாரி கோவிலுக்கு விளக்குப் போடுவதில் ஆச்சரியம் என்ன?''

''தம்பி! அவன் யார் என்று தெரியவில்லையா?''

''நன்றாய்த் தெரிகிறது. கொள்ளிடத்தின் தென் கரையில் எனக்குக் குதிரை வாங்கிக்கொண்டுவந்து கொடுத்தானே அந்த இடும்பன்காரி அவன்தான். இப்போதும் அவனிடம் குதிரை கேட்கலாம் என்று பார்க்கிறேன்...''

''நல்ல யோசனை செய்தாய்!''

''உமக்குப் பிடிக்கவில்லையா?''

''இடும்பன்காரி உனக்குக் குதிரை வாங்கிக் கொடுத்தவன் மட்டும் அல்ல; ரவிதாஸன் கூட்டத்தைச் சேர்ந்தவன்.''

''அப்படியானால் இன்னொரு நல்ல யோசனை தோன்றுகிறது.''

''என்ன? என்ன?''

''இடும்பன்காரி ஐயனார் கைங்கரியத்தில் ஈடுபட்டிருக்கும்போது, அவன் எங்கிருந்து வந்து முளைத்தான் என்பதைப் பார்த்துத் தெரிந்து கொண்டு வரலாம் என்று எண்ணுகிறேன்.''

''அது எப்படி முடியும்?''

''அவன் வெளியே வந்த துவாரத்தினால் நான் உள்ளே போக முடியாதா?''

''முடியலாம். ஆனால் அதில் உள்ள அபாயங்கள்...''

''அபாயம் இல்லாத காரியம் எது?''

''அப்புறம் உன் இஷ்டம்!''

''வைஷ்ணவரே! நீங்கள் இங்கே இருந்து என்ன நடக்கிறது என்று பார்த்துக்கொண்டிருங்கள்...''

''அதற்கென்ன கஷ்டம்? நான் இருந்து பார்த்துக் கொண்டிருக்கிறேன். சுரங்க வழி எங்கே போகும் என்று உனக்கு ஏதாவது தோன்றுகிறதா?''

''தோன்றுகிறது ஸ்வாமி, தோன்றுகிறது! அது சரிதானு என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.''

''அதை நீ எதற்காகத் தெரிந்து கொள்ள வேணும்?''

''ஏதேனும் ஒரு சமயத்தில் உபயோகப்படலாம். யார் கண்டது?''

அச்சமயம் சற்றுத் தூரத்தில் வேறு பேச்சுக் குரல்கள் கேட்டன.

''தாமதிப்பதற்கு நேரமில்லை, வைஷ்ணவரே! நான் திரும்பி வருகிற வரையில் இங்கேயே இருப்பீர் அல்லவா? அல்லது சுக்ரீவன் வாலிக்குச் செய்தது போல் செய்து விடுவீரா?''

''உயிர் உள்ள வரையில் இங்கேயே இருக்கிறேன். ஆனல் நீ திரும்பி வருவது என்ன நிச்சயம்?''

''உயிர் இருந்தால் நானும் திரும்பி வருவேன்...''

இவ்விதம் சொல்லிக்கொண்டே வந்தியத்தேவன் நாலே பாய்ச்சலில் துவாரம் தெரிந்த இடத்தை நோக்கி ஓடினன். அதற்குள் இறங்கினன். மறு கணமே அந்த இருண்ட பள்ளத்தில் மறைந்தான். பிலத்துவாரம் அவனை அப்படியே விழுங்கிவிட்டதாகத் தோன்றியது.

கோயிலுக்குள் சென்றிருந்த இடும்பன்காரி வெளியே வந்து சுற்று முற்றும் பார்த்தான். திறந்திருந்த துவாரம் அவன் கண்ணில் பட்டது. உடனே அவ்விடம் சென்று பலிபீடத்துக்குப் பக்கத்தில் நாட்டப் பட்டிருந்த சூலாயுதத்தைச் சுழற்றித் திருகினன்.

இடம் பெயர்ந்து அகன்றிருந்த யானையும் குதிரையும் மறுபடியும் நெருங்கி வந்தன. துவாரம் அடைபட்டு, இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது.

இந்தக் காரியத்தைச் செய்து விட்டு இடும்பன்காரி மறுபடியும் கோவில் வாசற் படியண்டை வந்தான். அதே சமயத்தில் ரவிதாஸன், சோமன் சாம்பவன் முதலியவர்களும் வேறு திசையிலிருந்து வந்து சேர்ந்தார்கள்.

ஆழ்வார்க்கடியான் மூங்கில் காட்டுக்குப் பின்னல் இன்னும் நன்ருக மறைந்து கொண்டான்.

கோவில் வாசற்படி மேல் ரவிதாசன் உட்கார்ந்துகொண்டான். மற்றவர்கள் அவன் எதிரே தரையில் அமர்ந்தார்கள்.

''தோழர்களே! நாம் கைக்கொண்ட விரதம் நிறைவேறும் சமயம் நெருங்கி விட்டது!'' என்ருன் ரவிதாஸன்.

''இவ்வாறுதான் ஆறு மாதமாக 'நெருங்கி விட்டது' 'நெருங்கி விட்டது' என்று சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள்'' என்ருன் ஒருவன்.

''ஆம்; அதில் தவறு ஒன்றுமில்லை. ஆறு மாதமாகவே அந்த நாள் நெருங்கி வந்து கொண்டிருந்தது. இப்போது விரல் விட்டு எண்ணக் கூடிய நாள் கணக்கில் நெருங்கி விட்டது. ஆதித்த கரிகாலன் காஞ்சியை விட்டுக் கிளம்பி விட்டான் என்ற செய்தி வந்திருக்கிறது. திருக்கோவலூர்க் கிழவன் அவனைத் தடுத்து நிறுத்தச் செய்த பிரயத்தனம் பலிக்கவில்லையாம்!''

''வழியில் வேறு யாராவது தடுத்து நிறுத்த மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?''

''ஆதித்த கரிகாலன் முன் வைத்த காலைப் பின் வைக்கிறவன் அல்ல. இனி யார் தடுத்தாலும் கேட்க மாட்டான்.''

''அவனுடைய சகோதரி சொல்லி அனுப்பிய செய்தி போய்ச் சேர்ந்தால்?''

''அது எப்படிப் போய்ச் சேர முடியும்? செய்தி கொண்டு போன வாலிபனைத்தான் காட்டில் கட்டிப் போட்டு விட்டு வந்தோமே?''

''அழகுதான்! அவனை இன்று காலையில் கொள்ளிடத்தின் வட கரையிலே பார்த்தேன். அவனோடு நமது இன்னொரு பகைவனும் சேர்ந்திருக்கிருன்..''

''அது யார்?''

''போலி வைஷ்ணவ வேஷதாரி!''

''அப்படியானால் நாம் ஜாக்கிரதையாயிருக்க வேண்டியதுதான். அவர்கள் ஆதித்த கரிகாலனைச் சந்திக்காமல் தடுக்கப் பார்க்க வேண்டும்.''

''தும்பை விட்டு வாலைப் பிடிக்கிற கதையாக இருக்கிறது. கையில் அகப்பட்டவனை அங்கே ஒரு வழியாகத் தீர்த்திருக்கலாம். ராணி எதற்காக அவனை உயிரோடு விடச் சொன்னுள் என்பது தெரியவில்லை...''

''தோழர்களே! எனக்கு அது அப்போது புரியாமல்தான் இருந்தது. அப்புறம் தெரிந்து கொண்டேன். ராணி என்னையும் மிஞ்சிவிட்டாள் என்பதை ஒத்துக் கொள்கிறேன். மிக முக்கியமான ஒரு நோக்கத்துடன்தான் வந்தியத்தேவனை உயிரோடு விட்டு விடச் சொன்னுள் ராணி. அதை நீங்கள் இப்போது தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை. வந்தியத்தேவனைப் பற்றிக் கவலை வேண்டாம். ஆனல் அந்த வைஷ்ணவனைக் கண்டால் சிறிதும் தயங்காமல் உயிரை வாங்கிவிட்டு மறு காரியம் பாருங்கள்....'' என்ருன் ரவிதாஸன். (தொடரும்)



# நடப்போம் நடப்போம் காந்தி வழி நடப்போம்!

**[உப்பு சத்தியாக்கிரகத்தை யொட்டி நடைபெற்ற வேதாரண்ய பாத யாத்திரையை மீண்டும் ஒருமுறை நிகழ்த்திக் காட்டினர் அறுபது மாணவர்கள். பங்கு பற்றிய அவர்களில் ஒருவர் இங்கு தமது அநுபவங்களை விவரிக்கிறார்.]**

சென்னையிலிருந்து புறப்பட்டபோது வேதாரண்ய பாத யாத்திரை நல்ல பொழுது போக்காக, விளையாட்டாக இருக்கும் என்று மட்டுமே நினைத்திருந்தேன். திருச்சியில் வந்து கூடியிருந்த மாணவர் குழாத்தையும் எங்களுக்குச் செய்திருந்த ஏற்பாடு களையும் கண்டபிறகு என் மன நிலையே மாறிவிட்டது. இந்த யாத்திரை வெறும் உல்லாசப் பயணம் அல்ல; ஏதோ ஒரு புனித மான பணி என்ற உணர்ச்சி உண்டாயிற்று.

யாத்திரையைத் தொடங்க நாங்கள் மொத்தம் அறுபது பேர் அன்று கூடியிருந்தோம். மேலும் அங்கங்கே வந்து சிலர் கலந்து கொள்வார்கள் என்று தெரிந்தது. போகும் வழியெல்லாம் சிற்றுண்டியும் சாப்பாடும் எப்படி இருக்கப் போகின்றன என்று முன்னறிவிப்புக் கூறுவதுபோல் இருந்தன, எங்களுக்குச் செய் திருந்த ஏற்பாடுகள். ''உங்கள் பசியை மறந்து விடுங்கள்; அதை நாங்கள் கவனித்துக் கொள்கிறோம். ஆனால் பணியை மட்டும் மறவாதீர்கள்'' என்று சொல்லாமல் சொல்வதுபோல் இருந்தது.

''இப்படித் நிறை அடித்தால் அப்புறம் எப்படி நடப்பது?'' என்று ஒரு மாணவருக்குச் சந்தேகம் வந்து விட்டது.

''கவலைப்படாதே. நடந்தால் சாப்பிட்டதெல்லாம் போன இடம் தெரியாது'' என்று அந்தச் சந்தேகத்தைப் போக்கினார் வேறு ஒரு மாணவர்.

அன்று மாலை டவுன் ஹாலில் பொதுக்கூட்டம். அந்தக் கூட்டத்துக்காக மூன்று மைல் தூரம் போல நடந்து சென்றதுமே இலேசாகக் கால்வலி எடுத்து விட்டது.

☐ மாணவர்களின் கருத் தரங்கு ஒன்று இயற்கை யுடன் இயைந்தவாறு திரு வி. ஆர். ஆர். தலைமை யில் வேதாரண்ய குருகுல மாமரத்தின் நிழலில் நடை பெறுகின்றது.

☐ மாணவர்கள் பாத யாத் திரை புறப்பட்டு விட்டார்கள்.

''இப்போதே கால் வலிக்கிறதே. இவ்வளவு தூரம் முழுதும் எப்படி நடக்கப் போகிறோம்?''

''பக்கத்தில் இருக்கிற கல்லூரிகளுக்குப் போகக்கூடப் பத்துப் பைசா கொடுத்துப் பஸ்ஸில் போக நினைக்கிற நமக்கு நடந்து பழக்கம் இருந்தால்தானே?''

''அப்படிச் சொல்லாதே.....இரண்டரைமணி சினிமாக் காட் சிக்கு, பதினொரு மணியிலிருந்தே எத்தனை பேர் கால் கடுக்க வெயிலில் கியூவில் காத்து நிற்கிறார்கள் தெரியுமா? அப்போது கால்வலி தெரியாதா? அதைவிட இது என்ன பிரமாதம்?''

பொதுக் கூட்டத்தில் எங்கள் பாத யாத்திரை யைத் தொடங்கி வைக்கச் சிறந்த தேசபக்தரும், மூதறிஞருமான திரு க. சந்தானம் அவர்கள் வந்திருந்தார். அவர் ஒரு சிறந்த அறிஞர்; பொருளாதார நிபுணர்; நேருஜியோடு சேர்த்துக்





**வி. கீதா**

கைவிலங்கிடப் பட்டுச் சிறையில் இருந்தவர். அரசியல் சாஸனத்தை உருவாக்கிய சிற்பிகள் குழுவில் ஒருவர்; எல்லாவற்றைக் காட்டிலும் ராஜாஜி நடத்திய உப்புச் சத்தியாக்கிரகப் போரில் ராஜாஜி சிறைப்பட்ட பிறகு தலைமை தாங்கிப் போரை நடத்தியவர்களில் முதல்வர். அவர் இந்த யாத்திரையைத் தொடங்கி வைக்க வந்தது ரொம்பப் பொருத்தம் என்று எல்லாரும் பேசிக் கொண்டார்கள். எங்களுக்கும் அது உற்சாகமாக இருந்தது.

இன்னும் சிவாஜி ஆசிரியர் திருலோக சீதாராம், புரொபஸர் எம். எஸ். நாடார், டாக்டர் கணேஷ் ஆகியோரும் பேசினார்கள். அவர்களுக்கெல்லாம் ஒரே ஆச்சரியம். கல்லூரி மாணவர்கள் என்றால் ஸ்டிரைக் மட்டுமே நினைவுக்கு வருகிற இந்த நாளில் உப்புச் சத்தியாக்கிரக நினைவஞ்சலி செய்ய ஒரு மாணவர் படை முன்வந்திருக்கிறதே என்று நினைத்திருப்பார்கள் போலிருக்கிறது. இந்த யாத்திரையைப் பற்றிச் சிந்தித்து, தனி மனிதராக நின்று சில நண்பர்களின் உதவியுடன் இதை நடத்திக் காட்ட முன்வந்த ஸ்ரீ வி. ஆர். ராதாகிருஷ்ணன் அவர்களையும் எங்களையும் பாராட்டினார்கள். நாங்கள் மேற்கொண்ட பணி சிறக்க வாழ்த்தினார்கள்.

எங்கள் யாத்திரையைத் தலைமை தாங்கி நடத்திய வி. ஆர். ஆர். முன்னதாக ராஜாஜி அவர்களிடம் ஆசி பெற்று வந்திருந்தார். அவர் யாத்திரையின் நோக்கத்தையும் வழியில் மாணவர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற விதி முறைகளையும் அன்றிரவு பிரார்த்தனைக்கு முன் விளக்கிக் கூறினார். விடியற் காலை நாலரை மணிக்கெல்லாம் எழுந்திருக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

இதைக் கேட்டதும் மாணவர் குழாத்திடையே மெல்லிய அலை போன்ற சிரிப்பு எழுந்தது. பரீட்சைக்கு எழுந்து படித்துப் படித்து, விடுமுறையில் சுகமாகத் தூங்கிப் பொழுது போக்கலாம் என்று நினைத்திருந்தவர்களுக்கு இதைக் கேட்டால் வேறு எப்படித்தான் இருக்கும்?

மறுநாள் காலையில் நாலரை மணிக்கெல்லாமே நாங்கள் எழுந்து புறப்பட ஆயத்தமாகிவிட்டோம். காலைப் பிரார்த்தனை நடந்தது. தினமும் படுக்கப் போகு முன்னரும் பின்னும் காலையில் எழுந்ததும் இரண்டு வேளையும் காந்திஜி நடத்தியதைப் போன்ற பிரார்த்தனை உண்டு. எங்கள் யாத்திரை தூங்காமல் தூங்கி, படுக்காமல் படுத்து உலகைக் காத்துவரும் ஸ்ரீ ரங்கநாதன் பள்ளி கொண்டிருந்த ஸ்ரீரங்கத்துக்குப் போவதில் தொடங்கியது. தினசரி விடியற்காலையில் ஆறு மைல் தூரம் நடப்போம். மாலையில் ஆறு மைல் தூரம் நடப்போம்.

எங்களை நாலைந்து குழுக்களாகப் பிரித்திருந்தார்கள். ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு தலைவர் உண்டு. ஒரு தபால் கார்டு வேண்டுமானாலும்கூட அவர்தான் கொண்டு வந்து கொடுப்பார். அவர்தான் அந்தப் பிரிவைக் கவனித்துக்கொள்ள வேண்டும். இப்படித் திட்டம் செய்திருந்தார் திரு வி. ஆர். ஆர். வழியில் போக்குவரத்துக்கு இடையூறு இன்றி நாங்கள் அணிவகுத்து நடந்து செல்வோம்.

''வேண்டும், வேண்டும்!'' என்று ஒரு பிரிவினர் குரல் எழுப்புவார்கள்.

''அன்பு வேண்டும்!'' என்று மற்றவர்கள் அடுத்தபடி குரல் எழுப்புவார்கள்.

''நடப்போம் நடப்போம்!''

''காந்தி வழி நடப்போம்!''

இப்படிச் சிறிது நேரம்; காந்திஜியைப் பற்றிய வழிநடைப் பாடல்கள் சிறிது நேரம் என்று கால் வலியோ, தூரமோ தெரியாமல் நாங்கள் ஒவ்வொரு ஊராகச் சென்றோம்.

காலையில் போய்ச் சேர்ந்தால் உடனே அந்த ஊரில் சிற்றுண்டி தயாராகக் காத்திருக்கும். காலை மாலை இரு வேளையும் வடை, பாயசத்துடன் சாப்பாடு. மாலையில் இலேசாகச் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு அடுத்த ஊரை நோக்கிப் புறப்பட்டு விடுவோம்.



பி. டபிள்யூ. டி. அதிகாரி ஒருவர் கடவுளிடம் போனார். "எனக்குச் சொர்க்கம் வேண்டும்" என்று கேட்டார். "நீ பூவுலகில் என்ன நல்ல காரியங்கள் செய்தாய்?" என்று கடவுள் கேட்டார். "நான் போட்ட சாலைகளினால் உங்கள் பெயரைச் சதா சொல்லிக்கொண்டே இருந்தார்கள்."

"எப்படி?"

"'கடவுளே! என்ன சாலையோ இது!' என்று அடிக்கடி சொன்னார்கள். அது என்னால் தானே?" என்றார் அந்த அதிகாரி.

ஸ்டேட்ஸ்மன் — பாலி

எங்கள் பெட்டி படுக்கைகளை யெல்லாம் டி. வி. எஸ். ஸ்தாபனத்தார் உதவிய ஒரு ஜீப் சுமந்து வந்தது! எங்கள் பாத யாத்திரையைப் பற்றிய கவரேட்டிசனை கல்கி ஆசிரியர் திரு சதாசிவம் உதவியிருந்தார். பொது மக்கள் காட்டிய உற்சாகமும், அவர்கள் கட்சி பேதமின்றி அளித்த வரவேற்பும் விருந்தும் எங்களைத் திக்குமுக்காடச் செய்துவிட்டன.

விடியற்காலையில் கால்கள் இரண்டும், "எழுந்திருக்காதே — எழுந்திருக்காதே!"— என்று கெஞ்சும். ஈவிரக்கமில்லாத நெஞ்சு "அது எப்படி முடியும்?" என்று விரட்டும். எழுந்து எல்லாக் காரியங்களையும் முடித்துக் கொண்டு நடக்க ஆரம்பித்து விட்டால், கால்கள் இரண்டுக்கும் உற்சாகம் வந்துவிடும். வலியாவது? கிலியாவது? போன இடம் தெரியாது.

இலை நிறைய விருந்து படைத்துவிட்டு, "பயப்படாமல் நிதானமாக இருந்து சாப்பிடுங்கள்!" என்றார் தஞ்சாவூரில் ஒருவர்.

"பயமா? எங்களுக்கா? ஏன் சார்! நீங்கள் கல்லணை பார்த்திருக்கிறீர்களா? இல்லாவிட்டால் இதோ இவன் இலையைப் பாருங்கள்" என்று 'விட்' அடித்தார் ரமணி என்ற மாணவர்.

"என்னம்மா வேணும்? என்ன வரவேண்டும்?" என்று என் இலையைப் பார்த்துவிட்டு ஒரு பெரியவர் கேட்டார்.

"சாதம்" என்று சொல்லி விட்டேன், தெரியாத்தனமாக. நிஜமாகவே அப்போது என் இலையில் சாதம் இல்லை.

அவ்வளவுதான்; எல்லாரும் என்னைக் கிண்டல் செய்து தீர்த்து விட்டார்கள். அவ்வளவு தூரம் பேசிச் சிரித்துப் பழகாவிட்டால், சாப்பிட்டது சரிமானம் எப்படி ஆகும்?

ராஜாஜி அவர்கள் அன்று நடத்திய பாத யாத்திரையில் எந்த வழியாகச் சென்றாரோ, அதே வழியாகத்தான் நாங்கள் சென்றோம். கல்லணை, கோவிலடி, திருக்காட்டுப்பள்ளி, சாத்தனூர், திருவையாறு, தஞ்சை என்று சென்றோம்.

ராஜாஜி அவர்கள் நடத்திய யாத்திரையின் போது தொண்டர்களுக்குக் கட்டுத் திட்டம் அதிகம். பொதுமக்களுக்கும் அப்போதைய சர்க்காரின் கெடுபிடி அதிகம். எந்தக் கிராமத்திலும் உப்புச் சத்தியாக்கிரகத் தொண்டர்களுக்கு உணவோ, இருக்க இடமோ கூடக் கொடுக்கக் கூடாது. கொடுத்தால் சட்ட விரோதம் என்று அப்போதைய கலெக்டர் ஆணை பிறப்பித்திருந்தாராம். மக்கள் அதையும் பொருட்படுத்தாமல், தொண்டர்களுக்கு ஆற்று மணலில் எல்லாம் உணவுப் பொட்டலங்களைப் புதைத்து வைப்பார்களாம். மரத்திலே கட்டி வழி நெடுகத் தொங்க விட்டு வைத்திருப்பார்களாம். இன்று அதை யெல்லாம் சொல்வோரும் இல்லை; நினைத்துப் பார்ப்பவர்களையும் காணோம். நாடு விடுதலை பெற்ற வரலாற்றைச் சிறிதுகூட எண்ணாமல் நாம் போய்க் கொண்டிருக்கிறோம்.

அன்று மக்கள் காட்டிய ஒற்றுமையையும் தியாகத்தையும் நாம் மறந்தால் அன்று தோன்றிய தேசிய உணர்வு அடியோடு மறைந்தே போகும். மறந்தால் இந்நாட்டின் ஒற்றுமைக்கும் தீங்கு. பெற்ற விடுதலைக்கும் தீங்கு. இதை மாணவர்களாகிய நாங்கள் இந்த யாத்திரையிலிருந்து தெளிவாகத் தெரிந்து கொண்டோம்.

இன்று ராஜ்யங்களுக்கிடையே ஆற்றுத் தண்ணீர்த் தகராறு, எல்லைத் தகராறு; மொழித் தகராறு. ஆங்காங்கே மதக் கிளர்ச்சிகள்; தொழில் தகராறுகள்; விவசாயிகள் கிளர்ச்சிகள்; கட்சித் தகராறுகள். நாட்டு மக்கள் ஒருவரை யொருவர் பகைவராகக் கருதுகிற துர்ப்பாக்கியமான நிலைமை. இதற்கெல்லாம் தீர்வுதான் என்ன?

மகாத்மாவின் வழியைத் தவிர வேறு ஒன்றும் இந்தக் குறுகிய மனப்பான்மையைப் போக்காது என்ற முடிவுக்குத்தான் நாங்கள் வரவேண்டியிருந்தது. அன்பும் சத்தியமும் இன்றைய அவசரத் தேவை. பொதுமக்களுக்கு அமைதியான வாழ்க்கையும் முன்னேற்ற வசதிகளும் தேவை. மகாத்மாவை மறந்தால் அராஜகமும் குழப்பமும்தான் வந்து சேரும்.

ஆனால் மகாத்மாவைப் பற்றி இன்று யார் நினைக்கிறார்கள்? அவர் பாடப் புத்தகத்துள் போய்ப் புகுந்து கொண்டு விட்டார்.

தஞ்சைக்குப் பிறகு மாணிக்கோரை, ஐயம்பேட்டை, பாபநாசம், சுவாமிமலை, கும்பகோணம் என்று வந்து சேர்ந்தோம். வழியில் உள்ள ஆலயங்களையும் நாங்கள் போய்ப் பார்க்க மறக்கவில்லை. கூட்டங்களில் எங்கள் அநுபவங்களைப் பற்றிக் கூறினோம். எங்கள் கூட்டத்தில் வந்து பேசிய உத்தியோகஸ்தர்கள், நகரசபை சேர்மன்கள் எம்.எல்.ஏ.க்கள் எல்லோருக்கும் இந்த யாத்திரை மகிழ்ச்சியைக் கொடுத்தது என்பதைக் கண்டோம்.

கும்பகோணத்தில் வழியில் ஒரு பெண் என்னிடம் வந்து, "இது என்ன ஸ்டிவரக்கா?" என்று கேட்டாள். எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. மாணவர்கள் கூடினால் ஸ்டிரைக் தானா? நான் அவளுக்கு எங்கள் யாத்திரையைப் பற்றி விளக்கிக் கூறினேன்.

கும்பகோணத்தை விட்டு வலங்கைமான், செம்மங்குடி, நீடாமங்கலம், வழியாக மன்னார்குடிக்குச் செல்லும் வழியில் உப்புச் சத்தியாக்கிரக இயக்கத்தில் கலந்து கொண்ட ஒரு பெரியவரைச் செம்மங்குடியில் சந்தித்தோம். பல கேள்விகள் கேட்டார். பழைய நினைவுகளைக் கூறி உணர்ச்சி வசப்பட்டார்.

மன்னார்குடிக்கு அடுத்த கோட்டூரில் எங்கள் மாணவிகளில் ஒருத்தியைத் தேள் கொட்டி விட்டது. எங்கள் அத்தனை பேருக்கும் தேள் கொட்டியது போல் உணர்ந்தோம். அவளை உடனே சிகிச்சைக்கு டாக்டரிடம் அனுப்பினோம். எங்களுக்கெல்லாம் ஒரே கவலை. ஆனால் மறுநாளே அவள் ஜீப்பில் ஏறாமல் எங்களோடு நடக்க வந்து விட்டாள். வலி தெரியாமல் இருக்க அவள் கையாண்ட புது வழி இது.

போகும் இடங்களி லெல்லாம் பொது மக்கள்தான் வரவேற்க வந்தார்கள் என்றால் வழியில் ஐந்தாறு பாம்புகளும் வந்ததைப் பார்த்து எங்களுக்கு வேடிக்கையாக இருந்தது. பாம்பென்றால் படையும் நடுங்குமாமே! அந்தப் பழமொழி பொய்த்து விட்டது. நாங்கள் நடுங்கவும் இல்லை; ஓடவுமில்லை. அவைதான் பயந்து அடித்துக் கொண்டு ஓடி மறைந்தன!

திருத்துறைப்பூண்டியில் ராஜாஜியின் சத்தியாக்கிரகத் தொண்டர்களுக்கு உணவும் இடமும் அளித்ததற்காக ராமச்சந்திர நாயுடு என்ற மிராசுதாரைக் கைது செய்து கொண்டு போனார்களாம். அவர் குடும்பத்தாரைப் பார்த்து எங்கள் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டோம்.

திருத்துறைப்பூண்டிக்குப் பிறகு வேதாரண்யம் வரையில் எங்களை வரவேற்ற முறையே மாறுபட்டு விட்டது. தப்பு, தாரை தப்பட்டை சகிதம் மக்கள் ஆங்காங்கே வந்து சேர்ந்து விட்டார்கள். ராஜாஜி நடத்திய போராட்ட காலத்தில் உச்சகட்ட ஊர்கள் அவை. ஒரு கணக்குப்பிள்ளை தம்முடைய சொற்பமான நிலமான ஒரு மனைக் கட்டையே சாஸனம் எழுதி வைத்து, அந்த இடத்தில் சத்தியாக்கிரகிகளுக்குத் தங்க இட வசதி செய்து கொடுத்தாராம். அவர் நிலைமை இன்று என்ன என்று கேட்காதீர்கள்! ரொம்பப் பரிதாபம்!

யாத்திரையின் இறுதிக் கட்டமான வேதாரண்யத்துக்குக் கரும்பம்பலம் வழியாக வந்தடைந்தோம். சர்தார் வேதரத்தினம் பிள்ளை உப்புச் சத்தியாக்கிரகத்தை நடத்திக் கொடுத்த தீரர். அதனாலேயே சர்தார் என்னும் பட்டத்தை ராஜாஜி அவருக்குச் சூட்டினாராம். இன்று அவர் இல்லை. அவர் மகன் திரு அப்பாக்குட்டி இருக்கிறார். அவர் உருவாக்கிய கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலம் இருக்கிறது. தேசிய பரம்பரையில் வளர்ந்த சிந்தனை இருக்கிறது. இங்கேதான் நாங்கள் தங்கினோம். கரும்பம்பலம் எம். எல். ஏ. வேங்கடாசலத் தேவரும் இன்னும் பலரும் சேர்ந்து யாத்திரையாக வந்த மாணவர் குழாத்தை ஒரு குறையும் நேராதவாறு கவனித்துக் கொண்டார்கள்.

உப்புச் சத்தியாக்கிரக நினைவாக எழுப்பியுள்ள ஸ்தூபியைப் பார்த்துவிட்டு வருகிற போது பழைய நினைவுக்கு அஞ்சலியாக உப்பும் எடுத்துக் கொண்டு வந்தோம். கருத்தரங்குகளில் கலந்து கொண்டோம். காரசாரமான விவாதங்கள் நடத்தினோம். நற்சான்றிதழ்கள் பெற்றுக் கொண்டோம்.

உப்பிட்டவரை உள்ளளவும் நினைக்க வேண்டும் என்பார்கள் இல்லையா? எங்கள் யாத்திரைக்குப் பெரிதும் உதவியாக இருந்த திருச்சி தஞ்சைக் கலெக்டர்கள், ஆங்காங்கே விருந்து படைத்த புண்ணியவான்கள், இளநீரும் வேர்க்கடலையும் அளித்த அமுதினும் இனிய அன்பர்கள், ஆசி வழங்கிய பெரியோர்கள், கண்ணும் கருத்துமாக எங்கள் யாத்திரையைத் தலைமை தாங்கி ஒரு குறைவுமின்றி முடித்துக் கொடுத்து, ஊருக்கும் அனுப்பி வைத்த, எங்கள் தலைவர் வி. ஆர். ஆர். மற்றும் வந்தவர்கள், பார்த்தவர்கள், அத்தனை பேருக்கும் நன்றியைத் தெரிவிப்பதோடு மறக்காமல், நினைத்துக் கொண்டும் இருப்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இன்னும் ஒன்றே ஒன்று. திருத்துறைப் பூண்டியில் ஒரு மாணவி, "இந்தக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக உங்களுக்கு ஒரு நாளைக்கு எத்தனை பணம் தருகிறார்கள்?" என்று எங்களிடம் ரகசியமாக வந்து கேட்டாள். பாவம், அவளுக்கு என் அநுதாபம் கலந்த நன்றி உரித்தாகுக.

**நடப்போம் நடப்போம்**
**காந்திவழி நடப்போம்!**



## தாக சாந்தி!

மேற்கிந்தியத் தீவுகளிலுள்ள கிங்ஸ்டனில் 1962ம் வருஷம் பிப்ரவரி மாதம் இரண்டாவது டெஸ்ட் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. மேற்கிந்தியத் தீவு பௌலர் ஹால், பம்பரங்களையும் பீமர்களையும் வீசி இந்தியக் கோஷ்டியைத் திணற அடித்துக் கொண்டிருந்தார். ஹால் வீசிய வேகமான பந்து நட்கர்ணியின் காலைக் கடுமையாகத் தாக்கிவிட்டது. பந்து பட்ட வேகத்தில் நட்கர்ணி நிலைகுலைந்து விழவிருந்தார். அச்சமயத்தில் ஸ்லிப்பில் நின்று கொண்டிருந்த காப்டன் வொர்ரல் வேகமாக ஓடிவந்து நட்கர்ணியைத் தாங்கிப் பிடித்துக் கொண்டார். நட்கர்ணி தலை சுற்றிக் கண்பார்வை மங்கிப் போய்த் தவிப்பதைப் பார்த்துக் காப்டன் வொர்ரல், "உங்களுக்கு ஒரு தம்ளர் தண்ணீர் கொண்டு வரச் சொல்லட்டுமா?" என்று கேட்டார்.

"கவலைப்படாதீர்கள் காப்டன்! அவர் இன்னும் சில கணங்களில் பெவிலியனுக்கே சென்று தாகசாந்தி செய்துகொள்ள வசதியாக விரைவில் 'அவுட்'டாக்கி அனுப்பி வைக்கிறேன்!" என்று ஹால் முழக்கினார்.

ஹாலின் கேலிப் பேச்சு நட்கர்ணியின் உள்ளத்தைத் தாக்கிவிட்டது. அவர் தாகசாந்தி செய்து கொள்ள விரும்பாமல் மறுபடியும் மட்டை பிடித்து ஆடக் கிளம்பி விட்டார். அதோடு மட்டுமல்ல; போர்டே 'அவுட்'டாகிப் போனதும் இன்ஜினியரோடு சேர்ந்து நின்று ஆடி நட்கர்ணி 78 ரன்கள் எடுத்தார். காலில் அடிபட்டிருந்தும் இப்படி அவர் அரிய சாதனையைப் புரிந்தார். ஹாலின் கேலிப் பேச்சு நட்கர்ணியை அபாரமாக ஆட வைத்தது. கேலிப்பேச்சும் விளையாட்டு சிறக்க உறுதுணையாக இருந்திருக்கிறது!

— குண்டுமணி

# ராமாயணம்

## ராஜாஜி

இப்படி ராமனுக்குத் தன் மனைவியை இழந்த துக்கமும் அரக்கன் மேல் உண்டான கோபமும் வளர்ந்து பொங்கி வந்ததைச் சுக்ரீவன் பார்த்துக் கொஞ்சம் கவலைப்பட்டான்.

பரஸ்பர சிநேகத்தைப் பற்றியும் சகாயத்தைப் பற்றியும் பிரதிக்ஞை அக்கினி சாட்சியாக எடுக்கப்பட்டிருந்த போதிலும், எந்தக் காரியம் முன் நடைபெற வேண்டும், எது பின்னால் நடைபெற வேண்டும் என்கிற பிரச்னை சுக்ரீவன் மனத்தில் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்தது. ராமனுடைய கோபாவேசத்தையும் துக்கத்தையும் சுக்ரீவன் நன்றாக உணர்ந்தான். அவனோடு வாதம் செய்வதில் பயனில்லை. அப்படிச் செய்தால் ராமன் மனத்தில் தன்னைப் பற்றிச் சந்தேகம்கூட உண்டாகலாம். புதிதாக ஏற்பட்ட நட்பு சேதப்படும் என்று எண்ணினான். உடனே சீதையைத் தேடுவதிலும் ராவணனைத் தாக்கும் வேலையிலும் புகுந்து விட்டால் வாலி என்ன செய்வானோ? அண்ணன் வாலி வானர ராஜ்யப் பதவியில் இருக்கும்போது சுக்ரீவனுடைய பலம் எந்தமட்டுக்குச் செல்லும்? ராமனுடைய காரியம் வெற்றியடைவதுகூடச் சந்தேகமாகப் போகும் என்றெல்லாம் யோசித்தான். ஆனபடியால் முதல் வேலையாக வானர ராஜ்யத்தை மறுபடியும் தான் அடைந்து விட வேண்டும். இருவருடைய காரியசித்திக்கும் இது அவசியம் என்ற முடிவுக்கு வந்தான். நீதி சாஸ்திரமும் ராமனுடைய மன நிலையும் உணர்ந்து சமத்காரமாக நடந்து கொள்ளத் தீர்மானித்தான்.

"இந்த மகாபாவி அரக்கனுடைய பலபராக்கிரமும் இருப்பிடமும் நான் நன்றாக அறியேன். அவன் சீதையை எங்கேகொண்டுபோய் வைத்திருக்கிறான் என்பது தெரியாது. ஆயினும் நான் உனக்குச் சத்தியம்செய்து வாக்குறுதி கொடுக்கிறேன். சீதையை எங்கே வைத்திருந்தாலும் கண்டுபிடித்து, அவள் இருக்குமிடமும் கண்டு, அரக்கனை வதம் செய்யும் மார்க்கத்தையும் தேடி முடிக்கப் போகிறேன். உனக்குச் சந்தேகம் வேண்டாம். துக்கப்படாதே. தைரியம் இன்றியமையாத மன நிலை. அரக்கனைக் கண்டுபிடித்து அவனையும் அவன் குலத்தையும் வேரோடு அறுத்து அழிப்போம். உன் வீரம் வீண் போகாது. அரக்கனை வதம் செய்து, உன் பௌருஷத்தை நாட்டிப் புகழடைவாய். மனச் சோர்வு வேண்டாம்.

"என்னைப் பார். நானும் உன்னைப் போல் மனைவியை இழந்தும் ராஜ்யத்தி



லிருந்து துரத்தப்பட்டும் அவமானப்பட்டு வருகிறேன். ஆயினும் துக்கத்தின் வேகத்தை அடக்கிக் கொண்டு தைரியத்தைக் காத்து வருகிறேன். நான் ஒரு வானரன். என்னால் தைரியமாக இருக்க முடியுமானால் உனக்கு இது ஒரு கஷ்டமா? கண்ணீர் விடாதே. பொங்கும் துக்கத்தைத் தடுத்துக் கொள். உன்னைப் போன்ற ஜிதேந்திரியர்கள் பயம், துக்கம் இவற்றால் உள்ளம் தளர்ந்து போகாமல் மனத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். இல்லாவிட்டால் சோகத்தில் சிக்கிக் கொண்டு சமுத்திரத்தின் நடுவில் பெருங் காற்றால் அலைக்கடிக்கப்பட்ட ஓடத்தைப் போல் கவிழ்ந்து போவோம். சோகத்துக்கு இரையாகப் போனோமானால் ஒரு காரியமும் சாதிக்க முடியாது. ஆனபடியால், நண்பனே, துக்கத்தை அடக்கியாள்வாய். உன்னை நான் வருந்திக் கேட்டுக் கொள்கிறேன். துக்கம் நம்மை இழுத்துக் கொண்டே போய்த் தோல்விப் பள்ளத்தில் தள்ளிவிடும். உள்ளத்தில் தைரியத்தை நிலை நிறுத்திக் கொள். நான் உனக்கு உபதேசம் செய்யும் தன்மை பெற்றவனல்ல. நண்பன் என்கிற உரிமையில் எது உசிதம்



என்று எனக்குத் தோன்றுகிறதோ, அதைச் சொல்லுகிறேன். உனக்குத் தெரிந்த விஷயத்தையே ஞாபகப்படுத்துகிறேன். அவ்வளவே.''

இப்படிச் சுக்ரீவன் மிகப் பிரியமாகச் சொன்னதெல்லாம் ராமன் உள்ளத்தில் பதிந்தது. கண்ணீர் நிறைந்து பெருகிய கண்களைத் துடைத்துக் கொண்டு சுக்ரீவனை ஆலிங்கனம் செய்து கொண்டான். சீதையின் ஆபரணங்களையும் மேல் வஸ்திரத்தையும் கண்டதினால் உண்டான மனக் கலக்கத்தை நிறுத்திக் கொண்டு தனக்குரிய மனோதிடத்தைத் திரும்ப அடைந்தான்.

''உன்னுடைய சிறந்த நட்பை அடைந்தேன், சுக்ரீவனே! உன் யோசனைப்படி நடப்பேன். சீதையைத் தேடும் காரியத்தைப் பற்றி நன்றாக யோசிப்பாய். உன் காரியத்தை என் காரியமாகவே நான் எண்ணி எல்லாம் செய்வேன். இது உறுதியென்று நம்புவாய். இது வரையில் நான் எப்போதும் பொய் சொன்னதில்லை. இனியும் சொல்லப் போவதில்லை. நம்முடைய நட்பு என்றைக்கும் பொய்யாகாது. சத்தியம் செய்கிறேன். உன் கஷ்டத்தைத் தீர்க்கும் வழியைக் கூசாமல் சொல். நான் செய்து முடிப்பேன்'' என்றான் ராமன்.

ராமனுடைய சொற்களைக் கேட்ட சுக்ரீவனும் அவனுடைய மந்திரிகளும் எல்லை கடந்த மகிழ்ச்சி அடைந்தார்கள். தங்களுடைய கஷ்டங்கள் முடிந்து, சுக்ரீவன் மீண்டும் வானர ராஜ்யம் பெறுவது நிச்சயம் என்று தீர்மானித்துக் கொண்டார்கள்.

## 56. சுக்ரீவன் கதை

சுக்ரீவன் தன் சகோதரன் வாலிக்கும் தனக்கும் உண்டான விரோதத்தின் கதையை ராமனிடம் விவரமாகச் சொன்னான்.

''என் அண்ணன் வாலி வானர ராஜ்யப் பட்டாபிஷேகம் பெற்று கிஷ்கிந்தையில் அரசு புரிந்து வந்தான். மகா பராக்கிரமசாலி. அவனிடம் அன்பும் பக்தியும் குறைவின்றிச் செலுத்திக் கொண்டு நான் யுவராஜனாக இருந்து வந்தேன். வாலிக்கும் மாயாவி என்கிற அசுரனுக்கும் பழைய விரோதம். ஒரு நாள் ராத்திரி அந்த அசுரன் கிஷ்கிந்தைக்கு வந்து வாலியைப் போருக்கு அழைத்தான்.

''அவன் இரவில் போட்ட கர்ஜனையைக் கேட்டுக் கோபம் கொண்டு தூங்கிக்கொண்டிருந்த வாலி எழுந்து அவனை உடனே எதிர்க்க வெளியேறினான். நானும் அவனுக்கு உதவியாகக் கூடவே சென்றேன். நிலா வெளிச்சத்தில் நாங்களிருவரும் வருவதைப் பார்த்து மாயாவியானவன் ஓடி ஒரு குகைக்குள் நுழைந்தான். வாலியும் அவனைத் துரத்திக் கொண்டு குகைக்குள் புகுந்தான். நானும் உள்ளே புகப் போனேன். வாலி என்னை வேண்டாம் என்று தடுத்து விட்டான். தான் ஒருவனாகவே அந்தத் துஷ்டனைக் கொல்ல வேண்டும் என்று சொல்லி, என்னை அந்தக் குகையின் வாயிலில் வெளியே நிற்கச் சொன்னான். சொல்லி விட்டு அவன் உள்ளே புகுந்து சென்றான்.

''உள்ளே சென்றவன் பல நாட்களாகியும் திரும்பி வரவில்லை. அண்ணனுக்கு என்ன நேர்ந்ததோ என்று நான் கவலைப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் குகைக்குள் அசுரர்களுடைய பெருங் கூக்குரல் கேட்டது. அதன் கூடக் குகையிலிருந்து ரத்த வெள்ளம் பெருகி வந்தது. இதைக் கண்டதும் வாலியை மாயாவியும் பல அசுரர்களும் சூழ்ந்து கொன்று விட்டார்கள் என்று தீர்மானித்துக் கொண்டேன். அசுரர்கள் வந்து என்னையும் தாக்குவார்கள் என்று எண்ணி ஒரு பெரும் பாறைக் கல்லைக் குகை வாயிலில் வைத்து மூடி விட்டேன்.

''கிஷ்கிந்தைக்கு வருத்தத்தோடு திரும்பினேன். வாலி இறந்தான் என்று யாருக்கும் சொல்லாமலே ராஜ காரியங்களைப் பார்த்து வந்தேன். பிறகு வானரப் பிரஜைகள் நிர்ப்பந்தித்தார்கள். 'அரசனில்லாமல் போனால் ராஜ்யம் பாழாகப் போகும். வெகு நாளாகியும் வாலி திரும்பவில்லை. நீயே பட்டாபிஷேகம் செய்து கொண்டு அரசு புரிவாய்' என்று வற்புறுத்தினார்கள். நானும் அதற்கு இணங்கினேன்.

''சில காலம் கழித்து மாயாவியையும் அவனுடைய துணையாட்களாக வந்த அசுரர்களையும் கொன்றொழித்து விட்டு வாலி திரும்பினான். குகை அடைபட்டிருப்பதைப் பார்த்து, 'சுக்ரீவா! சுக்ரீவா!' என்று உள்ளே யிருந்து கத்திப் பார்த்தான். நான் அவ்விடம் இல்லையானபடியால் எனக்கு இது ஒன்றும் தெரியாது. அவன் என்மேல் மகா கோபம் கொண்டு கற் பாறையை உதைத்துத் தள்ளிவிட்டுக் கிஷ்கிந்தைக்குள் பிரவேசித்தான். (தொடரும்)

# நாய் தானே!

காளிந்தீசரண் பாணிக்ராஹி

ஒரியா

ஜானியும் டோராவும் குழந்தைப் பிராயம் முதற் கொண்டே தோழர்கள். எந்தக் காரணத்தை முன்னிட்டும் அவர்கள் பிரியவே மாட்டார்கள். டோரா இங்கிலாந்து நாட்டு கிரேஹவுண்ட். அவனது மூதாதையர்கள் லண்டன் மாநகரில் வசித்தவர்கள். பூர்வீகத்துக்கு ஏற்ப அவனுக்குப் பெயரும் அமைந்தது. ஆனால் ஜானி ஒரிஸ்ஸாவின் அடர்ந்த கானகங்களில் வாழும் மானைப் போன்றவன். டோரா மாமிச பட்சிணி; ஜானி எளிமையான சைவ உணவையே ஏற்பான்.

ஜானி நோய்வாய்ப் பட்டான். டோரா இரவும் பகலும் சதா அவன் பக்கத்திலேயே இருந்தான். அதனால் அவனுக்குரிய உணவைக்கூட அங்கேயே—அவன் அருகிலேயே தரும்படியாயிற்று.

டோரா ஒரு முறை காலை ஒடித்துக்கொண்டான். அவனது சரீரம் திடகாத்திரமானது என்பதை உணர்ந்திருந்த ஜானிக்கு நீண்ட காலம் அவன் இருந்த இடத்தை விட்டு நகராமல் இருக்க நேர்ந்தது ஏன் என்று புரியவில்லை.

ஜானி தன் அன்பையெல்லாம் டோராவிடம் கொட்டினான். ஜானியின் பிரியமான பராமரிப்பினால்தானோ என்னவோ டோரா நலம் பெற்று மெல்ல நடமாட ஆரம்பித்தான். வசந்தமும் அதை யொட்டி மலர்ச் செல்வமும் தோன்றின. நண்பர்கள் இருவரும் விளையாடினார்கள்; தென்றலை எதிர்த்துத் தலைதெறிக்க ஓடினார்கள். இந்த இன்ப வெள்ளம் எந்த மர்மமான உலகிலிருந்து பெருக்கெடுக்கிறது என்று கண்டு பிடிக்க அவர்கள் ஓடுவது போலிருந்தது. டோரா ஓடிய போது பூமியை ஒட்டினாற்போல் நீட்டப்பட்ட ஒரு கயிறு போல் தோற்றமளித்தான். அவனது கால்கள் உடலிலிருந்து தனித்துப் பிரித்து இனம் கண்டுகொள்ள முடியாதபடி இருந்தன. ஆனால் ஜானியின் பந்தய ஓட்டம் பாரிஸ் நடனம் போல் தோன்றியது. அவனது கால்கள் பூமி மட்டத்துக்கு மேல் மிதந்தன. அவன் ஓடினானா? காற்றிலே ஆடினானா?

ஜமீன்தார் இரு விலங்குகளிடமும் அளப்பரிய ஆசை வைத்திருந்தார். அன்றாடம் வேலைச் சுமை தீர்ந்த பிறகு காரியாலயத்துக்கு முன்னாலிருந்த புல் தரையில் அவர் காலாற நடக்கும்போது இவ்விரு விலங்குகளும் தங்கள் இனிய சகவாசத்தாலும் விளையாட்டுப் போக்குகளாலும் அவரை மகிழ்வித்தன. எஜமானர் துள்ளல் நடை போட, ஜானி தனது நீண்ட கழுத்தை அவரது கால்களில் உரசு



வான், அவரது கரங்களை நக்குவான். ஒருவேளை டோரா பின்தங்கி நின்றிருந்தால் அவன் விருட்டென்று முன்னால் ஓடுவான். எஜமானருக்கு எதிரே சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து தன் வாலை அடக்கத்துடன் ஆட்டுவான். சில சமயங்களில் அவரது கால்களுக்கிடையில் இவன் வழி கண்டுபிடித்துக் கொண்டு சென்று அவரது நடையின் வேகத்தைக் குறைப்பான்.

ஜானியைப் பேராசையுடன் நோக்கியவாறு பிற நாய்கள் வந்தால் உடனே அவன் பயத்தால் தன்னைச் சுருக்கிக் கொள்வான்; எஜமானருக்குப் பக்கத்தில் போய் ஒண்டிக் கொள்வான். டோரா, கம்பீர

மாக, சண்டை போடத் தயாராக முன்வந்து நிற்பான். உடனே அவனது இனத்தைச் சேர்ந்த பிறர் வாலைச் சுருட்டிக் கொண்டு பணிவுடன் பின்வாங்கிவிடுவார்கள். டோரா மகா பலசாலி என்பது அவர்களுக்குத் தெரியாததல்ல. மற்ற சாதாரணத் தெரு நாய்களைப் போலன்றி டோரா கௌரவத்தைக் காப்பவன். பயந்து தப்பி ஓடுபவர்களைத் துரத்தும் ஈனச் செயல்களில் அவன் இறங்க மாட்டான்.

ஜாலி, டோரா ஆகியோரின் தோழி ஜமீன்தாரின் ஆசை மகள். அவள் தன் நேரத்தின் பெரும் பகுதியை இவ்விரு விலங்குகளுடன் கழிப்பாள். ஓர் ஆயாவின் மேற்பார்வையில் அவள் தோட்டத்தில் மென்மையான புல்லிதழ்களைப் பறிப்பாள். ஜாலி மெல்ல வந்து தன் வாயை மென்மை துலங்க அவள் முன்னால் நீட்டிக் கொண்டு நிற்பாள். டோராவும் சீக்கிரமே தன் சிநேகிதியைப் பின்தொடர்ந்து வந்து தனது குட்டி எஜமானி அம்மாளைத் திருப்திப்படுத்த சில வித்தைகளைச் செய்வான்.

வராந்தாவில் சாய்வு நாற்காலியில் அமர்ந்து மெல்ல ஆடியபடி ஜமீன்தார் செல்ல நாய்களின் வேடிக்கை விளையாட்டுக்களைப் பார்ப்பார். கவலைகளால் தேய்ந்த அவரது உள்ளத்தில் குதூகலம் நிறையும். ஜமீந்தார் மிக நவீன காலச் சிந்தனைகளை உடையவர். நடத்தையில் இனிமையும், சாந்தமும் உள்ளவர். தமது நாட்டவர் முன்னிலையில் தூய சுதேசியாக — பைஜாமா, ஜுப்பா அணிந்து—தோற்றமளிப்பார். அயல் நாட்டவர் எதிரே முழுக்க முழுக்க ஐரோப்பிய நாகரிகத்தை மேற்கொண்டு விட்ட இந்தியர் போல் காட்சி தருவார். ஐரோப்பிய உயர் அதிகாரிகள் விடுமுறை தினங்களில் அவரது ஜமீன் காடுகளுக்கு வேட்டையாட வருவார்கள். அச்சமயங்களில் ஜமீன்தாரின் விருந்தோம்பும் பண்பு தாராளமாகச் செயல்படும். இதற்காகவே சகல வசதிகளுடன் கூடிய விருந்தினர் விடுதி விசேஷமாக நிர்மாணிக்கப்பட்டிருந்தது. இதே அளவுக்குத் தமது குத்தகைதாரர்கள் குடித்தனக்காரர்கள் ஆகியோரில் கல்வி அறிவுள்ள கௌரவம் மிக்க நண்பர்களிடம் அவர் விருந்தோம்பும் பண்பைக் காட்டினார். அவர்கள் அனைவரும் அவரவரது தகுதிக்கும் கௌரவத்துக்கும் ஏற்றபடி நடத்தப்பட்டனர். இவ்வாறெல்லாம் இருந்தாலும் பொதுமக்களின் கருத்து ஜமீன்தாருக்கு அனுசரணையானதாக இல்லை. வைதீகமானவர்கள் அவரை மதப் பற்றுஅற்றவர் என்றும் மற்றவர்கள் அவரைத் தாம்தூம்



ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த பூரி ஜில்லா கிராமமொன்றில் ஸ்ரீ காளிந்தி சரண பாணிகிராஹி 1901ம் ஆண்டு பிறந்தார். கட்டாக் ராவன்ஷா கல்லூரியில் பட்டதாரியானார். அரசியலில் ஈடுபாடு காட்டியதனால் நிரந்தரமான உத்தியோகம் எதையும் ஏற்கவில்லை. பள்ளிப் பருவத்திலேயே எழுத்துக் கலையிலே ஆர்வம் கொண்டு கவிதை, கதை, கட்டுரைத் துறையில் சிறப்பான பணியாற்றினார். இவருக்குப் பெரும் புகழ் தேடித் தந்த 'மண் பொம்மை' என்ற நாவல் இந்திய மொழிகளனைத்திலும் வெளிவந்துள்ளது.

செலவு செய்பவர், கொடுமைப்படுத்துபவர் என்றும் சொன்னார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக அவர் ஐரோப்பியர் பலருடன் நெருங்கிப் பழகியதும் அவர்களது பழக்கவழக்கங்கள் பலவற்றை மேற்கொண்டதும் அவரது குணநலன்கள் பலவற்றை மறைத்து விட்டன. உண்மையில் அவரது உணவும் உடையும் பெரிதும் ஐரோப்பிய பாணியில் அமைந்திருந்தன. இவ்விஷயத்தில் அவர் தேவையான அளவு நிதானம் காட்டத் தவறி விட்டவர்.

அவரது நீண்டநாள் நண்பர் — போலீஸ் டி. ஐ. ஜி. செய்தி அனுப்பி யிருந்தார். கிறிஸ்துமஸ் சமயத்தில் தாம் மனைவி, குழந்தைகளுடன் வேட்டையாட வரப் போவதாக. ஆகவே, விருந்தினர் விடுதியில் எல்லாம் சுத்தம் செய்யப்பட்டன. அவர்கள் வருவதற்கு நாலு நாட்கள் முன்னதாகவே கானகத்தில் கூடாரங்கள் தயாராகப் போடப்பட்டன. தேவையான சாமான்களை வாங்கி வர ஆட்கள் கட்டாக்குக்கு அனுப்பப் பட்டனர். ஜமீன்தாரின் பணியாட்கள் அதிகாரிகள் எல்லோரும் சுறுசுறுப்பாக வேலைகளைக் கவனித்தனர். ஒருவருக்கும் ஒருநொடி நேரம் கூட ஓய்வில்லை. எல்லாரும் ஜமீன்தார் மீது அவர் இல்லாதபோது வசைமாரி பொழிந்தனர்.

மதிப்புமிக்க விருந்தினரை எதிர்கொண்டு அழைக்க ஜமீன்தார் சிறிது தூரம் காரில் சென்றார். டி. ஐ. ஜி. சாஹேப் குறித்த நேரத்துக்கு வந்து சேர்ந்தார். வரவேற்கச் சென்ற ஜமீன்தார், தமது நண்பர், அவரது மனைவி மக்கள் ஆகியோருடன் ஒன்றி மகிழ்ந்தார்.

நிகழ்ச்சி நிரல் தயாராயிற்று. வந்தவர்கள் அன்று இரவு விருந்தினர் விடுதியில் தங்குவதென்றும் மறு நாள், காலை உணவுக்குப் பின் வேட்டையாடப் புறப்படுவதென்றும் தீர்மானமாயிற்று.

வேட்டையாட வேண்டிய இடம் ஜமீன்தாரின் வீட்டிலிருந்து சுமார் பதினாறு மைல் தொலைவில் இருந்தது. அந்தச் சுற்று வட்டாரத்தில் மனிதர்களின் குடியிருப்பே ஏதும் கிடையாது. வேலைக்காரர்கள், சமையல்காரர்கள் ஆகியோர் உணவுப் பொருள்களுடனும் மற்ற சாமான்களுடனும் முன்னதாகவே சென்று விட்டனர். விருந்தினர், ஜமீந்தார், டி. ஐ. ஜி.யின் இரு வேட்டை நாய்கள், ஜமீன்தாரின் டோரா, ஜானி ஆகியோர் ஒரு மோட்டார் காரில் பின் தொடர்ந்தனர். ஜானியைப் பின்னோடு அழைத்துச் செல்வது அவசியமில்லை என்பது தெளிவு. ஆனால் டோரா வேட்டையின் போது மிகவும் உதவியாக இருப்பாள். அவளை உற்சாகமாக வைத்திருக்கவே ஜானி அழைத்துச் செல்லப்பட்டான்; — சந்தர்ப்பம் கிடைத்தால் டோரா ஜானியிடம் திரும்பி ஓடிப் போய் விடுவாள் என்பதால். குட்டி எஜமானியின் அனுமதியும் இதற்காகக் கோரிப் பெறப்பட்டது. அவன் தன் விளையாட்டுத் தோழர்கள் இருவரும் மூன்று நாட்களுக்கு மேல் தன்னைப் பிரிந்திருக்கக் கூடாது என்று தன் தந்தைக்குக் கண்டிப்பான உத்தரவு போட்டிருந்தான்.

ஆனால் கிறிஸ்துமஸ் கோலாகலத்தினூடே ஐந்து நாட்கள் வெகு வேகமாக ஓடிச் சென்று விட்டன. ஏகாந்தமான இடமாயினும் விருந்தினர் மிக நன்றாகக் கவனித்துக் கொள்ளப் பட்டனர். ஆகவே, சந்தடி மிகுந்த நகர வாழ்க்கைக்குப் பிறகு கானகத்தின் தனிமை விருந்தினருக்கு மகிழ்ச்சியையே அளித்தது.

மதியச் சாப்பாட்டுக்குப் பிறகு ஜமீன்தாரும் டி.ஐ.ஜி.யும் வேட்டைக்குக் கிளம்பினர். கடந்த நாலு நாட்களைப் பெண்கள் ஆட்டமும் பாட்டமுமாகக் கழித்திருந்தனர். அந்த அலுப்பு காரணமாய் இன்று புருஷர்களுடன் செல்லும் மன நிலையில் பெண்மணிகள் இருக்கவில்லை.

வேட்டைக்கு என்று வந்தவர்கள் இன்னும் முழுசாக ஒரு பூனையைக்கூடக் கொல்லவில்லை. என்றாலும் வேலைக்காரர்கள் சென்ற சில தினங்களாகப் பட்ட சிரமத்தினாலேயே மிகவும் களைப்புற்று இருந்தனர். ஆயினும் அவர்களில் இரண்டு மூன்று பேர் வேட்டைக்கு எஜமானர்களுடன் கிளம்பவேண்டியிருந்தது.

ஓரிரு தடவை பட்சிகளைச் சுட முயன்று குறி தப்பி விடவே இனி அவற்றை வீழ்த்த முயலுவது அடியோடு முடியாத காரியமாயிற்று. பட்சிகள் திரும்பி வந்து உட்கார அவகாசம் அளிக்கும் பொருட்டு வேட்டைக்காரர்கள் பக்கத்துக் கானகத்துக்குச் சென்றனர். அங்கு சற்று நேரம் பிரயோஜனம் ஏதுமின்றி அலைந்து திரிந்தனர். வேலைக்காரர்கள் குண்டுக்கு இரையாகக் கூடிய பிராணிகள் ஏதேனும் அகப்படுமா என்று தேடிப் பார்க்குமாறு அனுப்பப்பட்டார்கள். ஆனால் யாருக்குத் தெரியும், அவர்கள் எங்கோ மறைவாக உட்கார்ந்து அரட்டை அடித்துக் கொண்டிருக்கலாம்; அல்லது சுருட்டுப் பிடித்துக் கொண்டிருக்கலாம்; இல்லையேல் கட்டை விரலால் உள்ளங் கையில் உள்ள புகையிலையை அழுத்திப் பொடி செய்து கொண்டிருக்கலாம். நண்பர்கள் இருவரும் கானகத்தில் ஜாக்கிரதையாகவும் பதுங்கிப் பதுங்கியும் சென்று துப்பாக்கிக்கு இரை தேடினர். அவர்களையும் அறியாமல் அவர்கள் முகாமிலிருந்து நாலு மைல் தூரம் வந்து விட்டனர்.

பகல் போது முடியும் தறுவாயிலிருந்தது. சூரியன் அருகில் உள்ள குன்றின் பின்னால் மறைந்து கொண்டான். அவனது செங்கதிர் கிரணங்கள் மேற்கு வானத்தில் செம்மை நிறத்தைப் படரச் செய்து கொண்டிருந்ததை அந்த வேடர்கள் இருவரும் கவனிக்கவில்லை. ஏனெனில், அவர்கள் பேராசையுடன் உயிருள்ள மிருகமொன்றின் குருதிச் சிவப்பைத் தேடிக் கொண்டிருந்தனர். ஒரு கரிய பெரிய மேகம் கிழக்கு வானில் தோன்றியது. அவர்கள் கண்கள் நிலத்தில் பதிந்திருக்கையில் வானத்தைப் பற்றி ஏன் கவலைப்படப் போகிறார்கள்? வேலைக்காரர்கள் ஆபத்தை உணர்ந்தவர்களாய்த் தங்கள் எஜமானர்களைத் தேடக் கிளம்பினார்கள். பட்டப் பகலில்கூட அந்த அடர்ந்த காட்டில் அவர்களைத் தேடிக் கண்டு பிடிப்பது மிகவும் கடினமாக இருந்திருக்கும்.

நண்பர்கள் இருவரையும் அந்த இருளில் வேலைக்காரர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. மழைக்கு முன்னோடியாகக் குளுமை

யான காற்று 'குப்'பென்று வீசிய போது தான் அவ்விருவரும் முகாமுக்குத் திரும்பத் தொடங்கினர். புயல் அவர்களைப் பயங்கரமாகத் தாக்கிற்று. கற்றியும் கும்மிருட்டு. சுழல் காற்று காட்டில் களேபர ஓலத்தை எழுப்பியது. மிகவும் சிரமப்பட்டும் சர்வஜாக்கிரதையாகவும் அவர்கள் வந்த வழியைக் கண்டுபிடித்துச் சென்றனர். உள்ளெலும்பு வரை ஈரம் அடுருவும் அளவுக்கு நனைந்து மேல்மூச்சு கீழ் மூச்சு வாங்க ஒரு வழியாகக் கூடாரத்துக்குள் நுழைந்தனர். அப்போது இரவு மணி எட்டு.

இரவுச் சாப்பாட்டுக்கு ஓர் ஏற்பாடும் செய்யப்படவில்லை. ஒரு பறவைகூடச் சுடப்படவில்லை. மறு நாள் காலை அங்கிருந்து புறப்பட்டு விடுவதெனத் தீர்மானமாகி இருந்ததுடன் துப்பாக்கிக்கு இரை அகப்படாமல் போகும் என்று யாருக்கும் லவலேசமும் சந்தேகமிருக்கவில்லை. ஜமீன்தாரின் வீடு பதினாறு மைல் தொலைவில் இருந்தது. கூப்பாடு போடும் இந்தப் புயலில் அவ்வளவு தூரம் சென்று சாப்பாடு கொண்டு வருவதென்பது சாத்தியமா? மோட்டார் செல்லும் காட்டு வழி இந்த மழையில் ஒரே சகதியாகி விட்டிருக்கும். ஜமீன்தாருக்கும் டி. ஐ. ஜி. சாகேபுக்கும் தகுதியான உணவு கிடைக்கக் கூடிய இடம் சமீபத்தில் ஏதுமில்லை. புலாலைப் பொறுத்தவரையில் இன்று இரவு அவர்களுக்கு உண்ணாவிரதம்தான். இன்றைய தினம்தான் எத்தனை ஆபத்துகளையும் கஷ்டங்களையும் அவர்கள் அநுபவித்து விட்டார்கள்! என்ன செய்வது என்று புரியாமல் எல்லோருமே தவித்தார்கள்; பொறுமை இழந்தார்கள். வேட்டையாடக் கிளம்புவதற்கு முன்னால் இரவு போஜனத்துக்கான புலால் குறித்து ஜமீன்தார் சில ஏற்பாடுகளைச் செய்ய விழைந்தார். ஆனால் சாகேப் அவரைத் தடுத்து விட்டார். ஏதாவது இரை கிடைக்காமல் போகாது என்று உறுதி கூறினார். ஆனால் இப்போது என்ன செய்வது? ஒரு காரணமுமின்றி வேலைக்காரர்களை ஜமீன்தார் தமது கோபத்துக்கு இலக்காக்கினார்.

சாகேப் சிரித்த முகத்துடன் கூறினார்: "சரி, அப்படியானால் இரவுச் சாப்பாட்டுக்கு நான் ஓர் ஏற்பாட்டைச் சொல்கிறேன்."

ஜமீன்தார் புன்னகையுடன் கேட்டார்: "என்ன?"

"நீங்கள் அதைப் பொருட்படுத்தமாட்டீர்கள் என்று நம்புகிறேன்." — யோசனை மெதுவாக வந்தது: "அமர்க்களமான விருந்தாகிவிடும். அதைப் போன்றவை காட்டில் உங்களுக்கு ஏராளமாய்க் கிடைக்கும். யோசனை பிடிக்கிறதல்லவா?"

ஜமீன்தாருக்கு என்ன யோசனையை அவர் குறிப்பிடுகிறார் என்று முதலில் புரியவில்லை. சாகேப் பேச்சை முடித்ததும் அவர் நடுங்கினார். அவசரம் அவசரமாகப் பதிலும் சொன்னார்: "ஓ! அது பேஷான யோசனைதான்." தமது மதிப்புக்குரிய நண்பரின், விருந்தினரின் திட்டத்தை மறுத்துரைக்க அவரால் முடியவில்லை. ஆனால் ஜானியின் பெயரைக் குறிப்பிட்ட மாத்திரத்தில் அவர் இருதயம் பெரிதாகப் படபட வென்று அடித்துக் கொண்டது.

ஜானியின் சரித்திரம் பரிதாபகரமானது. அதனாலேயே ஜமீன்தாருக்கு அதன்மேல் பற்றுதல் மிகவும் அதிகம். ஒரு சமயம் தமது ஐரோப்பிய நண்பர் ஒருவருக்குத் தமது துப்பாக்கி சுடும் ஆற்றலை அவர் காண்பித்துக் கொண்டிருந்த போது அவன் அவருக்கு இலை ஆனான். அவன் அப்போது தன் தாயாரிடம் பால் குடித்துக் கொண்டிருந்தான். ஜமீன்தாரின் தோட்டாவுக்குத் தாய் பலியானாள். அநாதையான குட்டி வாயடைத்துப் போய் நின்றது. ஜமீன்தாரின் ஆள் அவன் அருகே சென்றான். அவன் அசையவில்லை. பயனென்ன, அவன் தன் தாய் தன் அருகிலேயே இருப்பதாக நிச்சயமாய் நம்பினான். களங்கமற்ற அவன் தோற்றம் ஜமீன்தாரின் நெஞ்சைத் தொட்டது. அந்த ஜந்துவிடம் பற்றுதல் கொண்டார். அவனைத் தம் உணவுக்காகவே கொல்ல வேண்டிய நாள் வரும் என்று அவர் கனவுகூடக் கண்டதில்லை. ஆனால் இவ்வளவு பெரிய கனவானை விருந்தினருக்கு இல்லை என்று சொல்லலாமா?

ஜமீன்தாரின் அங்கீகாரம் பெற்றதும் சாகேப் உள்ளம் மகிழ்ந்தார். அந்த மிருகத்தைத் தாமே கொல்லப் போகிறோம் என்ற எண்ணத்தில் அபரிமிதமான சந்தோஷம் அடைந்தார். நாள் தவறாமல் எதையாவது கொல்லாவிட்டால் அவர் மனம் நிம்மதி அடையாது. உலக யுத்தத்தின் போது ஏராளமான மனித உயிர்களை அழித்தவர் என்று பெயர் பெற்றிருந்தார் அவர். வேட்டையாடாத நாட்களில் தாடது ரூமிலையைக் குளுமையாக வைத்துக் கொள்ளத் தமது வீட்டில் வளரும் பட்சிகளில் எதையாவது தமது கையாலேயே கொல்வார். தமது கணவரின் இந்தப் பழக்கத்தை வியந்து போற்றும் முகமாகச் சாகிபா அம்மையார் பெருமிதத்துடன் கூறுவாள்: "அவர் ஒரு நாள் கொல்வதற்கு ஒன்றும் அகப்படாமல் போகவே தமது கழுத்தையே வெட்டிக் கொள்ள முற்பட்டார்" என்று!

டோராவும் ஜானியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தவாறு நெருக்கி அடித்துப் படுத்துத் தூங்கினர். ஜானியின் அருகில் இருக்கும்போது முன்பின் அறிமுகமில்லாத யாரும் டோராவை அணுகுவது எளிதல்ல. வேலைக்காரன் மதியா ஒருவனால்தான் அதைச் செய்ய முடியும்.

தன் எஜமானனின் கட்டளைப்படி மதியா ஜானியை அழைத்து வர வேண்டியவனானான்.



மானேஜர்: நீ என்ன, வேலை செய்யற இடத்திலே 'கம்'ன்னு இருக்க மாட்டேங்கிறே போலேயிருக்கே. இதுக்கு முன்னாலே எந்தக் கம்பெனியில் வேலை செய்தாய்?

பியூன்: 'கம்' கம்பெனியில் ஸார்!

—சீனு

அவனது காலடிச் சத்தம் கேட்டதும் டோரா விழித்துக் கொண்டு குரைத்தான். ஆனால் மதியாவின் குரல் அவனை வாளாவிருக்கச் செய்தது. மதியா ஜானியை எழுப்பி இழுத்துக் கொண்டு போன போது டோரா சும்மா இருக்கவில்லை. ஆத்திரத்தைத் தருவித்துக் கொண்டான். ஜானியைப் பின்தொடர்ந்து போக விரும்பினான். கடைசியில் மதியா அதற்கு இணங்க வேண்டியதாயிற்று. டோராவையும் சங்கிலியைப் பிடித்து அழைத்துப் போக வேண்டிய நிர்ப்பந்தம் அவனுக்கு ஏற்பட்டது.

டோரா நம்ப முடியாத அளவுக்குக் கெட்டிக்காரன்தான். இருந்தாலும் இந்த அகால நேரத்தில் தன்னிடமிருந்து ஜானியை வற்புறுத்திப் பிரித்து அழைத்துப் போக நினைப்பதன் காரணத்தை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. மதியா தானே டோராவைப் பிடித்துக் கொண்டு ஜானியை ஆட்களிடம் கொடுத்தான். இது டோராவின் மனத்தில் சந்தேகத்தை எழுப்பியது. ஆனாலும் அவன் இம்மியும் அசையவில்லை. சாகேப் தனது காட்டுமிராண்டித்தனமான வேட்கையைத் தணித்துக் கொள்ளத் தயாரானார். அவரது கத்தி லாந்தர் விளக்கொளியில் பளபளத்தது. ஒரு தோட்டாவை வீணாக்குவதை விட உயிரோடு அந்த மிருகத்தை வெட்டுவதையே அவர் பெரிதும் விரும்பினார்.

சமையல்காரர்கள் ஜானியின் கால்களைக் கட்டி அவனை இறுகப் பிடித்துக் கொண்டார்கள்; சாகேப் வெட்டும்போது அவன் அசைந்து கொடுத்துத் தொந்தரவு பண்ணக் கூடாது என்பதற்காக. ஜானிக்கு என்ன பயம்? அவன் அசங்காமல் நின்றான். தனது அன்பான எஜமானரும், தனது உயிரைப் பாதுகாப்பவருமான ஜமீன்தாரும் ஆபத்துக்கு உதவும் நண்பனான டோராவும்தான் அருகிலேயே இருக்கிறார்களே! அவனது கால்கள் இறுகக் கட்டப்பட்டபோது அவன் தனது இணைபிரியாத் தோழனையும் எக்காலத்திலும் தனது நம்பிக்கைக்குப் பாத்திரரான எஜமானரையும் மாறி மாறிப் பார்த்தான். ஜமீன்தார் தமது நண்பரின் மனைவியிடமும் அவர்களது புதல்விகளிடமும் பேசுவதில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ள முயன்றார். ஆனால் அவருக்குள் ஏதோ ஒன்று ஜானியைத் திரும்பிப் பார் என்று வற்புறுத்தியபடி இருந்தது. சிரிப்பிலும் சந்தோஷத்திலும் இறங்கி ஜானியைப் பற்றிக் கவலைப்படாதவர் போல் காணப்பட்டார். அவனைக் கடைக்கண்ணால் ஒரு தரம் பார்த்து விட்டால் போதும், உடனே அந்த மிருகம் அவரது அந்தரங்க ரகசியங்களைப் பகிரங்கப்படுத்தி விடும் — மனித பாஷையில் பேசி அவர்மீது குற்றம் சாட்டும் என்று பயந்தார்.

சாகேப்புடைய கையில் கத்தியைக் கண்டதும் டோராவின் சந்தேகம் வலுப்பட்டது. டி. ஐ. ஜி. கத்தியைத் துடைத்துச் சுத்தம் செய்து விட்டு எழுந்தார். ஜமீன்தாரது பார்வை அவரையும் அறியாமல் ஜானி மீது விழுந்தது. நீண்ட நேரமாகவே அவன் கருணை காட்டுமாறு பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறான் என்று அவருக்குத் தோன்றியது. அந்த ஏக்கம் மிகுந்த பரிதாபகரமான பார்வை! திடுதிப்பென்று அவர் எழுந்து ஏதோ காரணத்துக்காகக் கூடாரத்துக்குள் சென்று விட்டார்.

ஆனால் ஜானி மன்றாடிக் கேட்டுக் கொண்டதெல்லாம் டோராவுக்குப் புரிந்தது. எஜமானரின் பேரில் பதித்திருந்த ஏமாற்றம் மிகுந்த தன் பார்வையை ஜானி தன் அருமை நண்பன் பக்கமாகத் திருப்பியதும் டோராவுக்குக் குபுக்கென்று கோபம் பொத்துக் கொண்டு வந்தது. சாகேப்பின் நோக்கம் என்ன வென்பது அவர் கையில் கத்தியுடன் முன்னேறியதும் பளிச்சென்று டோராவுக்குப் புரிந்து விட்டது. இதே இடத்தில் பல ஆட்டுக் கிடாக்களும் மான்களும் கொல்லப்படுவதை அவன் பார்த்திருக்கிறான். அவனது கண்ணுக்குக் கண்ணானவனுக்கும் அதே கதி!

டோரா சங்கிலியைப் பலமாக ஒரு தடவை சொடுக்கினாற்போல் இழுத்துக் கண் மூடித் திறக்கும் நேரத்தில் தன்னை மதியாவின் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டான். சமையல்கார ஆட்களில் ஒருவனைத் தாக்கினான். சாகேப்பும் மற்ற வேலைக்காரர்களும் தாறுமாறாகக் கூடாரத்தை நோக்கி ஓடினார்கள். ஜமீன்தார் ஏதோ யோசனையாகக் கூடாரத்துக்குள் அமர்ந்திருந்தார். அவசரம் அவசரமாக எழுந்து தமது விருந்தினரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். மதியா மீது ஆத்திரத்துடன் சீறிப் பாய்ந்தார். ஆனாலும் அவர் வார்த்தைகள் அவர் மனம் அடைந்து கொண்டிருந்த விவரிக்க ஒண்ணாத வேதனையைக் கோடி காட்டுவதாகவே அமைந்திருந்தன.

டோராவினால் காயப்படுத்தப்பட்ட மதியா அவனை ஒரு மரத்தோடு இழுத்துக் கட்டினான். மறுபடியும் டி. ஐ. ஜி. முகத்தில் புன்னகையுடனும் கையில் கத்தியுடனும் வந்தார். கேலியாக டோராவுக்கு முன்னால் கத்தியை அசைத்துக் காட்டினார். பிறகு ஜானியை நோக்கி நடந்தார். ஜமீன்தார் ஜானியைத் திருட்டுத்தனமாக மீண்டும் ஒரு தடவை நோக்கினார். அதே இறைஞ்சும் கண்களுடன் உதவி கோரிப் பிரார்த்திப்பதைப் பார்த்தார். எழுந்து நின்று தமது விருந்தினரிடம் ஏதோ சொல்ல வாயெடுத்தார். உடனே, 'ஐயோ! எனக்கென்ன பைத்தியம் பிடித்து விட்டதா?' என்று தமக்குத் தாமே கேட்டுக் கொண்டு மீண்டும் உட்கார்ந்து விட்டார். அந்த இடத்தை விட்டே ஓடிப் போக எண்ணினார். ஆனால் சாகேப் அதைத் தவறாக எடுத்துக் கொள்ளக் கூடும் என்ற எண்ணம் தடுக்கவே முன்போலவே உட்கார்ந்து கொண்டார்.

அந்தக் காட்சியைப் பார்ப்பதைத் தவிர்க்க ஜமீன்தார் தமது முகத்தைக் கைக்குட்டையால் மூடிக் கொண்டார். இதயமே கிழிவது போன்று டோரா ஓலமிட்டதானது அவரது காதுகளைத் தாக்கியது. இந்த அழுகையினூடே தொண்டையை அடைக்கும் குரலில் ஒலித்த சோக மயமான முனகல் அவரது இருதயத்தை ஊடுருவியது. அது ஜானியின் குரல். அவர் கைக்குட்டையை நீக்கினார். எல்லாம் முடிந்து விட்டது!

இரவு போஜனத்தின்போது ஜானியின் புலாலை ஏற்க அவரது ஆன்மா மறுத்து

# உங்களுக்கு சுவையுள்ள, கெட்டியான, ஸ்ட்ராங்கான மற்றும் உடனே தயாராகும் காபி வேண்டுமா...

இதோ

## ப்ரூ

இருக்கிறது




ப்ரூக் பாண்ட்

## ப்ரூ

இன்ஸ்டண்ட்

**காபி சிக்கரி ப்ளெண்ட்**

கெட்டியான, ஸ்ட்ராங்கான
காபி-சிக்கரி கலவைதான் ப்ரூ.
உடனடியாக தயாராகிவிடுகிறது!
புத்துணர்ச்சியளிக்கும்
மிகச் சிறந்த பானம்.

''முடியாது! முடியாது!'' என்று கசப்புடன் கதறியது. அந்த விருந்தில் கலந்து கொள்ள அவர் ஒரு ஜீவ மரணப் போராட்டமே நடத்தி ரொம்பச் சிரமப்பட்டு ஒரு துண்டு மாமிசத்தை விழுங்கி வைத்தார்.

ஏதேதோ எண்ணங்களில் மூழ்கியவராய்ப் படுக்கை அறைக்குள் சென்றார். தூக்கம் வரவில்லை. படுக்கையில் படுத்தவாறு சொர்க்கத்தையும் நரகத்தையும் பற்றிக் கனவுகள் கண்டார்.

பொழுது விடியும் சமயம் அவர்கள் திரும்பி வந்தார்கள். ஜமீன்தார் தமது விருந்தினருடன் மற்றவர்களுக்கு முன்பாகவே காரில் திரும்பி விட்டார். பெண்மணிகளுடன் பேசிச் சிரிப்பதில் தம்மை மூழ்கடித்துக் கொள்ள முயன்றார். ஆனால் அந்த நாயின் பரிதாபகரமான, சோகமயமான ஓலம் அவரது மனத்தையும் செவிகளையும் சதா சூழ்ந்து கொண்டேயிருந்தது. கேளிக்கைகளில் மிகவும் மனம் மகிழ்ந்தவர்களாக விருந்தினர் அன்றே விடைபெற்றுக் கொண்டனர்.

டோராவை வழிநெடுகப் பிடித்து இழுத்துக் கொண்டு மதியா இறைக்க இறைக்க வந்தான். தன் எஜமானனிடம், டோரா அந்த இடத்தை விட்டே கிளம்பப் பிடிவாதமாக மறுத்து விட்டதாக அவன் சொன்னான். எஜமானர் தனிமையில் சிந்தனையில் ஆழ்ந்தவராக அமர்ந்திருந்தார். மேற்கொண்டு ஒரு வார்த்தைகூடப் பேசாமல் மதியா சென்று விட்டான். ஜமீன்தார் தாம் செய்த குற்றத்துக்காக ஆழ்ந்து வருத்தப்பட்டுப் பிராயச்சித்தம் செய்து கொண்டிருந்தார். அளவிட முடியாத சகிப்புத் தன்மையைக் கடைப்பிடித்து அவர் இதுவரை தம்மைச் சமாளித்துக் கொண்டு வந்தார். இல்லாவிட்டால் அவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டதாக மற்றவர்கள் நினைத்திருப்பார்கள். யாரோ ஒருவன் அவருக்குள்ளே இருந்தபடி அவரை இந்தச் சாதாரண ஜந்துவின் காலடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்து மன்னிப்புக் கேட்குமாறு வற்புறுத்திக் கொண்டிருந்தான். டோராவைவிடத் தாம் தாழ்ந்தவன் என்று அவர் உணர்ந்தார். ஐயோ என் இதயம் இவ்வளவு கேவலமானதா? கொலை பாதகச் சிந்தனை உடையதா? மாமிசபட்சிணியான இந்த ஜந்துவைவிட நான் படுபாதகமானவனா? அருவருப்பானவனா? சீச்சீ! கேடு கெட்டவன் நான்! வலிமை மிக்கவர்கள் என்றால் அவர்கள் பலவீனமானவர்களை அடிமைப்படுத்தி வைத்துத் தாங்கள் வாழ அவர்களை அழிக்க வேண்டும் என்று அர்த்தமா? இதன் தொடர்பாக, ஒருவன் வாழ வேண்டும் என்பதற்காக மற்றொருவன் சாகவேண்டியது அவசியம்தான் என்று முடிவு கட்டுவதா?

பயங்கரமான சுயவெறுப்பு ஜமீன்தாரின் இருதயத்தைக் கிழித்தது. ஜானியின் மாமிசத்தைச் சுவைத்த நாக்கு உணர்ச்சியற்றுத் தொய்ந்தது. ஜானியின் இருதயத்தை உண்ட தொண்டை சுருங்கிச் சிறுத்தது.

அவருக்குப் பின்னாலிருந்து ஒரு குரல் உரக்கக் கேட்டது: ''ஜானி எங்கே?''

அவர் திரும்பித் தமது நாலு வயதுக் குமாரியைப் பார்த்தார். அவளுக்குக் கூறச் சரியான பதில் அவருக்கு அகப்படவில்லை. பரபரப்புடன் எழுந்து குழந்தையை மார்போடு அணைத்துக் கொண்டே கெஞ்சினார்: ''அவன் அங்கே இருக்கிறான் கண்ணு! இருக்கிறான்!'' ஆனால் குழந்தை அவர் வார்த்தையை நம்பவில்லை. வருத்தத்தால் நீண்ட முகத்துடன் உதடுகளைக் குவித்தபடி அவள் கூறினாள்: ''நீ பொய் பேசுகிறாய்; மதியா சொல்கிறான், சாகேப் அவனைக் கொன்று விட்டாரென்று. நான் சாகேப்பைக் கொன்று விடப் போகிறேன்!''

குழந்தையின் துயரையும் கோபத்தையும் பார்த்த தகப்பனாரால் தமது உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. படுக்கையில் விழுந்து மனக் கசப்புடன் அழலானார். ஆனால் 'ஜானி எங்கே?' என்ற அந்தக் கேள்வி அவர் மனத்தில் கணக்கற்ற தடவை அடுத்தடுத்து எழுந்தது. அந்தக் கேள்வியை அவர் தம்மைத் தாமே கேட்டுக் கொண்டார். அவர் விழுங்கியிருந்த ஜானியின் சதைத் துணுக்குகள் ஒவ்வொன்றும் வலி தாங்காமல் ஓலமிட்டது. அந்த ஓலமானது அவரது தோலின் மயிர்க் கால்கள் ஒவ்வொன்றின் மூலமும் பாய்ந்து வெளியேறியது. அவர் கடுமையான நோய்வாய்ப்பட்டுப் படுத்து விட்டார்.

இரண்டு வாரம் ஜுரம் அடித்தது. சாப்பாடுமில்லை; ஓய்வுமில்லை. அவரது நிலை கவலைக்கிடமானதாயிற்று. ஆனாலும் அவர் குணமடைந்து விட்டார். மறுபிறவி அது!

ஐரோப்பியர்களுக்கு என்று உருவாக்கப்பட்ட விருந்தினர் மண்டபம் நோயுற்றவர்களுக்கும் அநாதைகளுக்கும் அடைக்கலம் தரும் விடுதியாக மாறிற்று. ஜமீன்தாரின் மாளிகையில் புலால் உணவு தடை செய்யப்பட்டது. ஜமீனின் எல்லைக்குட்பட்டு யாரும் மான்களை வேட்டையாடவோ கொல்லவோ கூடாது என்று தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

டோரா எதையுமே ருசி பார்க்கவும் மறுத்தான். அன்று முழுதும் பட்டினி கிடந்து, ஜமீன்தார் நோய்வாய்ப்பட்டதும் அங்கிருந்து எப்படியோ ஓடிப் போய் விட்டான். மதியா அவனைத் தேடிச் சென்றான். ஜானி எந்த இடத்தில் கொல்லப்பட்டானோ அந்த இடத்தை டோரா முகர்ந்து பார்த்துக் கொண்டிருப்பதை மதியா கண்டான். டோரா தனது இன்னுயிர்த் தோழனை இழந்த இடம் அதுதானே! அவன் திரும்பவும் அழைத்துவரப்பட்டான். எவ்வளவோ ஜாக்கிரதையாக அவனைக் கவனித்துக் கொண்டும் பிரயோஜனப்படவில்லை; மறுபடியும் நழுவி ஓடிவிட்டான். பிறகு எவ்வளவு தேடியும் அவனை எங்குமே காண முடியவில்லை.

அவன் கூடாரம் அடிக்கப்பட்டிருந்த இடத்துக்குத்தான் சென்றான் என்று சிலர் சொல்கிறார்கள். வேறு சில மரம் வெட்டிகள் கானகத்தில் தாங்கள் மரம் வெட்டும்போது ஒரு நாய் பரிதாபகரமாக ஊளையிடுவது கேட்பதாகச் சொல்கிறார்கள். ஆனால் அது யாருடைய குரல்? ஜானியின் குரலா? அல்லது டோராவின் குரலா?

**ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்: 'குமரன்'**

# காணக் கிடைக்காத தங்கம்

**அத்தியாயம்**
**பன்னிரண்டு**

அருணகிரியும் அந்தப் பெண்ணும் ஒருவரையொருவர் வியப்புடனும் உள்ளார்ந்த பீதியுடனும் பார்த்துக் கொண்டனர்.

மறுகணமே அவள் தன்னைச் சமாளித்துக் கொண்டு ஒரு செயற்கையான செருக்கோடு தலையை மெல்ல ஆட்டியவாறு, "ஓ.... முத்தம்மாவின் தம்பி நீ...ங்கதானு?..." என்று முணுமுணுத்துக் கொண்டே பின்னால் நகர்ந்தாள்.

வேர்த்து விறுவிறுத்த நிலையில் நின்று கொண்டிருந்த அருணகிரி தன்னை மீறிய பயத்தால் பரபரத்தவனாய் என்ன செய்வது, ஏது சொல்வது என்று தோன்றாத ஒரு குழப்பத்துடன், இரண்டு கரங்களையும் குவித்து, "வணக்கங்க!" என்றான் குழறலாக.

அவளுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. ஆனால் அவனைப் பார்த்துச் சிரிப்பதாகக் காட்டிக் கொள்ளாமல் சட்டென்று வேறு பக்கம் திரும்பினாள். சற்றுத் தொலைவில் ஒரு பூச் செடியைச் சுற்றிச் சுற்றி ஓடி வந்து விளையாடிக் கொண்டிருந்த-தன் நாயை நோக்கிச் சிரிப்பது போல் சிரித்துக் கொண்டே, "ஏ, ரம்மி! கம் ஆன்! கம் ஆன்!" என்றவாறு அங்கிருந்து கொஞ்ச தூரம் போய் விட்டுப் பிறகு, "எங்கே போச்சு, இந்த முத்தம்மா...! ஏ, முத்தம்மா!" என்று கூப்பிட்டபடி விரைந்து சென்றாள். பங்களாவின் பின்புற வாயிலினுள் புகுந்து மறைந்தாள்.

கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற்போன்ற திகைப்புடன் அப்படியே நின்று கொண்டிருந்தான் அருணகிரி. இனம் புரியாத ஒருவித பயம் அவனைப் பேயாய்ப் பிடித்து உலுக்கியது. பொறியில் அகப்பட்டுக் கொண்ட எலிபோல் அங்குமிங்குமாகத் திருதிரு வெனப் பார்த்து விழித்தான்.

"என்னடா, தம்பி! யாரைப் பார்த்துட்டு இப்படித் திகைச்சு நிற்கிறே?" என்று மெல்லச் சிரித்துக் கேட்டுக் கொண்டே உள்ளே வந்தாள் முத்தம்மா.

"ஒண்ணுமில்லேக்கா! அதோ, அந்த நாய்க் குட்டி விளையாடறதைப் பார்த்தேன்" என்று சொல்லித் தன் திகைப்பு நிலையைச் சமாளித்துக் கொண்ட அருணகிரி, தரையில் சுவர் ஓரமாக உட்கார்ந்தான்.

**ஜெகசிற்பியன்**

"உன்னைப் பற்றி எசமானியம்மா விசாரிச்சாங்க தம்பி! எல்லாம் சொன்னேன். நீ மறுபடியும் ஏதோ பரீட்சை கொடுக்கிறதுக்குப் படிக்கிறேங்கிறதையும் சொல்லி வைச்சேன். ரொம்ப சந்தோஷப்பட்டாங்க" என்று பெருமை பொங்க விவரித்துக்கொண்டே வீட்டைப் பெருக்குவதில் முனைந்தாள் முத்தம்மா.

சற்றே உற்சாகமடைந்த அருணகிரி, "அப்படியாக்கா? அந்த அம்மாளை நான் இன்னும் பார்க்கலே! நாளைக்கு வேலைக்குப் போறதுக்கு முன்னடி பார்த்து ஒரு கும்பிடு போடணும்" என்று சொல்லிவிட்டு மெல்லச் சிரித்தான். சற்றுமுன் அந்தப் பெண்ணுக்குத் தான் வணக்கம் சொன்னதை நினைத்தே இப்போது அவன் சிரித்துக் கொண்டான்.

"ஆமா, தம்பி! நானும் சொல்லணும்னுதான் இருந்தேன். அம்மாளைப் பார்த்தா கை எடுத்துக்க. ரொம்ப நல்லவங்க. நமக்கு எவ்வளவோ செய்திருக்கிறாங்க. இன்னமும் செய்வாங்க. நம்மைப் போல் இருக்கிற ஏழைங்களுக்கு உதவி செய்யக் கடவுள் இந்த மாதிரி மனுஷாள் ரூபத்திலேதான் வரார்னு நினைக்கிறேன். அடக்கம் ஆயிரம் பொன்னுக்குச் சமம். நம்ம பேரில் அன்பும் ஆதரவும் காட்டறவங்க கிட்டே நாம் பணிவாவும் பக்தியாவும் உண்மையாயும் நடந்துக்கணும்..." என்று தன் மனத்துள் துளும்பும் மகிழ்ச்சியை இவ்விதம் பேசி வழிய விடுவதிலே ஒரு சுகம் காண்பவள்போல் சொன்னாள் முத்தம்மா. சட்டென்று திரும்பி, "இதைக் கேட்டியா, தம்பி? அந்த அம்மாளோட மூத்த பெண்ணு பேர் நிர்மலா. இங்கிலீஷ் பள்ளிக்கூடத்திலே என்னமோ மெட்ரிக்காமே, அதுக்குப் படிக்குது. அதுகூட உன்னைப் பற்றி விசாரிச்சது. உன் பேரையும் கேட்டது" என்றாள் சிரித்துக் கொண்டே.

திடுக்குற்றுத் தலை நிமிர்ந்த அருணகிரி பரபரப்புடன் அவளை ஏறிட்டு நோக்கினான்.

"ஆமா, தம்பி! அந்தப் பெண்ணுக்கு இளையது பேரு கமலி; எட்டாங் கிளாஸ் படிக்குது. அடுத்தது பேரு சங்கர்; ஐஞ்சாங் கிளாஸ் படிக்கிறான். எல்லாமே படிப்பில் கெட்டி. பின்னே எப்படி இருக்கும்? அப்பா இஞ்சினீயரு; அம்மாவும் காலேஜ் படிச்சவங்களாம்!" என்று பெருமையும் வியப்புமாக அடுக்கினாள் முத்தம்மா. அடுப்பங்கரையையே பார்த்தபடி ஒரு மூலையில் கும்பலாக உட்கார்ந்திருந்த தன் பிள்ளைகளை நோக்கி, "இதோ இருக்குதுங்களே தின்னுங் கூலிகள்! பள்ளிக்கூடத்துக்குப் போங்கன்னு அனுப்பிச்சா கொய்யாக்காய் பொறுக்கித் தின்னுப்பிட்டு வருதுகள்! இதுகளுக்குப் படிப்பு எங்கே ஏறும்? விரை ஒண்ணு போட்டாச் சுரை ஒண்ணு காய்க்கும்?" என்று குரலை உள்ளடக்கிச் சிடுசிடுத்துக் கொண்டே சமையலறைக்குப் போய் விட்டாள். அவளைப் பின்தொடர்ந்து பிள்ளைகளும் சிணுங்கியவாறு சென்றனர்.

குழப்பமும் திகிலுமாகத் திருதிருவென விழித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் அருணகிரி. அன்றொரு நாள் மாலை ஏழுமலையின் மகன் செல்லத்துரை, தன் கல்லூரி லெக்சரர் ஒருவர், இஞ்சினீயர் ராமச்சந்திரனிடம் கொடுத்து அனுப்பிய கடித உறையின் மேல், 'மிஸ் நிர்மலா தேவி' என எழுதப்பட்டிருந்ததையும், அதே ராமச்சந்திரனின் மூத்த மகளான இந்த இரட்டைப் பின்னல்காரியின் பெயரும் நிர்மலா என்று தன் அக்கா இப்போது சொன்னதையும் கூட்டிச் சேர்த்து எண்ணிப் பார்த்ததாலேயே அவனுக்கு அத்தகைய குழப்பத் திகில் உண்டாயிற்று.

சற்றைக்குப் பின், 'சே, என்ன இது முட்டாள்தனம்! ஊர் உலகத்தில் நிர்மலா என்ற பெயருள்ளவள் ஒரே ஒருத்திதானா இருப்பாள்? அப்படி இருக்க அது ஒன்றும் அத்தனை



அபூர்வமான — அதிசயமான — பெயர் இல்லையே! அந்தக் கல்லூரி விரிவுரையாளரின் உறவினள் பெயரும் நிர்மலா என்று இருக்கலாம் அல்லவா? மேலும் அந்தக் கடித உறையின்மேல் நிர்மலா தேவி என எழுதப்பட்டிருந்தது; இந்த இரட்டைப் பின்னல்காரியின் பெயர் வெறும் நிர்மலா தானே?' என்றெல்லாம் தனக்குத்தானே வாதித்துச் சமாதானம் தேடிக் கொண்டு அமைதியடைந்தான் அவன்.

இரவு எட்டரை மணி வாக்கில், சிறையிலிருந்து தப்பி வந்த குற்றவாளி போல் கள்ள விழி விழித்துக் கொண்டு வீட்டினுள் பிரவேசித்தார் ரத்தினவேலு.

முத்தம்மா அவரை என்றைக்குமில்லாத குதூகலத்துடன் வரவேற்றாள். அவரோடு கலகலப்பாகச் சிரித்துப் பேசினாள். நேற்றுத்தான் கலியாணம் பண்ணிக் கொண்ட புது மாப்பிள்ளையிடம் நாணிச் சிணுங்குவது போல் நடந்து கொண்டாள்.

இவ்வளவுக்கும் ரத்தினவேலு வாயே திறக்காமல் 'உம்'மென்று உட்கார்ந்திருந்தார். முன்பின் அறிமுகமில்லாத ஓர் அன்னியர் வீட்டில் நுழைந்துவிட்ட சின்னப் பையன் மாதிரி அங்குமிங்கும் திருதிருவென விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தார். தாமும் தம் மனைவி மக்களும் குடியிருக்க இத்தனை வசதியான வீடு இலவசமாகக் கிடைத்திருக்கிறதே என்ற சந்தோஷம் அவர் முகத்தில் கொஞ்சம்கூடத் தட்டுப்படவில்லை.

முத்தம்மாவும் இதைக் கவனித்தாள். இன்று மட்டுமல்ல, இன்னும் சில தினங்கள்கூட அவர் இப்படித்தான் இருப்பார் என்று ஏற்கனவே எதிர் பார்த்தவள் மாதிரி வெகு அலட்சியமாகவும் — அதே சமயம், அவரை உற்சாகப்படுத்தும் வகையில் பேசிச் சிரித்தும் — வளைய வந்து கொண்டிருந்தாள் அவள்.

அன்றிரவு ரத்தினவேலுக்குச் சாப்பாடே இறங்கவில்லை. ஆனாலும், முத்தம்மா அவரை அதட்டி மிரட்டி நிறையச் சாப்பிட வைத்தாள். அவருக்குப் பதார்த்தம் பரிமாறும் சாக்கில் பக்கத்திலே உட்கார்ந்து — தன் தம்பி அருணகிரி கவனிக்காத சமயத்தில் — அவரது வாயை மோந்து பரிசோதனை நடத்தினாள். அவளுடைய சந்தேகம் பொய்த்தது. ரத்தினவேலு அன்று 'சுத்தமாகவே' வந்திருந்தார்!

முத்தம்மாவுக்குச் சந்தோஷம் பிடிபடாமல் போயிற்று. அவள் வாய் விட்டுக் கலகல வெனச் சிரித்தாள். தங்கள் தாயார் சிரிப்பதற்கான காரணம் புரியாமலே பிள்ளைகளும்கூடச் சேர்ந்து சிரித்தனர். ஆனால் அருணகிரி அந்தக் 'காரண'த்தைப் புரிந்து கொண்டு தலை குனிந்தபடியே நமட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

சாப்பிட்டானதும் தன் படுக்கையை எடுத்துக் கொண்டு வராந்தாவுக்கு வந்தான். அவ்வீட்டிலே அவன் படுப்பதற்கு அதுதான் ஏற்ற இடம். படிப்பதற்கும் வசதியானது. இரவு எவ்வளவு நேரமானாலும் படித்துக் கொண்டிருக்கலாம். அவனுடைய அக்கா, அத்தான், பிள்ளைகள் ஆகியோரின் தூக்கத்துக்கு மட்டுமின்றி, பங்களாவில் இருப்போருக்கும் எவ்வித இடைஞ்சலும் ஏற்பட வழியில்லை. எனினும், இன்று அவன் படிக்க விரும்பவில்லை. நாளை முதல் தொடர்ந்து படிக்கலாம் என்று தீர்மானித்தவனாய்ப் படுக்கையை விரித்துப் போட்டுப் படுத்து விட்டான்!

ஆகா, என்ன அருமையான இடம்! எவ்வளவு அமைதியான சூழ்நிலை! வராந்தாவுக்கு எதிரே மதில்சுவரையொட்டி கார் ஷெட் இருந்தது. அதன் முன்னும் பக்கவாட்டிலும் பல விதமான மரங்கள், செடி கொடிகள். இரவிலே மலரும் பூக்களின் சுகந்த வாசம் சில்லென்று வீசிய காற்றோடு கலந்து இனிமை கமழத் தவழ்ந்து வந்தது.

இந்த அநுபவப் புதுமையை நுகர்ந்து உணர்ந்து மனம் குதூகலித்தான் அருணகிரி. இதனால் விரைவிலேயே ஆனந்த நித்திரை தன்னை ஆட்கொண்டு விடும் என்று எதிர்பார்த்தான். படுத்து வெகு நேரமாகியும் அவனுக்கு ஏனோ தூக்கமே வரவில்லை. உள்ளே கூடத்து அறையில் முத்தம்மாவும் பிள்ளைகளும் நல்ல உறக்கத்தில் ஆழ்ந்து விட்டனர். ரத்தினவேலுகூடக் குறட்டை விடும் சத்தம் கேட்டது. பங்களாவிலும் விளக்குகள் அணைந்துவிட்டன. இரவு மணி பதினொன்றுக்கு மேல் இருக்கும்.

எதிரே, கார் ஷெட்டுக்குப் பக்கவாட்டில் வானுக்கும் பூமிக்குமாய் விசுவரூபமெடுத்து நின்ற அனுமார் போல் ஓங்கி வளர்ந்திருந்த ஓர் ஊசி இலை மரத்தையே வெறித்துப் பார்த்தபடி மல்லாந்து படுத்துக் கிடந்தான் அருணகிரி.

சுற்றுப்புறச் சூழல் சுகமாய் இருந்து விட்டால் மட்டும் போதுமா? அதனோடு ஒன்றி லயிக்க மனமும் நிர்விசாரமாய் இருக்க வேண்டுமே!

அவனுடைய மனம் இப்போது அப்படி இல்லை. அதில் ஏதேதோ அநுசிதமான எண்ணங்கள் பலவும் புகை மூட்டமாகக் கிளம்பி, அவனது கண்

# ஆறு கைகள் இருந்தாலும் போறாது போலிருக்கே!

## ஒரு Prestige பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் வாங்கிவிடுங்கள்!



**பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் உங்கள் பொன்னான சமையல் நேரத்தில் ஒருமணி மிச்சமாக்குகிறது**

சமையல் பிரச்சனையை எளிதாக்கவே தயாராகிறது பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர். பிரஸ்டிஜ் சமையல் வழக்கமான சமையலுக்காகும் நேரத்தில் கால்பங்கு நேரத்திலே தயார். அது எளிதானது. அத்துடன் பத்திரமானதும்கூட. 12 வயது சிறுமிகூட கையாளலாம். எரிபொருள் செலவில் எத்தனையோ மிச்சம். பிரஸ்டிஜ் இருந்துவிட்டால் சமைக்கும்போது குழப்பமோ, தடுமாற்றமோ இருக்காது. ஏனெனில் அதில் ஒரே சமயத்தில் மூன்றுவகை சமைக்கலாம். பிரஸ்டிஜில் தயாரான உணவில் சத்து, ருசி, மணம் முதலியவை குறைவதில்லை. பிரஸ்டிஜ் ஆயுட்கால உத்தரவாதம் கொண்டது. நாடெங்கும் விற்பனைக்குப் பின்பும் பராமரிப்புக்கு வசதி யுள்ள பிரஷர்குக்கர் பிரஸ்டிஜ் ஒன்றே.

பிரஸ்டிஜ் ஐந்து அளவுகளில் உள்ளன. உங்கள் குடும்பத்திற்கு தேவையான அளவை தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.

பெயர்கள் வேறானாலும் ப்ரீத்.° பிரஸ்டிஜ் இரண்டும் ஒன்றே. இந்தியாவில் பிரஸ்டிஜ், ஏற்றுமதிக்கு ப்ரீத்.

> புகழ்பெற்ற ப்ரீத் ஸ்டீம் இட், ஸ்கில்லெட், ஸாஸ்பான் - சமையல் விரைவாகவும் எளிதாகவும் முடிய இவைகள் உதவுகின்றன.

டிடி (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர்-16.

TTP-5799

களில் கரிப்பை ஏற்படுத்திக் கொண்டிருந்தன.

ஏழுமலை செய்து வரும் அடாவடித்தனமான கெடுபிடிகள்; அவனுடைய மகன் செல்லத்துரையின் விசித்திரமான போக்கு; இந்த வீட்டு எஜமானியின் மகளை எதிர்பாராதவிதமாகச் சந்தித்த நாள் முதல் இன்று வரை நடந்து வரும் விந்தையான நடப்புக்கள்!... இவை போன்று இன்னும் பலவும் அவன் மனத்தை இப்போது கொத்திக் கிளறிக் கொண்டிருக்கின்றன என்றாலும், இவையே முழுக்க முழுக்க அவனைத் தூங்க விடாமல் சும்மா கிடத்தி வைத்திருக்கின்றன என்று பசப்பிக் கொள்ள அவனே தயாரில்லை. இவற்றுக்கெல்லாம் மேலே ஓர் ஆழமான கவலை உட்கார்ந்து அழுத்தி இறுக்கிக் கொண்டிருக்கிறது என்பது அவனுக்கே நன்றாகத் தெரியும்.

ஆமாம்; இன்று மதியம் அந்தச் சோற்றுக் கூடைக்காரப் பெண் கனகா அவனிடம் கோபித்துக் கொண்டு போனது பற்றிய எண்ணமே அவனது தூக்கத்துக்கு எதிரியாய் இருந்தது!

'அவளுக்குத்தான் என்ன கோபம்! என்ன வீறுப்பு! என் மேல் அந்த அளவுக்கு விடைப்பும் சிடுப்பும் காட்ட அவளுக்கு என்ன உரிமை இருக்கிறது? அப்படி ஓர் உரிமையை அவள், எங்கிருந்து, எதற்காக எடுத்துக் கொண்டாள்?

ஓசையின்றிச் சிரித்த அருணகிரி படுக்கையில் அப்படியும் இப்படியுமாகப் புரண்டான். உடம்பை அவ்வாறு புரட்டி எடுத்ததாலோ என்னவோ சற்றைக் கெல்லாம் அவன் நன்றாகத் தூங்கிப் போனான்!

* * *

அருணகிரியின் குருபிரான் ஏழுமலை தன் 'முதலாளித்துவக் கெடுபிடி'யை இன்னமும் தளர்த்தவில்லை; சீடப் பிள்ளையின் வயிற்றைக் காயப் போட்டு அவனுடைய 'கொழுப்பை'க் கரைப்பதற்கான நடவடிக்கையைத் தொடர்ந்து நடத்தியே வந்தான்.

ஆனால் அருணகிரி கடந்த ஐந்தாறு தினங்களாக மத்தியான வேளைகளில் ஒன்றும் சாப்பிடாமல் வயிற்றைக் காயப் போட்டுப் போட்டு அதை ஒரு பக்குவத்துக்குக் கொண்டு வந்துவிட்டதால் இப்போதெல்லாம் அவனுக்குப் பகல் உணவு தேவை என்ற எண்ணமே தோன்றுவதில்லை. பசியும் எடுப்பதில்லை. ஒரு மணியானதும் முகம், கை, கால்களைக் கழுவிக் கொண்டு போய் அந்தப் பள்ளிக்கூட காம்பவுண்ட் சுவர் மேல் ஏறிப் படுத்துக் கொஞ்ச நேரம் கண்ணயர்ந்து விட்டு எழுந்து வந்தால், களைப்பு சோர்வு எல்லாம் நீங்கி உற்சாகமடைந்து வேலையிலும் சுறுசுறுப்பாக இறங்கி விடுவான்.

இப்படி அவன் மதியச் சாப்பாட்டைப் பொருட்படுத்தாமல் இருந்ததற்கு இது மட்டுமே காரணம் என்று சொல்ல முடியாது. இப்போதெல்லாம் காலையில் அவனுக்கு வயிறு நிறைய உணவிட்டு அனுப்புகிறாள் முத்தம்மா. சாயந்திரம் வீட்டுக்குப் போனதும் ஏதாவது பட்சணம் பலகாரம் வைத்திருந்து கொடுக்கிறாள். எல்லாம் எஜமானியம்மாள் வீட்டிலிருந்து அவளுக்குக் கிடைப்பவை. இரவுச் சாப்பாடும் தட்டுமுட்டுப் படுவதில்லை. எனவே தான் பகல் உணவை அவன் சட்டை செய்யாமல் விட்டு விட்டான்.

ஆனால் தினமும் பகல் ஒரு மணியிலிருந்து இரண்டு மணி வரையிலான நேரத்தைக் கழிப்பதில் வேறொரு வகையிலே கவலையும் சோர்வும் அடைந்து வந்தான்.

ஆமாம்; அந்தச் சோற்றுக் கூடைக்காரப் பெண் இப்பக்கமே தலை காட்டுவதில்லை. தனது மீதச் சோற்று வியாபாரத்துக்கு அவள் வேறோர் இடத்தைத் தேடிக் கொண்டு போய்விட்டாள் போலும்!

அவளை எங்காவது, எப்படியாவது, ஒரே ஒரு தடவையாவது பார்த்துவிட வேண்டும் என்ற ஆவல் அவனுள் ஒவ்வொரு நாளும் வளர்ந்து கொண்டே இருந்தது. அந்த ஆவல் தலைதூக்கும் போதெல்லாம் அவன் தன்னைத் தானே இப்படிக் கேட்டுக் கொள்வான்:

'நான் ஏன் அவளைப் பார்க்க வேண்டும்? அதற்கு அவசியம் என்ன? அவளுக்கும் எனக்கும் என்ன உறவு? ஒன்றுமில்லையே! ஏதோ ஒரு நாள் அசந்தர்ப்பமாக அவளைப் பார்த்தேன். அந்த அசந்தர்ப்பமான சந்திப்பே ஓர் அசம்பாவிதத்தால் ஏற்பட்டது. அப்புறம் ஒரு நாள் உதவி என்ற பெயரில் அவளுடைய சோற்றுக் கூடையைத் தூக்கி விட்டேன். இந்த அற்ப உதவியை நான் என்ன, வேறு எவரும்கூடச் செய்திருக்க முடியும். அதன்பின் ஒரு நாள் பசியால் காது அடைத்துக் கிடந்த எனக்கு அவள் சோறு போட்டாள். அதுவும் மீதப்பட்ட சோறு. அன்றைய தினம் அந்தச் சோறு விலையாகியிருக்காது. அதனால் எனக்குத் தாராளமாகத் தானம் பண்ணி விட்டாள். அந்நேரத்தில் நான் அங்கு போகாதிருந்தால் அந்தச் சோற்றை நாய்க்கோ,—

காக்கைக்கோ அல்லது பிச்சைக்காரனுக்கோ கூடப் போட்டு விட்டிருக்கலாம். விஷயம் இவ்வளவுதானே? இதற்குமேல் என்ன இருக்கிறது? என்ன இருப்பதாக நினைத்துக் கொண்டு நான் அவளைப் பார்க்கத் துடிக்கிறேன்?'

இவ்வாறெல்லாம் சமத்காரமாகக் கேள்விகள் கேட்டுப் பதிலும் தேடிக் கொண்டு தனது அந்த ஆவலை அடக்கிக் கொள்ள அவன் முயன்றாலும், அவனை மீறி — அவனுக்கே புரியாத ஒரு வேகத்துடன் — அது அவனுள் வளர்ந்து வளர்ந்து கொண்டேதான் இருந்தது. ஆனால் இன்றுவரையில் அந்த ஆவலினால் உந்தப்பட்டு அவளைத் தேடிப் பார்க்கும் முயற்சியில் மட்டும் துணிந்து இறங்கி விடவில்லை. இதற்காக அவன் தன்னையே சில சமயம் மெச்சிக் கொண்டான்.

இது தவிர, ஏழுமலையின் மகன் செல்லத்துரை பற்றியும் அவனுக்கு உள்ளூற ஒருவிதக் குழப்பம் இருந்து வந்தது.

அன்றொரு நாள் மாலை அவன் இவனை வலிய வந்து சந்தித்து அத்தனை அந்நியோன்யமாகப் பேசி அளவளாவி விட்டுப் போனவன், அப்புறம் ஒன்றும் கண்டு கொள்வதில்லை. எங்கேயாவது வழியில் பார்த்தாலும் பாராதவன் போல் போய் விடுகிறான். இவனே ஏதாவது பேச்சுக் கொடுத்தாலும் முகம் கொடுத்துப் பேசுவதில்லை. இங்கே இந்தச் சைக்கிள் ரிப்பேர்க் கடைக்கு வந்தாலோ இவன் இருக்கும் பக்கம் திரும்பிக் கூடப் பார்ப்பதில்லை.

ஏன் இப்படி நடந்து கொள்கிறான்? இம்மாதிரி நடந்து கொள்வதுதான் அவனுடைய இயற்கையான சுபாவம் என்றால், அன்றைய தினம் அவ்வளவு நேசம் காட்டி நெருங்கி உறவாடியிருக்க மாட்டேனே! ஒருகால் தன் கல்லூரி விரிவுரையாளரின் கடிதத்தை இஞ்சினீயர் ராமச்சந்திரனின் வீட்டில் சேர்த்து விட வேண்டும் என்ற ஓர் அவசர அவசியமான காரிய சாதனைக்காக அன்று அப்படி வலிய வந்து வேஷம் போட்டு நடித்தானா? அல்லது சைக்கிள் ரிப்பேர்க் கடை முதலாளியான தன்னிடம் கூலிக்கு வேலை செய்பவனோடு தனது அருமை மகன் சிநேகம் பாராட்டுவதை அறிந்த ஏழுமலை உடனே, அது கூடாது; கௌரவக் குறைவு என்றெல்லாம் கண்டித்து அவனை அடக்கிவிட்டிருப்பானோ? அல்லது செல்லத்துரையே இவ்விதமாக எண்ணித் தன்னைத் திருத்திக் கொண்டு ஒதுங்கிவிட்டிருப்பானோ?' —

எப்படி இருந்தாலும் இது மிகவும் அற்பத்தனமான, அயோக்கியத்தனமான, பண்பாடற்ற நடத்தை என்று அருணகிரிக்குத் தோன்றவே, அவன் அவமானத்தாலும், கோபத்தாலும் பொங்கிக் குமுறினான். இப்போதெல்லாம் செல்லத்துரை சைக்கிள் கடைக்கு வந்தால் அவனைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் அலட்சியமாக இருக்கத் தலைப்பட்டான். எங்காவது வழியில் சந்தித்தாலும் இவ்வாறே முகத்தைத் திருப்பிக் கொண்டு போகலானான்.

ஆனால் ஒரு விஷயம்தான் அவனுக்கு ரொம்பப் புதிராக இருந்தது. அதாவது, செல்லத் துரை காலை, மாலை வேளைகளில் அந்தப் பெண்கள் உயர் நிலைப் பள்ளிக்கு எதிரே, சாலையோரம் சைக்கிளுடன் வந்து நின்று கொண்டிருப்பதைப் பல முறை பார்த்து விட்டான். அப்படி அங்கு அவன் நிற்பதற்குக் காரணம் எதுவாயிருக்கும்? யாரை எதிர்பார்த்து, அல்லது என்ன காரியத்துக்காகக் காத்துக் கிடக்கிறான்? இன்று வரை இது புரியாத ஒரு புதிராகவே இருந்து வருகிறது!... ஒருகால் 'ரோட்சைட் ரோமியோக்கள்' என்கிறார்களே, அந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவனாகி விட்டானோ செல்லத்துரை? —

ஏன் இருக்காது? பிள்ளையாண்டான் காலேஜ் படிக்கிறான். தான் பெற்ற பிள்ளைக்கே சலாம் போட்டு எழுந்து கைகட்டி நிற்கும் அப்பன், தேவைப் படும்போதெல்லாம் கணக்கு வழக்கு பார்க்காமல் காசு கொடுக்கிறான். சைக்கிள் இருக்கிறது. தினத்துக்கோர் உடை உடுத்த வசதி இருக்கிறது. வயசும் காளைப் பருவத்துக்கு வந்து விட்டது. அப்புறம் என்ன? 'ரோட்சைட்



இங்கு மின்சார விநியோகம் தடைப்பட்டால் பெட்ரோல் பங்கில் கார்களுக்குப் பெட்ரோல் போடுவது இப்படித்தான்: ஆஸ்திரேலியாவில்.....?

(48-ம் பக்கம் பார்க்க)



இங்கு மின்சார விநியோகம் தடைப்பட்டால் பெட்ரோல் பங்கில் இயந்திரத்தைக் கையால் சுழற்றி இயக்குவதைப் பார்த்திருக்கிறோம். ஆஸ்திரேலியாவில் ஒரு பெட்ரோல் பங்கில் மின்சாரம் தடைப்பட்டால் கார்களுக்குப் பெட்ரோல் போட இப்படி ஓர் அமைப்பை ஏற்படுத்தியிருக்கிறார் இதன் உரிமையாளர். கையால் சுழற்றுவதை விட இது சுலபமாய் இருக்கிறது என்கிறார். டிட்பிட்ஸ் - முத்து

---

ரோமியோ' அவதாரம் எடுக்க வேண்டியதுதானே !

'**டாண்**' என்று மாலை ஆறு மணி அடித்ததும் கைகால் முகத்தைக் கழுவிச் சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு கடையை விட்டுப் புறப்பட்டு விட்டான் அருணகிரி. ஆனால் அவன் நேரே வீட்டுக்குப் போகவில்லை. இன்று மட்டுமல்ல; அந்தப் புதிய வீட்டுக்குக் குடி போன மறுநாளிலிருந்தே வேலை முடிந்ததும் வீடு போய்ச் சேருவதில்லை. கப்பன் பார்க்கிலோ, கிங்ஸ் பார்க்கிலோ கொஞ்ச நேரம் உட்கார்ந்து பொழுதைப் போக்கிவிட்டு இருட்டிய பிறகு எழுந்து செல்வதை வழக்கப்படுத்திக் கொண்டிருந்தான்.

சாயந்திரம் மட்டுமின்றிக் காலையில் வேலைக்குக் கிளம்புவதும் ஆறு மணி என்று வழக்கப்படுத்திக் கொண்டிருந்தான். அப்போது பங்களாவில் யாரும் படுக்கையை விட்டே எழுந்திருக்க மாட்டார்கள். அவன் நேரே ஒரு சிறு வாசகசாலைக்குச் செல்வான். அங்கே, பத்திரிகை படித்துக் கொண்டிருந்து விட்டு, ஏழே முக்கால் மணிக்குக் கிளம்பி எட்டு மணி வாக்கில் சைக்கிள் ரிப்பேர்க் கடைக்குப் போய்ச் சேருவான். லீவு நாட்களில் வீட்டில் தங்கியிருக்கவே மாட்டான். விடியற்காலையில் புறப்பட்டு லால்பாக்குக்குப் போய்த் தனிமையில் உட்கார்ந்து தன் பாடப் புத்தகங்களைப் படித்துக் கொண்டிருந்து விட்டு இருட்டிய பிறகு வீடு திரும்புவான்.

ஏன் இப்படி? எல்லாம் இந்த இரட்டைப் பின்னல்காரி நிர்மலாவின் கண்ணில் படக் கூடாது என்பதற்காகத்தான்!

இந்தப் புதிய வீட்டுக்கு முதல் நாள் முன்னிரவு நேரத்தில் அவன் வந்து உட்கார்ந்திருந்தபோது அவள் அவனைப் பார்த்துவிட்டுப் போனாளே, அதற்குப் பின் அவளை-ஏன், அவளுடைய தாயார், தம்பி தங்கைகள், பாட்டி ஆகியோரைக் கூட — இன்றுவரையில் பார்க்கவில்லை. அதாவது அவர்கள் பார்க்கும்படியாக வீட்டில் அவன் இருப்பதில்லை. வீட்டில் இருக்கும் நேரங்களில் வெளியே தலை காட்டுவதுமில்லை.

வசந்தநகரில் அந்த மோசமான ஒண்டுக் குடித்தன வீட்டைக் காலி செய்து விட்டுப் பெரிய மனிதர்கள் வசிக்கும் ஒரு நெடுஞ்சாலையிலே அமைந்த பங்களாவின் அவுட் — ஹவுசில் தன் அக்கா குடி போகப் போகிறாள் என்பதை அறிந்தபோது அருணகிரி உண்மையிலேயே மனம் குதூகலித்தான்; பெருமையும் கொண்டான். ஆனால் அன்று மாலை தன் அக்காவோடு வந்து அவள் வேலை செய்யும் இந்தப் பங்களாவைப் பார்த்ததுமே அவனுடைய உற்சாகம், மகிழ்ச்சி எல்லாம் ஒரேயடியாக மறைந்து போனதன்றி, ஒருவித கிலியும் தாழ்மை உணர்ச்சியும் அக்கணமே அவனைப் பற்றிக் கொண்டுவிட்டன.

அப்புறம் எப்படியோ தன்னைச் சமாளித்துக் கொண்டு உள்ளே சென்ற அவன், அந்தப் பங்களாவின் அழகிய சூழ்நிலையையும், தான் இனி குடியிருக்கப்போகும் வீட்டில் உள்ள வசதிகளையும் கண்டு பிரமித்தவனாய், சற்றுமுன் ஏற்பட்ட கிலி நீங்கி மனம் மலர்ச்சியடையத் தொடங்கின சமயம் அந்தப் பெண் நிர்மலாவைப் பார்க்கவே மீண்டும் முன்போல் மிரட்சி யடைந்து போனான். அவளுடைய அப்போதைய பேச்சும் பாவனைகளும் நடந்துகொண்ட விதமும் அவனை மேலும் பயப் பிராந்திக்கு உள்ளாக்கின. இதனால் அன்றிரவெல்லாம் அவன் சரியாகவே தூங்கவில்லை.

பொழுது விடிந்ததோ இல்லையோ, தன் அக்காவிடம் ஏதோ பொய்க் காரணம் கூறிக் காலை உணவைச் சீக்கிரமே முடித்துக் கொண்டு வெளியே ஓடிவந்து விட்டான். அன்று மாலை வேலை முடிந்து வீட்டுக்குப் போனபோதும் அதேவிதத் தயக்கமும் கிலியுமே அவனுக்கு ஏற்பட்டன.

இதை யாரிடம் வாய் விட்டுச் சொல்ல முடியும்? திருடனுக்குத் தேள் கொட்டின மாதிரி உள்ளூறத் தவித்துக் கொண்டிருப்பதைத் தவிர அவனுக்கு வேறு வழி ஏதும் தோன்றவில்லை.

(தொடரும்)

# இன்ப வாழ்வு, இனிய குடும்பம், இந்நலமெலாம் விவசாயி முருகனுக்கு வாய்த்தது எப்படி?



## ஏராள விளைச்சல் தாராளமாக அளித்திடும் ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்புசெட் அளித்த வளமையிது.

**முருகன் வாழ்வில் ஈடில்லாத இன்பநாள், ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்புசெட் பொருத்திய அந்தநாள். குறைந்த செலவில் நிறைந்த பயன் தரும் முதலீடு, ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்புசெட். பெஸ்ட் அண்ட் கம்பெனியின் ஓர் ஒப்பற்ற தயாரிப்பு அது.**

ஈடு இணையற்றது என்று புகழ் பெற்ற 'மானோபிளாக்' பம்பு செட்டுகள் உட்பட பலவகை சென்டிரிப்யூகல் பம்புகளையும் பெஸ்ட் அளிக்கிறது. ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்பு செட்டுகள் கண்டிப்பான தரக்கட்டுப்பாட்டுடன் தயாரிக்கப்படுபவை. விற்பனைக்குப் பிறகும் சேவை செய்ய, நாடெங்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், தக்க பம்புகளை தேர்ந்தெடுப்பதற்கு ஆலோசனைகளையும் அளிக்கிறது பெஸ்ட் !






**பெஸ்ட் & கம்பெனி பிரைவேட் லிட்.**

(ஸ்தாபிதம்: 1879)
13/15 நார்த் பீச்ரோடு, சென்னை-1.

தமிழ் நாட்டில் கிளைகள்:
6/434, திருச்சிரோடு, கோயமுத்தூர்.
49-D, மதுரைரோடு, திருச்சி-1.

Focus-BC-193 Tam (s)

# பெற்றோர்களுக்கு நற்செய்தி!

**பள்ளிச் சீருடைகளுக்கு பின்னி துணிகள்**

*இப்பொழுது ஏராளமாகக் கிடைக்கின்றன*

சிறுவர்களின் நிஜார்களுக்கு பின்னியின் டிரில்கள், சிறுமிகளின் சீருடைகளுக்கு பின்னியின் D316, சிறுவர், சிறுமிகளின் சட்டைகளுக்கு பின்னியின் 'கரோலின்' பாப்ளின் இவற்றிலிருந்து தேர்ந்தெடுங்கள்.

பள்ளிச் சீருடைகளுக்கு பள்ளிக்கூட நிர்வாகிகள் சிபாரிசு செய்வதும் பெற்றோர் விரும்புவதும் பின்னித் துணிகளே.

பின்னி துணிகள் பல சலவைகளுக்குப் பின்னும் சீரான தோற்றமுடன், சிறப்புமிகு வனப்புடன் விளங்குகின்றன.

பின்னி டிரில்கள், D316, 'கரோலின்' பாப்ளின் ஷர்ட்டிங் முதலியவை அங்கீகாரம் பெற்ற பின்னி வியாபாரிகளிடம் கிடைக்கின்றன.

ஒரு மீட்டருக்கான சில்லரை விலை (எக்ஸைஸ் வரி உட்பட)*

| | |
|---|---|
| **சாதா டிரில்கள்:** | |
| WB17 (வெள்ளை) | ரூ. 3.46 |
| B17 C800 (காக்கி) | ரூ. 3.58 |
| WB37 (வெள்ளை) | ரூ. 3.33 |
| B37 C800 (காக்கி) | ரூ. 3.53 |
| **ஸான்ஃபரைஸ்டு & மெர்ஸிரைஸ்டு டிரில்கள்:** | |
| WB94X (வெள்ளை) | ரூ. 3.85 |
| B94 C800X (காக்கி) | ரூ. 3.98 |
| WB39X (வெள்ளை) | ரூ. 3.73 |
| B37 C800X (காக்கி) | ரூ. 3.92 |
| **ஸான்ஃபரைஸ்டு & மெர்ஸிரைஸ்டு டிரில்கள்-நேவி ப்ளூ நிறம்:** | |
| B39BC 154X (நேவி ப்ளூ) | ரூ. 4.08 |
| D316 (வெள்ளை) | ரூ. 3.10 |
| D316 (வெளிரிய, நடுத்தரமான வண்ணங்கள்) | ரூ. 3.33 |
| D316 (அழுத்தமான, மிக அழுத்தமான வண்ணங்கள்) | ரூ. 3.77 |
| **கரோலின்:** | |
| 'ஸான்ஃபரைஸ்டு' & மெர்ஸிரைஸ்டு பாப்ளின் | |
| வெள்ளை | ரூ. 4.15 |
| வண்ணங்கள் | ரூ. 4.27 |

* இந்த விலைகள் தமிழ்நாடு, ஆந்திரா, மைசூர், கேரள மாநிலங்களில் மட்டுமே.

**பள்ளி நிர்வாகிகளுக்கு ஓர் வேண்டுகோள்:**
உங்கள் தேவைகளைப் பெறுவதில் உங்களுக்கு ஏதாவது சிரமம் இருந்தால் தயவு செய்து எங்களுக்கு எழுதுங்கள்.

பின்னி லிமிடெட்
(பக்கிங்ஹாம் & கர்னாடிக் மில்ஸ்), கர்னாடிக் ஹவுஸ்,
தபால் பெட்டி எண்: 958, சென்னை-12.

**பின்னி**

*பெற்றோரின் பணத்திற்கு பெருமதிப்பளிப்பது*

BY-3886




# மகாத்மா காந்தி

தமிழாக்கம்:
ராஜாஜி

ஒரே ஊருக்குப் போகும் பல பாதைகளைப் போலாகும் சமயங்கள். போக வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேரும் பாதைகளில், எந்தப் பாதையில் போனால் என்ன, குற்றமில்லை. ஆராய்ந்து பார்த்தோமானால் உண்மையில் எத்தனை மக்கள் இருக்கிறோமோ அத்தனை வேறுபாடுகள் உண்டு சமயத்தில். ஒவ்வொரு உள்ளத்திலும் சமயம் என்பது தனித் தனி வடிவம் எடுத்துக் கொள்ளும். ஒரே சமயத்தாராயினும் தத்தம் அறிவுக்கும் குணத்துக்கும் தக்கபடி சமய உணர்ச்சி மாறுபடும். ஆனபடியால் உன்னுடைய சமயம், என்னுடைய சமயம் என்று சொல்லிக் கொண்டு பேத உணர்ச்சியை வளர்ப்பது தவறாகும். எல்லா சமயங்களும் சமம்.

(ஹிந்த் சுவராஜ - பக்கம் 36)

என்னுடைய கொள்கையின்படி எல்லா மதங்களுமே உண்மையாகும். ஏற்றக் குறைவு ஏதேனுமிருந்தால் அதை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை. மனிதன் தொட்டது எல்லாம் பூரணத்துக்குக் குறைந்துதான் இருக்கும். எவ்விதக் குறையுமற்ற சம்பூரணம் மக்கள் உலகத்தில் எப்படிக் காணப் பெறுவோம்? கடவுள் ஒன்றே பரிபூரணப் பொருள். அந்தப் பரிபூரணப் பொருள் நம்முடைய கருத்திலாவது மொழியிலாவது அடங்காது. ஒவ்வொருவனும் பூரண நிலை அடைய முடியும். அடைவதற்கு முயற்சி செய்ய வேண்டும். ஆனால் அந்த நிலையை அடைந்து விட்டால், அது சொல்லுக்கு அடங்காத நிலையாகும். ஆனபடியால் அடக்கத்துடன் சொல்லுகிறேன், வேதமும் குரானும், பைபிளுமே ஆண்டவனை நமக்குச் சம்பூரணமாக விளக்காது. குற்றமும் குறையும் நிறைந்த நாம், விருப்புகளிலும் வெறுப்புகளிலும் தோய்ந்திருக்கும் நாம் கடவுள் என்ற சொல்லின் பொருளைக்கூட முற்றிலும் உணர்வது முடியாத காரியம்.

(யங் இந்தியா 22-9-27)

ஈசன் ஒருவன் இருக்கிறான் என்பது எல்லாச் சமயங்களுக்கும் அடிப்பீடம். ஆயினும் உலகத்தில் உள்ள மக்கள் எல்லாம் ஒரே ஒரு சமயத்தை ஒப்புக்கொள்வார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. அனைவருக்கும் ஈசன் ஒருவனே ஆயினும் அவனை அனைவரும் ஒரே வடிவத்தில் காணமாட்டார்கள். தேசத்துக்கும் சூழ்நிலைகளுக்கும் குணங்களுக்கும் ஒத்தவாறு பலவேறு சமயங்கள் இருந்தே தீரும்.

(ஹரிஜன் 2-2-34)

நாம் கோர வேண்டியது அனைவரும் ஒரே மதத்தினர் ஆவது அல்ல. ஒவ்வொரு மதத்தினரும் பிற மதத்தினரை வெறுக்காமல் பொறுத்துக் கொண்டும், கௌரவித்தும் வர வேண்டும். அவ்வளவுதான். எல்லாரும் ஒரே மதத்தை ஒப்புக் கொண்டு வேறுபாடுகள் ஒழித்துவிட்டு இருக்க வேண்டும் என்பதில்லை. வேற்றுமைகளுக்கிடையில் ஒற்றுமை வேண்டும். சம்பிரதாய பேதங்களை எல்லாம் வேரோடு பறித்து எறிந்துவிட்டு, பரம்பரையாகவும் சூழ்நிலையின் காரணமாகவும் கால தேச வேறுபாடுகளினாலும் உண்டாகி வளர்ந்து வழக்கத்தில் இருக்கும் சமய பேதங்களை அடியோடு ஒழித்துவிடும் முயற்சி பயன் பெறாது. முடியாத காரியம். முடிந்தாலும் அது தெய்வ பக்தியைக் கெடுக்கும். சரீர வடிவ பேதங்களைப் போன்றது சமயபேதங்கள். பேதமற்ற ஆன்ம லட்சணத்தைப் போன்றது வெவ்வேறு சமயங்களில் கிடக்கும் பேதமற்ற உண்மை. சரீரம் வெவ்வேறாயினும் ஆன்மா ஒன்று. வடிவ வேற்றுமைகள் எப்போதும் இருந்தே தீரும். கொட்டைக்குள் பருப்பு இருக்கிறது! வெளி ஓடு எவ்வளவு பேதப்பட்டாலும் உள்ளேயிருக்கும் பருப்பு ஒன்றே. *

(யங் இந்தியா 25-9-29)

---

* அவரவர் தமதமது அறிவு அறிவகை வகை
அவரவர் இறையவர் எனஅடி அடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர்; இறையவர்
அவரவர் விதிவழி அடைய நின்றனரே.

என்ற இந்தத் திருவாய்மொழிப் பாட்டை ஒப்பு நோக்கலாம். (ராஜாஜி)

# ராமாயணத்தைப் புதிதாக எழுதுவோம்

தோத்தாராம் வலேசா

உபாத்தியாயர் சங்கர்லால் கராச்சியில் உள்ள ஓர் அரசாங்க உயர்நிலைப் பள்ளியின் உதவியாசிரியர். அவர் போதிப்பதில் மிக்க திறமை வாய்ந்தவர்; வேலையில் கண்டிப்பானவர். கூட வேலை செய்யும் ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் பிரியமானவர். அலுவலகத்தாரால் போற்றப்படுபவர். அண்டை வீட்டாரிடத்தும் நல்ல பெயர் பெற்று அவர்களின் மரியாதைக்கு ஆளானவர். அவர் தம் திறமையினாலும் தகுதியினாலும் அப்பள்ளியின் தலைமையாசிரியர் ஓய்வு பெற்றதும் அந்தப் பதவியை ஏற்றார்.

1942ம் வருஷம் 'வெள்ளையனே வெளியேறு' புரட்சி நாடெங்கும் பரவி யிருந்தது. வாலிபரிடம் உற்சாகமும் ஆவேசமும் தோன்றின. பார்த்த இடமெல்லாம் கூட்டங்களும் அணிவகுப்புகளும், ஹர்த்தால்களும் நடந்து கொண்டிருந்தன. ஆங்கிலேய ஆட்சியினர் இவைகளை அடக்க மக்களைச் சிறைப்படுத்தியும், தடியடி பிரயோகித்தும், துப்பாக்கி சுடக் கட்டளையிட்டும் வந்தனர். புரட்சியில் ஈடுபட்டவர்களுக்குக் கடுமையான தண்டனையும் விதித்தனர்.

உபாத்தியாயர் சங்கர்லாலின் மகன் மனோகர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். அவன் மிக்கத் திறமையுடன் உழைப்பவன். கல்லூரிப் படிப்பு முடிந்து அதே கல்லூரியில் தம் மகன் லெக்சரராக வேண்டும் என்பது சங்கர்லாலின் அவா. மனோகரும் தன் தந்தையின் விருப்பத்துக்கிணங்க மிக்க முயற்சியுடன் படித்தான்.

ஆனால் விடுதலைப் புரட்சியானது மாணவர்களின் மனத்தைக் கவர்ந்தது. இளைஞர்களிடையே நாட்டுப் பற்றாகிய காட்டுத் தீ பரவியது. அவர்களின் இதயம் நாட்டு விடுதலையின் பொருட்டுத் துடித்துக் கொண்டிருந்தது. மனோகரனும் விடுதலைப் போராட்டத்தில் குதித்தான். பள்ளிப் படிப்பில் முதலிடம் பெற்று வந்தபடியே இந்தப் போராட்டத்திலும் முதலிடம் பெற்றுக் கல்லூரி ஸ்டிரைக்கைத் தானே தலைமை ஏற்று நடத்தினான். மாணவர்களின் அணிவகுப்பில் தலைவனும் ஆனான். இதயத்தில் நாட்டின் விடுதலைத் துடிப்பு, முகத்தில் வீராவேசத்தின் வர்ணம், கண்களில் உற்சாகத்தின் ஒளி, கையில் தேசியக் கொடி பிடித்த வண்ணமாக மனோகரன் தன் மார்பை விரித்துக்கொண்டு மாணவர் சேனையின் முன் சென்று கொண்டிருந்தான்.

அவர்களுக்கெதிரில் போலீஸ்படை வந்தது. அணிவகுப்பின் முற்பகுதியில் சென்றுகொண்டிருந்த மாணவர்களைப் போலீஸார் பிடித்தனர். அவர்கள் கைகளில் ஏந்தியிருந்த கொடி





1921ம் ஆண்டு சிந்துவைச் சேர்ந்த ராதோ தேரோவில் பிறந்த திரு தோத்தாராம் ஸலோ 1939-லிருந்து சிறுகதைகளும் கவிதைகளும் கட்டுரைகளும் எழுதி வருபவர். 1947ல் தேசப் பிரிவினைக்குப் பின் இந்தியாவுக்குக் குடியேறினார். ஸௌராஷ்டிரத்தில் அகதிகள் முகாம் ஒன்றின் அதிகாரியாகப் பணியாற்றியுள்ளார். இப்பொழுது ஓர் அச்சகத்தின் மானேஜராகவும் 'காந்தி நாம் சமாசார்' என்ற பத்திரிகையின் ஆசிரியராகவும் பணியாற்றி வருகிறார். 'இராமாயணத்தைப் புதிதாக எழுதுவோம்' என்று கூறும் இவர் ஒரு தசரதனுக்கு எப்படி உயிர் ஊட்டுகிறார், பாருங்கள்!

○

களைப் பிடுங்கி எறிந்தனர். தடியால் அடித்தனர். மாணவர்களிடையே ஆவேசம் அதிகரித்தது. அவர்களின் கோஷங்கள் ஆகாயத்தைத் துளைத்துக் கொண்டிருந்தன. அக்கம் பக்கத்திலிருந்து கூடிய மக்களின் கூட்டம் பெருகியது. போலீசார் உடனடியாக முன்னின்ற மாணவர்களைப் பிடித்து வண்டியில் ஏற்றினர். மனோகர் அவர்களுள் முதல்வனாக இருந்தான்.

இந்தச் செய்தியைக் கேள்வியுற்றதும் சங்கர்லால் பதறிப்போனார். சில நாட்களாகவே அவர் உடல் நலமற்று வீட்டிலேயே இருந்தார். இச் செய்தியைக் கேட்டதிலிருந்து அவர் உடல்நிலை மிகவும் மோசமாகிக் கொண்டிருந்தது. படுத்த படுக்கையாகி விட்டார்.

சங்கர்லால் பொதுவாக நாட்டின் விடுதலையை விரும்பி வந்தார். காந்திஜியிடம் மிக்க மரியாதை செலுத்தி வந்தார். விடுதலைப் போராட்டத்தில்





பங்கெடுத்துக் கொள்ளும் தொண்டர்களிடம் கருணை காட்டுவார். ஆனாலும் தம் மகன் போராட்டத்தில் இறங்கியது அவருக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை.

அக்காலத்தில் அரசாங்கத்தினர் கிளர்ச்சியில் ஈடுபடும் மாணவர்களைத் தண்டிப்பதுடன் நிற்காமல் இதற்குக் காரணம் பெற்றோர்களே என நினைத்து அவர்களையும் தண்டித்தனர்.

உபாத்தியாயர் சங்கர்லால் படுத்த படுக்கையாகவே இருந்தார். கவலையானது நீண்டகாலத்து வியாதிக்குக் காரணமாயிற்று. எத்தனையோ டாக்டர்கள் பார்த்தனர், எத்தனையோ மருந்துகள் மாற்றப்பட்டன. ஆனால் குணமடைந்தபாடில்லை.

**ம**னோகர் சிறையில் இருந்தான். அவன் மீது தொடுத்த வழக்கு முடிவடைந்தது. அவனுக்கு இரண்டு வருடச் சிறையும் இருபது சவுக்கடிகளும் தண்டனையாகக் கிடைத்தன. இச்செய்தியைச் சங்கர்லாலுக்குத் தெரியாமல் மறைத்து வைக்க முயற்சி செய்தனர்.

ஒரு நாள் சங்கர்லால் மயக்க நிலையில் படுத்திருந்தார். அடுத்த அறையில் மனோகரின் தண்டனையைப் பற்றிய பேச்சு நடந்துகொண்டிருந்தது. சங்கர்லால் தற்செயலாக மயக்கம் தெளிந்தார். அவர் காதுகளில் சில வார்த்தைகள் விழவே தாங்க முடியாக் கவலையினால் மறுபடியும் மயக்கமுற்றார். அந்த நிலையிலும் அவர், மகனின் தண்டனையைப் பற்றி வாய் பிதற்றினார்.

மனோகரின் தாயாரும் மிக்கக் கவலை கொண்டிருந்தாள். அவள் சங்கர்லாலின் முன் இதைப் பற்றி ஒன்றுமே பேசாமல் இருக்க முயன்று தன் மனத்துக்குள்ளே அழுது கொண்டிருந்தாள். அவளுடைய இதயமோ வெடித்து விடும்போல் இருந்தது. விம்மல் பொங்கி எழுந்து கொண்டிருந்தது. ஒரு பக்கம் அவளுடைய கணவர் கவலைக்கிடமாகப் படுத்திருக்க, மற்றொரு பக்கம் அவளுடைய மகன் சிறைத் தண்டனை அனுபவித்துக்கொண்டிருந்தான். ஆகவே அவள் ஆதாரமற்ற நிலையில் தவித்துக் கொண்டிருந்தாள்.

அக்காலத்தில் 'சிறையில் என்னென்ன கொடுமைகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன என்னும் செய்திகள் செய்தித் தாள்களில் வெளியாவதில்லை. ஆனால் காங்கிரஸ் ரகசிய வெளியீடுகளில் இவ்விதச் செய்திகள் வெளிவந்து கொண்டிருந்தன. இவை எங்கிருந்து வருகின்றன, யார் விற்கிறார்கள், யார் வாங்குகிறார்கள் என்பவற்றை மிகச் சிலரே அறிந்திருந்தனர். ஆனால் ஒவ்வொரு நாளும் தவறாமல் இந்த வெளியீடுகள் வீடுதோறும் மக்களிடையே சேர்ப்பிக்கப்பட்டும் வந்தன.

ஒரு நாள் அந்தக் காங்கிரஸ் வெளியீட்டில் மனோகருக்குக் கசையடி கொடுத்ததாகவும், அவன் 'புரட்சி வாழ்க!' என்று கோஷித்துக் கொண்டே கசையடியைப் பொறுத்துக் கொண்டான் எனவும், மன்னிப்புக் கேட்டால் கசையடி நிறுத்தப்படும் எனச் சொல்லியும் அவ்வீரன் மன்னிப்புக் கேட்காமல் அந்நிய ஆட்சிக்கு விரோதமாகக் கோஷமிட்டுக் கொண்டிருந்தான் எனவும், சிறையதிகாரிகள் இரக்கமின்றி மேலும் மேலும் அடித்துக் கொண்டே இருந்ததாகவும் அதனால் அவனுடைய உடல் இரத்தமயமாகி விட்டதென்றும் செய்தி வெளிவந்தது.

இதைப் படித்த ஒவ்வொருவரும் மனோகரைப் போற்றினர். எத்தனையோ பேர் அவன் வீட்டுக்குச் சென்று அவனுடைய தாயார் இலட்சுமியிடம் அவ்வீர மகனின் தீரத்தைப் பாராட்டி வாழ்த்தினர்.

இலட்சுமிக்கு இந்தப் பெருமை தரக்கூடிய விஷயம் ஒரு பக்கம் உற்சாகமளித்தது. மறு பக்கம் தன் கணவர் வெகு நேரமாக நினைவற்ற நிலையில் படுத்திருப்பது பெருங் கவலையைத் தந்தது.

அவளுடைய நிலைமை முற்றிலும் கௌசல்யாவின் நிலைமையையே ஒத்திருந்தது. மகனாகிய இராமன், தந்தையின் கட்டளையை நிறைவேற்றச் சிரித்துக்கொண்டே கானகம் சென்றான். கணவனாகிய தசரதனோ அதே கவலையினால் மரணப் படுக்கையில் படுத்தபடியே மடிந்தான். ஒருபுறம் தன் கணவனின் பிரிவு; மறுபுறம் தன் மகனின் தைரியம் பொருந்திய தியாகம்!—வேதனையும் இன்பமும் கலந்த உணர்ச்சியில், அழுவதா சிரிப்பதா என்னும் நிலைமையில் தடுமாறிக் கொண்டிருந்தாள் அவள்.

உபாத்தியாயர் சங்கர்லால் முடிவில் இவ்வுலகத்தை விட்டு மறைந்தார். ஆயிரக் கணக்கான ஜனங்கள் இலட்சுமிக்கு ஆறுதல் சொல்ல வந்தனர். துயரத்தால் அழுது கொண்டிருந்த இலட்சுமியைப் பார்த்து, ''அம்மா, இது உங்கள் குடும்பத்தின் மாபெரும் தியாகம். இவ்வீரக் கதை நாட்டின் விடுதலைப் போராட்டத்தின் சரித்திரத்தில் என்றும் அழியாமல் இருக்கும்!'' என்றனர்.

**கா**லம் மாறியது. ஒரு யுகம் முடிந்தது. புது யுகம் தொடங்கிற்று. விடுதலையடைந்த நாடு செழிக்கலாயிற்று. மனோகர் தன் குடும்பத்துடன் பம்பாய் வந்தடைந்தான். அவன் விடா முயற்சியும் உழைப்பும் உடையவனாகையால் அங்கேயே தங்கிவிட எல்லாவித முயற்சிகளும் செய்தான். அப்பொழுது நாட்டில் எத்தனையோ அணைக்கட்டுகள் கட்டிக் கொண்டிருந்தனர். பல புதிய புதிய நகரங்களை நிர்மாணித்துக் கொண்டிருந்தனர். மனோகரன் எந்த வேலையில் ஈடுபட்டாலும் அந்த வேலை மனோகரமாகவே தோன்றும். எந்த வேலையாக இருந்தாலும் சரி, அதில் தன் பயனை மட்டும் கருதாமல் நாட்டின் நலனையும் கருதி வந்தான். அவனுடைய ஒவ்வொரு நரம்பிலும் நாட்டுப் பற்று நிரம்பி யிருந்தது.

ஆரம்பத்தில் அவன் ஒரு கண்டிராக்டரின் கீழ் வேலை செய்துகொண்டிருந்தான். பிறகு தானே கண்டிராக்ட் எடுக்கலானான். அவன் உழைப்பாளி மட்டுமல்ல, எல்லோருக்குமே நம்பிக்கையானவன். அவன் தன் தொழிலில் முன்னேறிக் கொண்டே போனான்.

இவ்விதம் வளர்ச்சியடைந்த மனோகரன் வெகு சீக்கிரத்தில் மனோகரதாஸ் சேட்டாக மாறினான். அவன் தன் தொழிலைப் பெருக்குவதற்காகப் பல பெரிய திட்டங்களை வரையறுத்து அதன்படி செய்து வந்தான்.

மனோகரனுக்கு ஒரு புதல்வன் இருந்தான். மனைவி சீக்கிரமே இறந்துவிட்டாள். ஆகவே

# வேண்டாம்!

உங்கள் பேனாவை உடைப்பதில்
பயனில்லை. பேனா நன்றாக
எழுத, நல்ல இங்க் தேவை.
தங்கு தடையின்றி பெருகும்,
சீக்கிரம் உலர்ந்துவிடும் கேமல்
டீலக்ஸ் இங்க் நிரப்புங்கள்.






## கேமல்

டீலக்ஸ் இங்க் வாங்குங்கள்

---

## மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

## ஹேடன்ஸா

உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

ODL-3791-TAM

---

பண்டிட்
டி.கோபாலாசார்லுவின்

## அருணா

மாதர்களின் ஆரோக்கிய
சௌபாக்கியத்திற்கு

1898 ஆண்டிலிருந்து
பிரசித்தி பெற்றது...

## ஆயுர்வேதாஸ்ரமம்

பிரைவேட் லிமிடெட்

# டாப் ரகசியம்!




புதிய **பினகா டாப்** மட்டிலுமே, மறைந்துள்ள பாக்டீரியாக்களை ஒழிப்பதற்கென, பற்பசையை வாயின் எல்லாப் பகுதிகளிலும்—பல்லிடுக்குகளிலும், ஈறுகளிலும்—பரப்பும் ரகசியப் பொருள் அடங்கியுள்ளது. எனவே நீங்கள் நாள் முழுவதும் வாயில் 'டாப்' தூய்மையைப் பெறுவீர்கள்!

என்ன சான்று என்று கேட்கிறீர்களா? ஆராய்ச்சிக் கூடத்தில் நிரூபிக்கப்பட்ட இந்தச் சோதனையை நீங்களே செய்து பாருங்கள்!



முதலில், கண்ணாடித் தட்டு ஒன்றில் சிறிதளவு தண்ணீர் ஊற்றிக் கொள்ளுங்கள். இந்த நீரில் சிறிதளவு கரிப் பொடி அல்லது கரப்பு பொடியைத் தூவுங்கள்.



சிறிதளவு நீரில் பினகா டாப் கலந்து, கரைசலின் ஒரு துளியை கண்ணாடித் தட்டின் நடுவில் தெளியுங்கள்.



பினகா டாப் எப்படி எல்லாத் திசைகளிலும் அதி வேகமாகப் பரவி... அழுக்கைஅகற்றி, தண்ணீரை நிர்மலமாக ஆக்குகிறது என்பதைக் கண்கூடாகக் காண்பீர்கள்.




**பினகா டாப்**...தூய்மையான வாய்ப் பாதுகாப்பின் 'டாப்' ரகசியம்!

mcm/ciba/150a/tam

தன் மகன் இராமனை மிக்க அன்புடன் வளர்த்தான். அவன் மறு விவாகம் செய்துகொள்ள இசையவில்லை. அவனுடைய தாயார் இலட்சுமிக்கு வயதாகிவிட்ட போதிலும் உடலில் நல்ல பலம் இருந்தது. வீட்டு வேலைகளைத் தானே செய்து வந்தாள். அவர்கள் வாழ்க்கை இன்பமாகக் கழிந்து கொண்டிருந்தது.

மனோகர்தாஸின் மகன் இராமன் இப்போது கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். மனோகர் அவனுக்குப் பொறி இயல் துறையிலேயே இயன்றவரை உயர் கல்வி அளிக்க விரும்பியிருந்தான். நாட்டில் இஞ்சினியர்களின் அவசியத்தை அவன் நன்றாக அறிந்திருந்தான். தவிர தானும் கண்டிராக்டர் வேலை பார்த்துக் கொண்டிருந்ததால் தன் மகனை இத்தொழிலில் முன்னேற்றுவிக்க விரும்பினான்.

இந்தியாவின் மீது பாகிஸ்தான் போர் தொடுத்தது. மேற்கெல்லையில் போர்த் தீ மூண்டு நாடு ஆபத்தான நிலையில் இருந்தது. இளைஞர்கள் சேனையில் சேர முன்வந்தனர். இராமனும் சேனையில் சேருவதற்கான ஏற்பாடுகள்செய்துகொண்டிருந்தான். இது மனோகர்தாஸுக்குப் பிடிக்கவில்லை. அவனுடைய பெரிய பெரிய திட்டங்கள் இராமனோடு சம்பந்தப்பட்டிருந்தன. அவனைக் கொண்டே வருங்காலக் கனவுகளை நனவாக்க எண்ணியிருந்தான். ஆகவே, ராமனிடம், ''நான் செய்து வரும் வேலையும் தேச சேவையே! சேனையில் சேர்ந்து செய்யும் வேலையே தேச சேவை என்றால் மற்ற வேலைகள் தேச சேவை ஆகாதா?'' என்று கூறி அவன் மனத்தை மாற்ற முயன்றான்.

ஆனால் இராமன் இந்த அறிவுரையை ஏற்கவில்லை. அவன் தாழ்மையுடன், ''அப்பா! தாங்கள் செய்து வரும் தொழிலும் நாட்டின் சேவையேதான். ஆனால் என் மனம் கேட்கவில்லை. நாட்டின் மேற்கெல்லையைக் காப்பாற்ற உயிரையே பணயம் வைத்துப் போரில் இறங்க விரும்புகிறேன்'' என்றான்.

இதனால் மனோகர்தாஸ் மிகவும் வெறுப்படைந்தான். சிறிய சிறிய விஷயங்களும் அவனுக்கு எரிச்சலை ஊட்டின.

இதைக் கண்ட மனோகர் தாஸ் சேட்டின் தாயார் இலட்சுமி, ''மனோகர்! நீ ஏன் கவலைப்படுகிறாய்? உன் மகன் நாட்டின் எல்லையைக் காக்கப் போகிறான் என்றா? எத்தனையோ இடையூறுகளையும் பொறுப்புகளையும் ஏற்றுப் போர்முனைக்குப் போகும் இவனை நீ புரிந்து கொள்ளாமல் ஏதேதோ பிதற்றுகிறாயே? சிறியவனாக இருந்தபோது நீயும் இவ்விதமே செய்யவில்லையா? இதனால் உன் தந்தை கவலையுற்று உடல்நலமற்றுப்போனார். நீயோ விடுதலைப் போராட்டத்தில் குதித்து விட்டாய். அந்த நேரத்தில் உன் தந்தையின் நிலைமை எவ்வளவு மோசமாக இருந்தது என்று உனக்குத் தெரியுமா? ஆனால் நீயோ கொஞ்சமும் பொருட்படுத்தாமல் சிறைக்குச் சென்றுவிட்டாய். நான் அந்த நேரத்தில் உன்னைத் தடுக்கவில்லை. ஏன் தெரியுமா? நீ நாட்டின் நலனைக் கருதிப் போனாய்; வீட்டின் பெயரை நிலைநிறுத்தச் சென்றாய். இராமர் அரக்கரை மாய்க்கச் சென்றார். தசரதரோ அவருடைய பிரிவால் உயிர் நீத்தார். என்னை என் சிநேகிதிகள் அந்த ஸ்ரீராமனின் தாயாரான கௌசல்யா எனப் போற்றினர்.

''இன்று மறுபடியும் அதே சந்தர்ப்பம் வந்திருக்கிறது. இராமன் நாட்டைக் காப்பாற்றப் போய்க் கொண்டிருக்கிறான். அவன் அரக்கர்களை மாய்க்கப் போர் முனைக்குப் போய்க் கொண்டிருக்கிறான். நீ அவனைத் தடுக்காதே. அப்போது நீ சிறைக்குச் சென்ற காரணத்தினால் உன் தந்தையின் வேலை போய் விடும் போலிருந்தது. ஆனால் இப்பொழுதோ இராமன் போருக்குப் போகும் காரணத்தைக் கொண்டு ஒருவித தொந்தரவும் நமக்கில்லை. மாறாக உன் பெயரும் புகழும் ஓங்கும்'' என்றாள்.

ஒரு நாள் இராமன் தன் பாட்டியின் கால்களைப் பிடித்துக் கொண்டு ''பாட்டி, சேனையில் சேரும்படி கடிதம் வந்திருக்கிறது. நாளையே நான் போக வேண்டும்'' என்றான்.

இதைக் கேட்ட இலட்சுமி தன் வாலிபப் பேரனை உற்று நோக்கினாள். அவளுக்கு அவன் உண்மையாகவே பகவான் ஸ்ரீராமனின் திவ்விய அவதாரம்போல் தோன்றினான்.

''குழந்தாய்! நீ உன் தந்தையின் ஆசீர்வாதம் பெற்றுப் போய் வா. நான் இன்றிரவு அவனிடம் சொல்லி வைக்கிறேன்'' என்றாள்.

எப்பொழுது மனோகரன் வருவான், எப்பொழுது அவனிடம் இந்த நற்செய்தியைச் சொல்லுவோம் என்று வழி பார்த்துக்கொண்டிருந்த இலட்சுமியின் மனத்தில் ஒருவேளை அவன் ஆசீர்வதிக்க இசையா விட்டால் அல்லது ஏதேனும் அமங்கலமான வார்த்தை சொன்னால் என்ன செய்வது எனப் பயந்தாள். அவள் இராமனை முறைப்படி அன்புடனும் குதூகலத்துடனும் வீட்டிலிருந்து வழியனுப்ப வேண்டும் என விரும்பினாள். ஆகவே கவலையற்று வழியனுப்பும் வேலையில் ஈடுபட்டாள்.

சரியான சமயத்தில் மனோகர் தாஸ் சேட் வீட்டில் நுழைந்தான். நுழைந்ததும் அவன், ''என்ன இராமன் வனவாசத்துக்குத் தயாராகி விட்டானா?'' எனக் கேட்டான். இதைக் கேட்ட அவ்விருவரும் வியப்புடன் அவனைப் பார்த்தனர். மனோகர் தன் கோபத்தினால் இராமனையும் கோபிக்கச் செய்தால் என்னவாகும் என இலட்சுமி பயந்தாள். இந்த நல்ல நேரத்தில் ஏதாவது சொல்லிவிடுவாரோ என இராமனும் பயந்து நின்றான். சிறிது நேரத்துக்குள் இருவரும் அமைதியடைந்தனர். ஆனால் இருவருடைய இதயமும் பாரமாக இருந்தது.

''இராமன் வனவாசத்துக்குப் போகட்டும். அரக்கரை அழிக்க இராமன் வனவாசத்துக்குப் போகத்தான் வேண்டும். என் ஆசீர்வாதம் இருக்கிறது. ஆனால் தற்சமயம் நான் பழைய இராமாயணத்தை எடுத்துக் கூறவில்லை. தசரதன் தன் புதல்வனின் பிரிவால் துடித்து உயிர் விட மாட்டான். அவனும் அரக்கரை ஒழித்துக்கட்டப் போருக்குப் புறப்படுவான். நானும் சேனையில் சேர்ந்துவிட்டேன். நாம் இராமாயணத்தைப் புதிதாக எழுதுவோம். இராமனும் தசரதனுமாக நாம் இருவரும் சேர்ந்து அரக்கரை ஒழிக்கப் புறப்படுவோம்.''

தமிழாக்கம்: ஜா. க. ரா. கஜுத்தே




# தடை

## அத்தியாயம் 24

"ஏது நடந்தாலும் நான் ஏற்கத் தயாராகத்தான் வந்திருக்கிறேன். நீங்கள் கோபம் கொண்டு என்மீது பாய்ந்துவிடுவீர்கள் என்று எதிர்பார்த்துத்தான் வந்திருக்கிறேன். என் உயிரே போவதானாலும், நான் அந்த நிகழ்ச்சியை இன்முகத்துடன் ஏற்பேன். என் மரணமாவது என் சகோதரிக்கு நல்வாழ்வைக் காட்டட்டும்'' என்றாள் ரமா.

''உன் மிரட்டலுக்குப் பயந்துவிடுபவன் நான் இல்லை. நான் ஏமாற்றப்பட்டு விட்டேன். இனியும் நான் ஏமாற மாட்டேன்'' என்றான் வாசு உறுதியாக.

''ஏமாற்றப்பட்டு விட்டதாக நீங்கள் கூறும் நிகழ்ச்சியைக் கூறுங்கள். நான் உங்களை விட்டு விட்டு ரூபகுமாரை மணந்துவிட்டதை நீங்கள் குறிக்கலாம். ஆனால் அதற்காகக் காந்தியின் வாழ்வை ஏன் பாழடிக்கிறீர்கள்? அவள் வாழ்வை ஏன் பணயம் வைத்து விளையாடுகிறீர்கள்? உங்கள் சினத்தை என்மீது காட்டுங்கள். நான் ஏற்கிறேன். ஓர் அபலைப் பெண்ணை ஏன் நாசமாக்கி நசுக்குகிறீர்கள்? நம்மிடையே காதல் இருந்தபோதே அவள் மனத்திலும் உங்கள் மீது காதல் இருந்திருக்கிறது. அப்பொழுதும் அவள், நாம் இன்பமாக வாழ வேண்டும் என்பதற்காகவே தன் காதலைப் பற்றி வெளியிடாமல் இருந்தவள். அப்படிப்பட்ட ஒரு நல்ல பெண்ணை, அவள் காதல் சுடேறிவிட்ட நேரத்தில் ஏன் இப்படிக் கொடுமைக்கு ஆளாக்குகிறீர்கள்? காந்தியை உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் விவா

கமே செய்து கொண்டிருக்கக்கூடாது. தாம்பத்தியப் பிணைப்பில் அவளை ஒட்ட வைத்துக் கொண்டு விட்ட பிறகு அவளை இன்பமாக வாழ வைக்க வேண்டியது உங்கள் கடமை.''

''இன்பமாம்! கடமையாம்! இன்பத்தையும் கடமையையும் பற்றிப் பேச உனக்கு என்ன உரிமை? என் எதிரில் வந்து இப்படிப் பேச உனக்கு வெட்கமாக இல்லே?'' தாய்மையைத் தாங்கியிருந்தாலும் ரமாவிடம் மலர்ச்சி இல்லை என்பதை அவன் அறிவான். அப்படியிருந்தும் ரமாவின் கேள்வி அம்புகள் அவனை நிலைகுலையச் செய்து விட்டன. அவன் தன் ஆத்திரம் முழுவதையும் கொட்ட ஆரம்பித்து விட்டான்.

ரமா ஏன் வந்தாள் என்று முதலில் நினைத்த தேவகிக்கு அவர்கள் பேச்சைக் கவனித்தபோது வாசுவை அதட்டிக் கேட்க ரமா வந்தது நல்லதென்றே தோன்றியது. வாசுவும்தான் நின்று பதில் சொல்கிறானே! ரமா கூறுவது போல் இரண்டில் ஒன்று தீரட்டுமே... ஆனால் வாசுவின் குரல் ஓங்க ஆரம்பித்ததும் அவள் நடுங்க ஆரம்பித்து விட்டாள்.

''வாசு! எல்லை மீறிப் பேசாதே!'' என்று தேவகி கூறினாள்.

''அவரைக் கட்டுப்படுத்தாதீர்கள் அம்மா! அவர் தம் மனத்தில் இருப்பதையெல்லாம் கொட்டிப் பேசட்டும். அப்போதுதான் காந்தியின் வாழ்வு

# ராட்டினம்

எஸ். ரங்கநாயகி

எந்தச் சிக்கலில் நிற்கிறது என்று புரியும். இனி என் வாழ்வில் ஒரே ஒரு விருப்பம்தான். காந்தி இன்பமாக வாழவேண்டும். என்னுடைய மற்ற விருப்பங்கள் முறிந்துவிட்டது போல் இதுவும் முறிந்துவிடாதபடி நான் கடைசி மூச்சு வரையில் பாடுபடப் போகிறேன்.'' ரமாவின் குரலில் உறுதி இருந்தது.

''உன் விருப்பங்களுக்கு நான் இங்கு மதிப்புக் கொடுக்கப் போவதில்லே. உன் விருப்பமெல்லாம் பச்சோந்தி வகையைச் சேர்ந்தது. நினைத்தால் மாறிவிடும். அதுபோல் நான் இருக்க முடியாது. ஒருவரோடு காதல் செய்து விட்டு இன்னொருவரோடு கொஞ்சும் வகையைச் சேர்ந்தவனில்லே நான்.''

''அப்படியானால் காந்தியோடு விவாகத்துக்குச் சம்மதித்திருக்கக் கூடாது.''

''அம்மா சொன்னதால் ஒப்புக் கொண்டேன். அம்மாவைச் சந்தோஷப்படுத்திவிட்டேன்.'' அவன் வார்த்தைகள் தொய்ந்துவிட்டன.

''பொய்! பொய்! நான் சொன்னதற்கு இரண்டு மாதங்களுக்குப் பிறகு நீயாகத்தான் என்னிடம் வந்து திருமணத்துக்குச் சம்மதம் தந்தாய். 'அம்மாவைச் சந்தோஷப்படுத்த' என்கிறாயே, இப்போது அதே அம்மாவைச் சந்தோஷப் படுத்தக் காந்தியோடு இணைந்து வாழ்வதற்கு என்ன?'' இப்போது தேவகியே குறுக்கிட்டுக் கேட்டாள்.

''முடியாதம்மா, முடியாது. இந்த ரமாவைப்போல் நினைத்தபடி மனத்தை மாற்றிக்கொள்ள என்னால் முடியாது.''

''முடியத்தான் வேண்டும். இனி காந்தியின் வாழ்வுக்கு நீங்கள்தான்



ஆதாரம். இந்த ஆதாரத்தை நீங்கள் முறித்துவிடக் கூடாது. முறித்துவிட முடியாது.... நான் என் கடைசி மூச்சு வரை உங்களை விடமாட்டேன். கட்டாயப்படுத்திக் கொண்டுதான் இருப்பேன்'' என்று ரமா கூறினாள்.

''ஷட் அப் ரமா! வாயைத் திறக்காமல் இங்கிருந்து சென்றுவிடு. இங்கு வந்து யாருக்கு எதிரில் நீ வாதாடுகிறாய் என்று கொஞ்சமாவது நினைத்துப் பார்த்தாயா? எந்த மனிதனிடம் கொஞ்சிக் குலாவிக் காதல் மொழிகளையெல்லாம் பேசினாயோ, அந்த மனிதனிடம் நீ பேசுகிறாய். எனக்கு ஆசை காட்டினாய். உன்னையும் என்னையும் பிரிக்க முடியாது

என்றாய். இப்படியெல்லாம் அன்புத் தத்துவங்களைப் பேசி விட்டுப் பணப் பேராசையில் விழுந்து ரூபகுமாரை மணந்தாயே, துரோகி! உன் சரீரத்தில் இருப்பது இதயமில்லை. பாறாங்கல்.... பாறாங்கல்!'' வாசு ரமாவின் தோளைப் பிடித்து வேகமாக உலுக்கினான்.

தேவகி பயந்து விட்டாள். வாசுவின் கைகளை ரமாவின் தோளிலிருந்து நீக்கி, ''ஏ, வாசு! எடு, கையை. ரமாவைத் தொடவோ, சாடிப் பேசவோ உனக்கு உரிமை ‘கிடையாது'' என்று பெண் புலியாக உறுமினாள்.

''நீ சும்மா இரும்மா... இவள் பணப் பிசாசு, நயவஞ்சகி, துரோகி....''

''மூடுடா வாயை! யாரைப் பார்த்து இப்படிப் பேசுகிறாய்? உன் விவாகம் ஆகும் வரை உன்னிடம் சொல்லக் கூடாதென்று இருந்தேன். இப்போது கேட்டுக் கொள். ஒரு தாய்க்கு ஒரே மகனாக நீ இப்போது என் எதிரில் உயிரோடு பேசுகிறாயே, அதற்கு முக்கிய காரணம் ரமாவின் காதல் தியாகம் தான். விபத்துக்குப் பிறகு உன் உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. உன் உடலில் ஏற்ற ஆஸ்பத்திரியில் இரத்தமில்லை. ரத்தம் கொடுக்க ரூபகுமார் வந்து நின்றான். அவன் போட்ட நிபந்தனைக்கு உட்பட்டு, உன் உயிருக்காகத் தன் காதலையே பணயமாக வைத்து இவள் உன்னைக் காப்பாற்றினாள். நீ பிழைத்த பிறகு இவள் ரூபகுமாரை ஏமாற்றியிருக்கலாம். ஆனால் தோல்வி வெறியில் உன் உயிருக்கே உலை வைத்து வஞ்சம் தீர்த்து விடப் போகிறானே என்ற அச்சத்தில் உன் உயிர் ஒன்றையே முக்கியமாகக் கருதி அவள் ரூபகுமாரை மணந்து விட்டாள். இது கட்டாயக் கல்யாணம் என்பதை மறக்காதே. காந்தி ஒரு பெண்ணானதால் உன்னை அவள் தாய்மைக்குக் கட்டாயப்படுத்த முடியவில்லை. ஆனால் ரூபகுமார் ஆண், அதனால் ரமா பலவந்தமாகத் தாய்மையை ஏற்கும்படி ஆகி விட்டது. ரூபகுமார் இப்போது உள்ளத்தின் நுட்பங்களைப் புரிந்து கொண்டு பச்சாத்தாபம் என்னும் தீயில் எரிந்து வாடுகிறான். ரமாவோ அவனை மன்னித்து மனைவி என்ற நிலையில் அவனைச் சமாதானம் செய்வதில் ஈடுபட்டிருக்கிறாள். இந்த ரமாவை, இந்தப் பசும் பொன்னை, தங்கரத்தினத்தை, எனக்கு மைந்தனை மீட்டுக் கொடுத்த இந்த அற்புதப் பெண்ணை நீ எப்படியடா ஏசலாம்?'' என்று கூறிக் கொண்டே போனாள்.

வாசு கேட்டுக் கொண்டே போனான். அப்போது.... அவன் மனத்தில் எத்தனை திருப்பங்கள்... ரமாவின் காதல் என்னும் பலி வேதியில் அவன் உயிர் மீண்டிருக்கிறது. 'ரமா தன் காதலைத் தியாகத்துக்கல்லவோ உபயோகித்திருக்கிறாள்...! அந்த இரத்த தானம் இருவரையும் பிரிக்கும் சாதனமாகவா அமைந்திருக்கிறது? இத்தனை நாட்களும் ரமாவின் மேன்மையான இந்த உள்ளப் பாங்கை ஒருவரும் காட்டாமல் விட்டுவிட்டார்களே... ரமா...தேவி!'

''ஐயோ, அம்மா!'' வாசு தன் தலையைப் பிடித்துக் கொண்டான்.

இதே நேரத்தில் ரமாவின் கண்கள் தாமாக மூடிக் கொண்டன. மூடிய கண்களுள் கடந்த கால நிகழ்ச்சிகள் திரைப்படமென ஓடலாயின.

வாசு விபத்தில் சிக்கி ஆஸ்பத்திரியில் இருக்கிறான். பொருத்தமான இரத்தம் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. அந்த நேரத்திலே ரூபகுமார் அந்த இடத்துக்கு வருகிறான். ரமாவிடமிருந்து எத்தனை கெஞ்சல்கள்..... எத்தனை பேச்சுக்கள்! அவன் அசையவில்லை. அதற்கு அவன் பணயமாகக் கேட்கும் பொருள் அவள் வாழ்வையே பொசுக்கக் கூடியது. மனத்தோடு அவள் கதறிக் கொண்டு வாசுவின் உயிர் ஒன்றையே குறியாகக் கொண்டு அப்பணயத்துக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளுகிறாள். அடுத்த கணம் அவள் மூர்ச்சையாகிறாள்.

கண் விழித்த போது ஆனந்த்...அப்போது... அப்போது... ஆனந்த் நன்றாகத் தெளிவாக எல்லாவற்றையும் கூறியிருக்கக் கூடாதா? விதி செய்த சதி அவனை எப்படி ஓட வைத்து விட்டது?

ரூபகுமார் பிரளயத்தை எதிர்பார்த்துத்தான் சொற்களைக் கூறினான். ''ரமா! கடவுள் எனக்கு மன்னிப்புத் தரமாட்டார். உன்னை அடைய வேண்டும் என்ற குறியில்..நான்..ரமா,மனத்தைத் திடப்படுத்திக் கொள்...நான் உன்னிடம் அப்போது உண்மையைக் கூறவில்லை. சந்தர்ப்பமும் எனக்கு உதவியது. ரமா, வாசுவுக்கு நான் இரத்த தானம் செய்யவில்லை. நான் தயாராகப் போனபோது என் இரத்தம் பொருந்தவில்லை. அதே நேரத்தில் ஆனந்த் வந்து விட்டார். அவர் இரத்தம்தான் உபயோகப் பட்டது. தற்பெருமை அவரிடம் இல்லாததாலும், அவசரத்தின் காரணமாகவும் ஆனந்த் தம் இரத்த தானத்தைக் குறிப்பாகக் கூறாமல் சென்று விட்டார். ஆனால் நான் உன்னிடம் உண்மையைக் கூறாவிடினும் அதன் பிறகு விவாகத்துக்கு உன்னை நான் கட்டாயப்படுத்தவில்லை என்பது உனக்கு நினைவு இருக்கும். பிறகு நீ விவாகத்துக்கு முற்பட்டதும், நான் ஆனந்த் திரும்புவதற்குள் நம்

# இதோ!
# CCM-ன் மிர்ராபோ
## 2×2 ஃபுல் வாயில்கள், புடவைகள்

மிர்ராபோ 2 x 2 ஃபுல்வாயில்கள் இப்போது புடவைகளிலும் கிடைக்கின்றன. இவை எத்தனை அழகு? எத்தனை சேர்த்தி?

இவை தனித்தன்மை வாய்ந்த 'ஆண்டிகிரிஸ்' செய்யப்பட்டவை. உயர்தர எகிப்திய பருத்தியிலிருந்து தயாரிக்கப்பட்டவை. அழகுக்கு அழகு ஊட்டுபவை. அணிவதற்கு ஏற்றவை. இவை அழகிய பிரிண்டுகளிலும், வெண்மை, தளிர் வண்ணங்களிலும் உள்ளன.

மற்றும் மிருதுவான கோட்டா புடவைகள் கண்கவர் வண்ணங்களிலும் பிரிண்டுகளிலும் உள்ளன.



தி கோயம்பத்தூர் காட்டன் மில்ஸ் லிமிடெட்
கோயம்பத்தூர்-15

CCM சிறப்பு ஷோரூம்கள்:
17/93, ஒப்பணக்காரத் தெரு, கோயம்பத்தூர்-1
387, மெயின் ரோடு, கோவில்பட்டி

மிர்ராபோ

விநியோகிப்பவர்கள்:
வெங்கடேஷ் வஸ்திராலயா
கோயம்பத்தூர்-2 & சென்னை-1

விவாகத்தை முடித்துவிடத் துடித்தேன். ரமா... இதையெல்லாம் கேட்கும் போது உன் மனம் எப்படிப் புரண்டு புரண்டு தவிக்கும் என்று எனக்குத் தெரியும்.... ஆனால்... ரமா! நான் தண்டனையை ஏற்கச் சித்தமாக இருக்கிறேன்.''

அவன் கூறிய சொற்கள் மகிழ்ச்சி எக்காளத்தில் மிதந்து வந்தவை அல்ல; தவிதவிக்கும் நெஞ்சோடு உருகிச் சொன்ன சொற்கள். ரமா தன் இதயத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். அதை விட்டு விட்டால் அவளை மீறிய சக்தியை அது பெற்றுவிடும் என்று பயம். அவள் தன்னைக் கேட்டுக் கொள்கிறாள். 'அவனுக்குத் தண்டனை அளிக்கும் முறையில் அவனை ஒதுக்கிவிட முடியுமா? விவாக பந்தம் மட்டுமல்ல; தாய்மையைத் தாங்கி நிற்கும் அவள் பிறக்கப் போகும் மதலைக்குத் தந்தை என்னும் பதவியிலிருந்து அவனை எப்படித் தள்ளிவிட முடியும்?'

கடைசியில் அவள் பல மனப் போராட்டங்களுக்குப் பிறகு அவனை மன்னித்து விடுகிறாள். ஆனந்திடம் கூடத் தனக்குத் தெரிந்ததை அவள் கூறியபோது அவனும் வியப்பில் ஆழ்ந்து விடுகிறான்.

எல்லாமே ரமாவின் கண் முன் சுற்றுகின்றன. அவள் இரத்த தானத்தின் திரை மறைவில் நடந்த உண்மை நிகழ்ச்சியை ஒருவரிடமும் கூறவில்லை; இனியும் கூறப் போவதில்லை. அவள் வாழ்வைப் பாழடித்த ரூபகுமார் கொடூரமாக நடந்து கொண்டிருப்பினும், பிறகு பச்சாத்தாபம் என்னும் அக்னியில் தன் கொடுமையைச் சாம்பலாக்கி விட்டு நல்லவனாக மாறியிருக்கிறான். கடந்த கசப்பான நிகழ்ச்சிகளை வெளி உலகுக்குக் காட்டி அந்த நல்லவனை மீண்டும் அவள் கெட்ட பாதைக்குத் திருப்ப மாட்டாள். அவளுக்கு அவன் கொடுமை இழைத்த கணவனாகவே இருக்கட்டும். ஆனால் பிறக்கப் போகும் அவள் குழந்தைக்கு அவன் ஒரு நல்ல அப்பாவாக இருக்கட்டும்....

....அவள் ஒருத்தரிடமும் சொல்ல மாட்டாள். சொல்ல மாட்டாள்... ஹா... வயிற்றில் ஏதோ சுற்றிச் சுற்றி உருளுகிறதே... இடுப்பில் வ..லி..... மனத்தில் ஏதோ மேலும் கீழும் சுழற்சி. தலையில் கனம். கால்களில் தள்ளாட்டம்... கண்களில் இருட்டு... 'அம்மா! அம்மா !'

ரமா கூச்சலிட்டு விட்டுச் சாயப் போகும் தருணம்; வாசு ஓடிச் சென்று அவளைத் தாங்கிக் கொண்டான். ''ரமா! ரமா! என்ன உனக்கு?''

அதே நேரத்தில் ரூபகுமாரும் கோசல்ராமும் பதைபதைத்து உள்ளே ஓடி வந்தனர். காந்தி மட்டும் கோபக் கனலுடன் குதித்தாள்: ''பார்த்தீர்களா, அப்பா! ரமா யார் மீது சாய்ந்திருக்கிறாள் என்று? பாருங்கள், குமார்! நீங்களும் பாருங்கள். ரமா உங்கள் மனைவி, வாசு என் கணவர். உங்கள் மனைவி என் கணவர் மீது....''

''சீ! மூடு வாயை!'' இப்படிக் கர்ஜித்துவிட்டு ஓடிச் சென்று ரூபகுமார் ரமாவைத் தன் கையில் தாங்கிக்கொண்டான். பிறகு மெள்ள மடியில் படுக்க வைத்துக் கொண்டான். ''ஐயோ, ரமா! நீ ஏன் இங்கு தனித்து வந்தாய்? ரமா, உன் உடம்புக்கென்ன?...'' ரூபகுமார் புலம்பத் தொடங்கி விட்டான்.

ரமா தன் கையிலிருந்து விடுபட்டதும் வாசு கையை ஓங்கிக் கொண்டு காந்தியின் பக்கம் பாய்ந்தான். ரமாவின் நினைவு முழுவதும் தப்பிவிடவில்லை. ''நில்லுங்கள், வாசு! காந்தி உங்கள் மனைவி!'' ரமா வீறிட்டாள். அதுவே வாசுவின் செய்கையைக் கண்டித்து நிறுத்தியது.

அடுத்து நிகழ்ந்தன துரிதநிகழ்ச்சிகள்!

டாக்டர் அநுபவம் மிக்கவள். தாயையும் சேயையும் தனித் தனியாகப் பிரித்து விட்டாள். ரமாவின் வார்ப்படமாக, அழகுப் பிம்பமாக அக்குழந்தை இவ்வுலகில் ஜனித்தது. தாயும் பிழைத்து விடுவாள் என்றுதான் முதலில் டாக்டர் நினைத்தாள்.

ஆசையும் அன்புமாகக் குழந்தையை அணைத்து ரமா பாலூட்டினாள். அதைக் கண்ட பொழுது அவள் நம்பிக்கை இன்னும் வலுவுற்றது. ஆனால் நான்காம் நாள்தான் திடீரென்று ஜுரம் வந்துவிட்டது. அது இரண்டு நாட்களில் அவளை மரண வாயிலுக்கு இழுத்துச் சென்று விட்டது.

ரமா மெல்ல உணர்ந்தாள். இந்த உலகில் அவள் இன்னும் சில மணி நேரத்துக்குத்தான் விருந்தாளி. அவள் கைகள் சிசுவை அணைத்தபடி இருந்தன.

கோசல்ராம் அவள் அருகில் பிரமை பிடித்தவராக அமர்ந்திருந்தார். ரமா கூறினாள். ''அப்பா! எனக்கு இப்போது அம்மாவின் முகம் நன்றாக நினைவுக்கு வருகிறது. அம்மாவை எனக்குப் புரிகிறது. அதற்குக் காரணம் இதோ பார்த்தீர்களா, இச் சின்னஞ்சிறு குழந்தை.... நான் அம்மாவாக இருப்பது போல்தானே என் அம்மாவும் இருந்திருப்பாள்? அப்பா, எனக்கு ஒரு திருப்தி. என் செல்வச் சிறுமிக்குப் பாலூட்டி, அம்மாவாக அதனிடம் அன்பு செலுத்தி நான்கு நாட்கள்

# மனமகிழும் காலைப் புத்துணர்வு மணிக்கணக்கில் நிலைத்திருக்க...




குளித்த பிறகு பாண்ட்ஸ் ட்ரீம்ஃபிளவர் டால்க்! பாண்ட்ஸ் ட்ரீம்ஃபிளவர் டால்க்கின் நீங்காத நறுமணம்... ஈரத்தை இழுக்கும் தன்மை... நாள் முழுவதும் காலைப் புத்துணர்வின் சுகம். இவை யாவரையும் உங்களிடம் ஈர்க்கும்.

கோடையானாலும் இறுக்க மானாலும் நறுமணத்துடன் புதுமைப் பொலிவில், குளுமை உணர்வில் உங்களை திகழ வைக்கும் எக்காலத்துக்கும் ஏற்ற பாண்ட்ஸ் ட்ரீம்ஃபிளவர் டால்க் இந்தியாவிலேயே அதிக விற்பனையாகும் டால்க்.

மூன்று அளவுகளில் கிடைக்கிறது. ஃபாமிலி, பெரியது, மத்திமம்.

## பாண்ட்ஸ்

***ட்ரீம்ஃபிளவர் டால்க்***

சொகுசான சுகமளிக்கும் மிருதுவான டால்க்

***சீஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்பொரேடெட்***

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏவில் இணைக்கப்பட்டது)

வாழ்ந்து விட்டேன்...'' ரமாவின் கைகள் மெல்ல அச்சிறு உருவத்தில் இருக்கும் பெருஞ் செல்வத்தை அணைத்துக் கொண்டன.

அதே நேரத்தில் அக்குழந்தையின் மீதிருந்த ரூபகுமாரின் கைகள் பட்டன. அவள் ரூபகுமாரை நோக்கினாள். அவன் தேம்பித் தேம்பி அழுதான்.

ரமா மெள்ள ரூபகுமாரின் கண்களைத் துடைத்து, ''குமார்! நீங்கள் அழக் கூடாது. நான் உங்களை விட்டுப் போய் விடாதபடி கடவுள் செய்துவிட்டது உங்களுக்குப் புரியவில்லையா?.... இதோ பாருங்கள், நம் குழந்தையை. என் உருவை நீங்கள் கண்டு கொண்டேயிருக்கலாம். குமார், கடந்த காலத்தை நினைத்து உருகாதீர்கள். நம் செல்வத்துக்குத் தகுந்த தந்தையாக இருந்து அதை உருவாக்குங்கள்....'' என்றாள்.

'அதோ நிற்கிறது யார்? வாசுவா?'

ரமா வாசுவை நோக்கி முறுவலித்தாள். ''வாசு! உங்களைப் பார்க்காமலே போய் விடுவேனோ என்று பயந்தேன். இப்போது உங்களைக் கண்டதில் குதூகலம்... வாசு! உங்களுக்குத் தெரியும், நான் உங்களை விட்டு அகலப் போவதில்லை. நீங்கள் காந்தியை விவாகம் செய்து கொள்ளும்படி ஆண்டவன் வகுத்த வழி எனக்குப் புரிகிறது. இதோ! காந்தியைப் பாருங்கள். அவளிடம் உங்கள் ரமாவை நீங்கள் காணவில்லையா, வாசு? இவள் உங்கள் ரமா, புரிகிறதா? இவளுக்கு - உங்கள் ரமாவுக்கு - வாழ்வு அளிப்பது உங்கள் உயர்ந்த பண்பாக இருக்க வேண்டும்!'' என்றவள் காந்தியின் கைகளை வாசுவின் கைகளோடு பிணைத்தாள். அவன் தடுக்கவில்லை. காந்தியின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

ரமா கண்களை மெள்ள மூடி மூடித் திறந்து கொண்டாள். அவள் இதயம் இன்னொருவனை எதிர்நோக்கியது.

''ஆனந்த்... ஆனந்த்...''

உடனே ரூபகுமாரும் வாசுவும் ஆனந்தை அழைத்து வர ஓடினர், அவன் டாக்டரைச் சந்திக்கச் சென்றிருப்பதாக எண்ணி. அவன் வலப்புறக் கதவு வழியாக உள்ளே வந்தான். அவன் கண்களில் நீர் இல்லை. ஆனால் அவன் முகத்தை உலகளவு சோகம் தாங்கிக் கொண்டிருந்தது.

ரமா அவனைப் பார்த்து விட்டாள். ''ஆனந்த்!'' என்று அழைத்தாள்.

அவன் அவள் அருகில் சென்று மெள்ள அமர்ந்து கொண்டான். முதன் முறையாக ரமா அவன் கைகளை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக்கொண்டாள். ''ஆனந்த்! நான் இந்தக் கடைசி

## அப்புக்குட்டி மீன்

வேடிக்கையான பெயரைக் கொண்டிருக்கும் இந்த மீன் கடலில் வாழ்கிறது. மெல்லிய உடலும் சற்றுத் தட்டையாக அமுக்கிய தலையும் கொண்ட இம்மீன் இரண்டு அல்லது மூன்று அடி நீளம் வளரும். இதை உரிக்குட்டி மீன் என்பார்கள்.

இந்த மீனின் தலையில் மேற்புறத்தில் நீள்வட்ட வடிவில் ரப்பர் செருப்பின் அடியைப் போன்று காணப்படும் தட்டையான உறிஞ்சியே இதனுடைய சிறப்பான உறுப்பாகும். சாதாரணமாக மற்ற மீன்களின் முதுகிலுள்ள முன் துடுப்பே இம்மீனில் இவ்வாறு உருமாறியுள்ளது. இந்த உறிஞ்சியின் உதவியால் இம்மீன் சுறா போன்ற பெரிய மீன்கள், ஆமைகள், திமிங்கிலங்கள் ஆகியவற்றின் உடல்மீது ஒட்டிக் கொள்ளும். இந்த மாதிரி ஒட்டிக்



கொண்டு யாதொரு உழைப்புமின்றியே, முழுச் சோம்பேறியாக நெடுந்தூரம் பயணம் செய்யும். தான் விரும்பும்போது தன்னை விடுவித்துக் கொண்டு சுதந்திரமாகவும் நீந்தும். சுறாமீன் போன்ற பெரிய மீனில் ஒட்டிக் கொண்டு போவதால் அந்தச் சுறாமீன் ஏதாவது உயிரைப் பிடித்துத் தின்னும்போது சிதறும் துணுக்குகளைச் சவாரி செய்து வரும் உரிக்குட்டி திடீரெனப் பாய்ந்து உணவாகக் கொள்ளும். சில சமயங்களில் இது சவாரி செய்யும் சுறாவே இதைத் தின்றுவிடும்.

சில தீவுகளில் வாழ்பவர்கள் இந்த மீனைக் கொண்டு பெரிய மீன்களையும் ஆமைகளையும் பிடிப்பர்.

-சாரதாம்பாள்

---

நேரத்தில் ஒரே ஒரு குதூகலத்தோடு, ஒரே ஒரு உள்ள நிறைவோடு போகிறேன்...நான் ஒரு யோக்கிய புருஷனால் காதலிக்கப்பட்டேன்...'ஆனந்த்!' இந்த ஒரு வார்த்தை எனக்கு எவ்வளவு அமைதியையும் ஆனந்தத்தையும் தருகிறது, தெரியுமா?''

ஆனந்த் பதில் கூற முற்படவில்லை. அவன் மனமோ அழுதது. ரமா கண்களை மூடிக் கொண்டாள். மூடிய கண்களுள் அவள் ஆனந்தைக் கண்டாள்.

ஆனந்த்.....

ரமா என்னும் பெண்ணைக் காதலிக்கிறான். ஆனால் ரமாவும் வாசுவும் காதலிப்பதை அறிந்து அவர்களுக்கே வழி விடுகிறான். தன் ஒருபட்சக் காதலை மட்டும் அமரமாக நிறுத்திக் கொள்கிறான். தன் காதல் தோல்வியில் உள்ளம் நொந்தபோதும் அதை வெளிக்காட்டாமல், இடையே ஏற்படும் பல தடங்கல்களுடனும் போரிட்டு ரமாவை வாசுவிடம் சேர்க்க முற்படுகிறான். எல்லா நிகழ்ச்சிகளையும் நீலகண்டனாக விழுங்கி விட்டு ஏச்சுக்கும் பேச்சுக்கும் கோபம் கொள்ளாமல் எவ்வளவு

அடக்கமாக அவனிடம் தன் காதலை வெளிப்படுத்துகிறான்...

ரமா மெள்ளக் கண் திறந்து ஆனந்தை நோக்கினாள். ஆனந்த் திவ்ய புருஷனாக, 'காதல் என்பது நேசிக்கப் படும் பொருள். எப்போதும் சுகக் கோட்டில் இருப்பதையே விரும்பும் செய்கை' என்பதை விளக்கிக் காட்டும் ஆதரிச புருஷனாக, அன்புக்கு உரை கூறும் உத்தம புருஷனாக, ஆணின் அழகைக் காட்டும் ஆதரிச புருஷனாகக் காட்சியளித்தான். அத்தகைய தேவதா புருஷனால் அவள் காதலிக்கப்பட்டிருக்கிறாள்! அவளுக்கு இந்தச் சொற்றொடர்கள், வாக்கியங்கள் எவ்வளவு ஆனந்தாநுபவத்தைத் தருகின்றன!

''ஆனந்த், ரூபகுமார் என்னை விரும்பினார். அவருக்கு என் பிம்பமாக, என் நினைவாக ஒரு குழந்தை; வாக என்னை நேசித்தார். அவருக்குச் சொந்தமாக என் தங்கை! என் நினைவுச் சுருள்களைத் தருவாள். ஆனால்... உங்களுக்கு.... ஒன்றுமில்லை... ஆனந்த்... ஆனந்த்.... ஆ...னந்த்.... ஆ.. தண்ணீர்....''— ரமா நீருக்குச் சைகை காட்டினாள்.

ஆனந்த் அவள் வாயில் சட்டென்று நீர் வார்த்தான். அந்த உத்தம புருஷனின் கையின் நீர், ஒரு விழுங்கு உள்ளே சென்ற திருப்தியுடன் ஒரு கை தன் குழந்தையை அணைத்திருக்க, இன்னொரு கை ஆனந்தின் கையைப் பிடித்திருக்க ரமாவின் ஆத்மா அந்தச் சரீரக் கூட்டை விட்டுப் பிரிந்தது.

''ரமா!'' ஆனந்த் வீறிட்டுக் கதறி விட்டான். அதே நேரத்தில் ஆனந்தைத் தேடிச் சென்ற ரூபகுமாரும் வாசுவும் பதற்றத்துடன் உள்ளே நுழைந்தனர். உலகமே மறைந்து விட்ட துயருடன் அனைவருமே கதறி அழுதனர்.

தன் உருவாகக் காட்டிவிட்ட காந்தி இனி அவனுக்கு மிக நெருங்கியவள். காந்தி அவன் மனத்தோடு ஐக்கியமாகிவிட்ட 'ரமா'.

சீதாபதியும் தேவகியும் வாய் பொத்திக் கதறுகின்றனர்.

கோசல்ராமை ஆறுதலாகத் தாங்கிக் கொண்டு மௌனமாக நிற்கிறானே, அவன்தான் ஆனந்த். கண்ணீரைப் பொழியவொட்டாமல் அவன் மனம் தடுக்கிறது. ஏனெனில், கண்ணீர்த் தடுப்பில்லாமல் அந்தக் காட்சியை அவன் காண விரும்புகிறான்.

அக்காட்சியில் கண்கள் பதிகின்றன. ஆனந்த் உன்னிப்பாக நோக்குகிறான்.

சிதையா அது... இல்லை... அங்கு சூரியப் பிரகாசம்! ரமாவின் பொன் மேனியிலிருந்து ஒரு மலர் அந்தச் சூரியப் பிரகாசத்தில் மெள்ள மலருகிறது.... மலர்ந்த மலர் மெள்ள மெள்ள....ஹா... எவ்வளவு பெரிதாக எவ்வளவு அழகாக, எவ்வளவு வாசனையுடன்.... விரிகிறது.... பிறகு அங்கிருந்து கிளம்பி ஆடி, ஆடி.... இதோ... வருகிறது.... ஆனந்தின் இதய சிம்மாசனத்தில் கம்பீரமாக அமருகிறது.

ஆஹா! எவ்வளவு ஆனந்தாநுபவம்! அந்த மலர் அமரத்துவம் பெறுகிறது. உலகில் காணப்படும் மலரில்லை அது! அதன் வாசனை அமரமாக இருக்கும்; அதன் அழகு அழியாது. அது வாடாத மலர்; சிரஞ்சீவித் தன்மை பெற்ற மலர்; ஆனந்த ரம்யமான மலர்.

ஆனந்த் கண்களை மூடி இதயத்தை நோக்கினான். இனிய மலர் ஒன்று குடைராட்டினமென இதயத்தைச் சுற்றிச் சுற்றி வருகிறது. வேகம் குறைந்து நிற்கும்பொழுது, சொல்லி வைத்தாற்போல் அவன் இதயத்தின் நடு மையத்தில் வந்து நிற்கிறது.

சிதை எரிகிறது. ரூபகுமார் நிலைகொள்ளாமல் தவிக்கிறான். அவன் தன் மார்போடு குழந்தையை இறுக அணைத்துக் கொள்கிறான். இனி அதைப் பிரியமாட்டான். சின்னஞ்சிறு பெண் அவனுக்கு இனி என்றென்றும் ரமா.

சிதையில் ஜுவாலை. வாசு குமுறுகிறான். அவன் கை காந்தியைப் பற்றியபடி இருக்கிறது. ரமா



அவனுக்குப் புரிகிறது. 'அவன் ரமாவை இழக்கவில்லை. அவள் அவன் இதயத்தில் ஓர் அமர மலராக நிரந்தர இடம் பெற்று விட்டாள்!' என்று.

அவனை விட்டுச் செல்வம் பிரியலாம், சுற்றம் பிரியலாம். ஆனால் அவனை விட்டுப் பிரியாது எப்போதும் அவனோடு கூட இருக்கக்கூடிய பொருள் ஒன்று உண்டு.

அதுவே அவனது இதயமலர்!

# பிளாஸ்டார்ச்

## வாங்கும்போது நீங்கள் பெறுவது உள்ளும் புறமும் உன்னதமான ஒரே டார்ச்









## ரயில் வேகத்தில் பிறந்த எழுத்து



வழக்கறிஞர் தொழிலில் வரும்படியில்லாமல் விவசாயத்தை மேற்கொண்டவர் தந்தை. மகனுக்கோ பத்தொன்பது வயது வரை பல பள்ளிகளில் படித்தும் சாதாரண வாய்ப்பாடுகூடப் பாடமாகாத நிலை. எப்படியோ மாதம் முப்பது ரூபாய்க்குக் கூடக் குறைவாகக் கிடைக்கும் தபாலாபீஸ் குமாஸ்தாவாக வேலை மேற்கொண்டான். வேலையில் சேர்ந்த பிறகு கிடைக்கும் அவகாசத்தை எல்லாம் நல்ல புத்தகங்களைப் படித்துத் தன் அறிவை விருத்தி செய்து கொள்வதில் முனைந்தான். ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு, அவனுக்குச் சுற்று வட்டாரத்திலிருக்கும் தபால் நிலையங்களைப் பார்வையிட்டுப் பரிசோதிக்கும் வேலை கொடுக்கப்பட்டது. தன் சுற்றுப் பிரயாணங்கள்போது தான் பார்த்தவை, கேட்டவை, இவைகளைப் பற்றியெல்லாம் தினசரி எழுதி எழுதிக் குவித்து வைத்துக் கொண்டான். ரயில் பிரயாணங்களின் போது வேகமாக எழுதுவது அவனுக்குப் பழக்கத்தில் வந்து விட்டது. தினசரி இவ்வளவு பக்கங்கள் எழுதுவது என்ற ஒரு வழக்கத்தை ஆயுள் முழுதும் கடைப்பிடித்தான்.

இந்த நபர் தான் பிற்காலத்தில் தன் எழுத்தின் மூலம் சுமார் ரூபாய் 10,35,000 (நூறு ஆண்டுகளுக்கு முன், பணத்தின் மதிப்பு நிறைய இருந்த காலத்தில்) வரை சம்பாதித்து, புகழும் பொருளும் குவித்த ஆங்கில எழுத்தாளர் ஆன்டனிடிரலோப். நாற்பத்தி ஐந்துக்கு மேலான நாவல்கள், நாடகங்கள் முதலியவற்றை எழுதிக் குவித்த இவர் தம் எழுத்தை வெளியிட ஒரு பிரசுரகர்த்தரைப் பிடிக்கவோ, எழுத்தின் மூலம் முதல் பைசாவைப் பார்க்கவோ பன்னிரண்டு வருட காலம் காத்திருக்க வேண்டியிருந்தது. ஆனால் அந்தப் பன்னிரண்டு வருட காலத்திலும் ஒருநாள் கூட அவர் மனம் சலித்து எழுதாமல் இருந்ததில்லை!



## பட்டு மாமா சிட்டு மாமி·

**பட்டு மாமா :** நம்ம வீட்டு வேலைக்காரன் வாயாடியாய் இருக்கான்னு 'டிஸ்மிஸ்' பண்ணிட்டேன்.

**சிட்டு மாமி:** *நீங்க பழைய சமாசாரத்தைச் சொல்றேள். நகராட்சி மன்றம் வருத்த நாக தீகப்படி இரண்டு மணி நேரத்துக்கு முன்னால் அவனை மறுபடியும் நான் நியமனம் பண்ணியாச்சு;*




**கோமதி சுவாமிநாதன்**

1. கல்யாணம் செய்து கொண்டு விட்டாயா? தைரியமாக இரு.

(மணமகனுக்கு அனுப்ப வேண்டியது.)

2. மணமக்களுக்கு வாழ்த்துக்கள்! கடன்கள் செலவுகளைப் பற்றி இப்போதே கவலைப்பட ஆரம்பிக்க வேண்டாம்.

(மணமகளின் தந்தைக்கு அனுப்ப வேண்டியது.)

3. மணமக்களுக்கு வாழ்த்துக்கள்! பெண் வீட்டாரை ஒரு கலக்குக் கலக்கி இருப்பீர்கள் என்று நம்புகிறேன்.

(மணமகளின் தந்தைக்கு அனுப்ப வேண்டியது.)

4. வாழ்த்துக்கள். உன் கணவன் இன்று அசட்டு விழி விழிப்பது போலவே என்றும் விழித்துக் கொண்டிருக்கட்டும்.

(மணமகளுக்கு அனுப்பவேண்டியது.)



**வாழ்த்துத் தந்தி வகைகளில் சேர்க்கப்பட வேண்டிய சில எண்கள்!**

ஹிந்தி

# உப்புக்கு அடிமை



புதுதில்லி ஹஸ்திநாபுர் கல்லூரியில் ஆசிரியராகப் பணி யாற்றும் ஸ்ரீ நரேந்திர கோஹ்லி ஏறக்குறைய ஹிந்தியில் 150 கதைகள் எழுதியுள்ளார். கடந்த இரண்டு ஆண்டுகளாக நகைச்சுவைக்கு இடம் அளித்து எழுதி வருகிறார். இதுவரை கிண்டலும் குத்தலும் கலந்து 40 நகைச்சுவைக் கதைகள் வெளியாகியுள்ளன.

எழுத்தில் புதுமையைக் கையாள விரும்பிச் சில 'அப்ஸர்ட்' நவீனங்கள் எழுதித் தற்கால வாழ்க்கையின் தான்தோன்றித்தனங்களைச் சாடியிருக்கிறார். இந்த வகை இலக்கியச் சேவை சமுதாய சேவையாக மாறினால் பெருமை யாக இருக்கும் என்று எண்ணுகிறார். இக்கதையில் இவர் உப்புக்குக் கொடுத்திருக்கும் மதிப்பைப் பாருங்கள்! உப்புப் போட்டுச் சாப்பிடும் எவரும் கருத்துடன் கவனிக்க வேண் டிய ஹாஸ்யக் கதை.

இப்படி வந்து எத்தனையோ மாதங்களாகிவிட்டன. இடையென்று மீண்டும் ஒரு நாள் வந்துவிட்டது. எப் பொழுதும் இப்படி வருவதில்லை; அடிக்கடியும் வருவ தில்லை. சில சமயம் மூச்சிரைக்கும். நெஞ்சு வெடித்து விடும் போல் தோன்றும். சற்று வேகமாய் நடந்தால் கூட அப்படித் தோன்றும். அப்பொழு தெல்லாம் நான் எங்கே இருந்தாலும், எங்கே நிற்கிறேனோ அங்கேயே உட்கார்ந்து விடுவேன். அல்லது மெதுவாக நடப்பேன். இரண்டொரு நிமிடங்கள்தான். அப்புறம் எல்லாம் சரியாகிவிடும். சில சமயம் வேகமாய் நடக்காவிட்டாலும் கூட இப்படி வந்துவிடுவதுண்டு. மூச்சிரைக்கும். எங்கேயாவது போக வேண்டியிருந்தால், பஸ்ஸிலோ ரயிலிலோ பயணம் செய்ய வேண்டியிருந் தால்.... எனக்கு ஒரே கவலையாகப் போய்விடும். நான் போய்ச் சேருவதற்குள் பஸ் புறப்படாமல் இருக்க வேண்டுமே, ரயிலில் கூட்டமில்லாமல் இருக்க வேண் டுமே என்றெல்லாம் கவலைப்படுவேன். அவ்வளவுதான்; கவலை.... மூளையை விட்டிறங்கி நெஞ்சுக்குள் புகுந்து விடும். எங்கெங்கோ ஊசிகளாய்க் குத்தும். மீண்டும் வலி வந்துவிடும். முடிவு... நெஞ்சு வெடித்துவிடும் போலாகிவிடும். மைல் கணக்காய் ஓடிவிட்டு வந்த வர்கள் போல் மூச்சிரைக்கும். நுரையீரல்கள் வெறும் கூடுகளாகிவிட்டது போலும் மூச்சுக் காற்றுக்கூடப் புக முடியாதவையாகப் போய்விட்டது போலும் தோன்றும். இப்படி வலி வரும்பொழுதெல்லாம் எனக்கு நான் கீழே விழுந்துவிடுவேனோ, மூர்ச்சை அடைந்துவிடுவேனோ என்று தோன்றும். ஆனாலும் நான் கீழே விழுந்ததும் இல்லை; மூர்ச்சை அடைந்ததும் இல்லை.

என் மருமகளிடம் ஒருநாள் இதைப் பற்றி நான் இலேசாகத்தான் சொன்னேன். ஆனால் அவள் மிகவும் கவலைப்பட்டுப் போய் விட்டாள். அன்று பகல் முழுதும் பால்கனியிலே தவம் கிடந்தாள், என் மகனின் வரவை எதிர்பார்த்துக் கொண்டு. எனக்கு ஆகாரம் கொடுக்க வேண்டிய சம்பந்திநான் உள்ளே வந்தான். இரண்டொரு முறை என் நெஞ்சு வெடித்து விட்டதோ, அதில் ஓட்டை கிட்டை விழுந்து விட் டதோ எனப் பார்க்க வந்தவன் போல் உள்ளே வந்தான்.

மாலையில் என் பிள்ளை வீடு திரும்பியபோது மாடிப் படிகளி லேயே அவள் விஷயத்தைக் கூறி விட்டாள். பின்னே தன் அறைக் குப் போகாமல் நேராக என்னிடம் வந்துவிட்டான். கவலை படர்ந்த முகத்துடன் என் உடல்நிலையைப் பற்றி விசாரித்தான். அவனிடம் நான் எல்லாவற்றையும் கூறி னேன். 'முன்னரே என்னிடம் ஏன் இதைப் பற்றிக் கூறவில்லை?' எனக் கடிந்து கொண்ட அவன் டாக்டரை அழைத்து வரப் போனான்.



# நரேந்திர கோஹ்லி





ஒருவரல்ல, பல டாக்டர்களை அழைத்துக் கொண்டு வந்து விட்டான். டாக்டர்கள் என்னைத் தட்டிக் கொட்டிச் சோதித்துப் பார்த்தார்கள். முடிவில், 'எனக்கு வியாதி ஏதுமில்லை. எல்லாம் வயதானதன் கோளாறு தான்' என்று கூறினார்கள். 'வயதானால் உடம்பு பலவீனமாகி விடுகிறது. நரம்புகள் தளர்ந்து விடுகின்றன. சிந்திப்பதால், கவலைப்படுவதால், உடல் களைத்துப் போவதால் இப்படியெல்லாம் வருகிறது' என்றனர். வயோதிகத்துக்கு டாக்டர்களிடம் எந்த மருந்தும் கிடையாது. அதனால் என் நோய்க்கும் மருந்து இல்லை. 'அதிகமாகச் சிந்திக்க வேண்டாம். கவலைப்பட வேண்டாம். உடலுக்கு ஆயாசம் தர வேண்டாம்' என்று கூறினார்கள்.

தனிமையில் நான் நிறையச் சிந்தித்தேன். யோசித்துப் பார்த்தேன். ஆமாம்! அப்படி நான் என்ன கவலைப்படுகிறேன், சிந்திக்கிறேன், அல்லது உடலுக்குச் சிரமம் தருகிறேன்? யோசித்து யோசித்து எனக்குத் தலைவலியே வந்து விட்டது. ஆனாலும் நான் வேண்டுமென்றே சிந்தித்ததாகவோ, கவலைப்பட்டதாகவோ, உடம்பு களைத்துப் போகும்படி செய்ததாகவோ ஒரு சம்பவம்கூட நினைவு வரவில்லை. எப்பொழுதும் நான் ஓய்வாகத்தான் இருக்கிறேன். உடலுக்கு நல்ல ஓய்வு தருகிறேன். கடைசியில்... சிந்தனை தானாகவருகிறது. கவலையும் வந்து விடுகிறது. உடம்பும் தானாகவே களைத்துப் போய் விடுகிறது. என் இந்த வியாதிக்கு என்னிடம் மருந்து ஏதுமில்லை என்ற முடிவுக்கு நான் வந்துவிட்டேன்.

அன்று... என் வீட்டுக்குக் கீழே காலனியின் மறுபுறமிருந்த கடைத்தெருவுக்குத்தான் போயிருந்தேன். என்னிடமிருந்த சிகரெட்டுகள் தீர்ந்துவிடவே வாங்கி வரப் போயிருந்தேன். சிகரெட்டு வேண்டுமென்று நான் என் பிள்ளையிடமோ, மருமகளிடமோ சொல்ல முடியுமா? படிகளில் இறங்கிக் கீழே

வந்து விட்டேன். சுற்றுமுற்றும் பார்த்தவாறே பாதையைக் கடந்து சிகரெட் விற்கும் கடையையும் அடைந்து விட்டேன். கடைக்காரன் என்னைக் கண்டதுமே, பத்துப் பெட்டி சிகரெட்டுகளை ஒரு டின்னில் வைத்துக் கொடுத்து விட்டான். கடைக்காரனுக்கு என்னை நன்றாகத் தெரியும். இஞ்சினியர் ஐயாவின் அப்பா என்ற முறையில் அங்கிருந்த கடைக்காரர்கள் யாவருக்குமே என்னைத் தெரியும். பணத்தைக் கொடுத்து விட்டுத் திரும்பி நடந்தேன்.

திடீரென்று நெஞ்சுக்குள் என்னவோ செய்தது. நெற்றியில் முத்து முத்தாய் வியர்வைத் துளிகள் அரும்பின. அப்புறம் உடம்பு முழுதும் வியர்வையில் தொப்பமாய் நனைந்து விட்டது. அப்படியே நின்று விட்டேன். இந்த வேதனை, படபடப்பு எல்லாம் முன்னைப் போலவே இரண்டொரு நிமிடங்களில் சரியாகிவிடும் என்று நினைத்தேன்.

ஆனால் நினைத்தது நடக்கவில்லை. பாதை ஓரத்திலிருந்த ஒரு கடையைப் பிடித்துக் கொண்டு சற்று நின்றேன், பிறகு அப்படியே உட்கார்ந்து விட்டேன். நான் உட்காருவதைக் கடைக்காரன் பார்த்து விட்டான். உடனே கீழே இறங்கி வந்தான். இன்னும் இரண்டொரு கடைக்காரர்களும் ஓடிவந்தனர். எல்லாருமாக என்னைத் தூக்கிக் கொண்டு வந்து வீட்டில் விட்டார்கள்.

வீட்டில் மருமகள் மட்டும்தான் தனியாக இருந்தாள். பிள்ளை காரியாலயத்துக்குச் சென்றிருந்தான். என் நிலையைக் கண்ட அவள் கதிகலங்கிப் போய் விட்டாள். உடனே டாக்டருக்குப் போன் செய்தவள் காரியாலயத்துக்கும் போன் செய்து விட்டாள். ஐந்தே நிமிடத்தில் டாக்டர் வந்துவிட்டார். அவர் என்னைச் சோதித்துப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே என் பிள்ளையும் வந்து விட்டான். டாக்டர் அவனிடம், ''இவரை உடனே பெரிய ஆஸ்பத்திரியில் அட்மிட் செய்ய வேண்டும்'' என்று கூறினார். எனக்கு வந்திருப்பது 'ஹார்ட் அட்டாக்', எந்த நிமிடமும் இதயத் துடிப்பு நின்றுவிடலாம் என்பது அவரது அபிப்பிராயம்.

என் பிள்ளை டாக்சியில் வந்திருந்தான். அது கீழே நின்றுகொண்டிருந்தது. அதிலே என்னை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றனர்.

நான் நம்பிக்கை இழந்து கொண்டிருந்தேன். மெல்ல மெல்ல உணர்வு கழன்று கொண்டிருந்தது. என்னைச் சுற்றிலும், கரடி அல்லது குரங்காட்டம் பார்க்கச் சிறுவர்கள் கூடி நிற்பார்களே, அப்படி டாக்டர்களின் கூட்டம் சூழ்ந்து நின்றது. அவர்கள் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்; தொட்டுப் பார்த்தார்கள்; பல கருவிகள் என் உடம்பில் பொருத்தப்பட்டன. கால்களில் புஜங்களில், நெஞ்சின்மீது... இப்படிப் பல. திடீரென்று என் இதயம் வெடித்துவிடும், நான் இறந்து விடுவேன் என்று எனக்குத் தோன்றிய சமயத்தில் எனக்கு ஊசி போட்டார்கள்.

இரவு எல்லோரும் தூங்கப் போகும் சமயத்தில் நான் கண் விழித்தேன். பார்த்தால் டாக்டர் 'ரவுண்ட்' வந்துகொண்டிருந்தார். 'நான் கட்டிலைவிட்டுக் கீழே இறங்கக்கூடாது. அதற்காகத்தான் கட்டிலைச் சுற்றிக் கம்பிகள் போடப்பட்டிருக்கின்றன. தலையணை இல்லாமல்தான் உறங்க வேண்டும். அதற்காகத்தான் தலையணையை அப்புறப்படுத்தியுள்ளோம்' என்றெல்லாம் டாக்டர் கூறினார். எப்பொழுதும் நான் படுத்துக் கொண்டே இருக்க வேண்டும். எழுந்து உட்காரக் கூடாது. நான் பூரண ஓய்வுடன் இருக்கவேண்டும். பால் தருவார்கள். அதுவும் கொழுப்புச் சத்து நீக்கிய பால். வேறொன்றும் கிடையாது. உப்பு, நெய், சிகரெட் — ஊஹூம்... ஒன்றும் கிடையாது.

நான் டாக்டரின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன். என் முன்னே கண்ணாடி எதுவுமில்லை. ஆனாலும் நான் திக்பிரமை பிடித்தாற்போல் திறந்த வாய் மூடாமல் அவரையே பார்த்துக் கொண்டிருந்தேன் என்பது எனக்குத் தெரிந்தது. என் முகத்தைப் பார்த்து அவருக்கு ஏதோ கொஞ்சம் புரிந்திருக்க வேண்டும்.

அதனால்தானோ என்னவோ, ''தக்க சமயத்தில் இங்கு வந்து சேர்ந்ததற்கு இறைவனுக்கு நீங்கள் நன்றி செலுத்த வேண்டும். இரண்டொரு நிமிடங்கள் தாமதித்திருந்தால்கூட உங்களை யாராலும் காப்பாற்றியிருக்க முடியாது..... ரிலாப்ஸ் ஆகவே கூடாது... ஆனால்... அவ்வளவுதான்!'' என்றெல்லாம் ஆறுதலாகக் கூறினார்.

மூன்று நாட்களுக்குப் பிறகு பாலைப் பருகும்போது திடீரென்று எனக்குக் குமட்டிக் கொண்டுவந்தது. பால் முழுவதையும் வாந்தி எடுத்து விட்டேன். ஒரு நாளைக்கு ஆறு தடவை... கொழுப்புச் சத்து நீக்கிய பால் எனக்குத் தரப்பட்டது. வீட்டிலிருந்து ஆப்பிளும் ஆரஞ்சும் வந்தன. இனி மேல் இனிப்புப் பண்டமே நான் சாப்பிட முடியாதோ என எனக்குத் தோன்றியது.... உப்புரைத்த பண்டத்துக்காக என் மனம் ஏங்கியது. ஒரே பசி. குடலுக்குள் ஒரே புரட்சி... ஆனால் நர்ஸ் பாலை எடுத்துக் கொண்டு என் அருகில் வருவதைப் பார்த்த அக்கணமே என் பசி அடங்கிவிடும், செத்து விடும்..... பால்... பால்... எனக்குக் குமட்டியது....

ஒரு மாதத்துக்குப் பிறகு என்னைக் கட்டிலை விட்டுக் கீழே இறங்க அனுமதித்தனர். டாய்லட் வரை போய் வர நான் அனுமதிக்கப்பட்டேன். இதில் பிரமாதமான மகிழ்ச்சி ஏதும் எனக்கு ஏற்படவில்லை. ஆனால், இனி வீட்டுக்குப் போகலாம். போய் ஏதாவது உப்புரைத்த பண்டம் சாப்பிடலாம் என்ற நினைவே எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது.

கட்டிலை விட்டிறங்கியதும் என் கால்கள் நடுங்கின. தடுமாறியவன் மீண்டும் கட்டிலிலேயே உட்கார்ந்து விட்டேன். என்னையே ஒரு முறை பார்த்துக் கொண்டேன். எத்தனை மெலிந்து இளைத்துவிட்டேன்? இந்த மெலிந்த உடலைத் தாங்கக்கூட இந்தக் கால்களுக்குச் சக்தி இல்லாமல் போய் விட்டதா ?

எனக்கு என்ன ஆயிற்று என்றே தெரியவில்லை. ஆனால் டாக்டரைக் கண்டதும் உள்ளே இருந்தது அப்படியே வெடித்து விட்டது.

டாக்டரின் கழுத்தைப் பிடித்து நாலு அறை விடலாமா என்றிருந்தது. ஆனால் என்

சென்னை சித்ரா · அகஸ்தியா · மகாலக்ஷ்மி
ராம் மற்றும் தென்னாடெங்கும்.



C. சுந்தரம் அளிக்கும்
பாபு மூவீஸ்...

# வீட்டுக்கு வீடு

டைரக்ஷன்
C.V. ராஜேந்திரன்

கதை வசனம்
கோபு



ELEGANT

ஐந்தே
காசு
போதும்
உங்கள்
குடும்பம்
பெருகாமல்
தடுக்க!






உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம்

**குடும்பக் கட்டுப்பாட்டிற்கு**

15 காசுக்கு 3

அரசாங்க ஆதரவினால் குறைந்த விலை

<u>வேண்டுமென்றபோது மட்டுமே பேறு...</u>

வேண்டுமென்றபோது மட்டுமே இன்று மக்கட்பேற்றை ஏற்படுத்திக் கொள்ளலாம். இதற்கு நிரோத் உதவும்.

<u>தாய் சேய் இருவரின் தேகநலம்...</u>

குழந்தைகள் சரியான வளர்ச்சி பெற, முதல் மூன்று நான்கு வருடங்கள் அவர்களுக்கு விசேஷமான பராமரிப்பு தேவை என்று வைத்தியர்கள் கூறுகின்றனர். பேற்றில் இழந்த தேக வலுவை மீண்டும் பெற தாய்க்கும் சிறிது காலம் பிடிக்கும். நிரோத் உபயோகிப்பதனால், அடுத்த பேற்றைச் சுலபமாகத் தள்ளிப் போடலாம்.

நிரோத் (காண்டோம்) உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம் ஆண்களுக்கானது. எளிமையான, தீமையற்ற நிரோத் உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது. இதை உபயோகிப்போர் தேகநலம் பாதிக்கப்படுவதில்லை. நிரோத் எங்கும் கிடைக்கும்

---

நிரோத், வீட்டுச் சாமான்கள் விற்கும் கடை, மருந்துக் கடை, வெற்றிலைப் பாக்குக் கடை ஆகியவற்றில் கிடைக்கும்.

davp 70/67

உடல் இருந்த இடத்தைவிட்டு நகரவில்லை. நாக்கு மட்டும் தான் புரண்டது... ''என்னைப் பட்டினி போட்டுப் போட்டு எழுந்து நிற்கக் கூடச் சக்தியில்லாமல் செய்துவிட்டீர்களே! என்னைச் சாக அடிக்க விரும்புகிறீர்களா?''

டாக்டர் மௌனமாய் என்னைப் பார்த்தவாறே நின்றார். முகத்தில் எவ்வித பாவமும் இல்லை. பின்னர், ''மெல்ல மெல்லச் சக்தி வந்து விடும்'' என்றார் மெதுவாக.

சில நாட்களுக்குப்பின் கட்டிலைப் பிடித்துக் கொண்டே ஒவ்வோர் அடியாக எடுத்து வைத்தேன். என் பேரனின் நினைவுதான் வந்தது.

மறு நாள் எனக்கு இன்னும் அதிகமாக வலி வந்துவிட்டது. முந்திய முறைகளைவிட இந்த முறை மிக மிக அதிகம். நெஞ்சு வெடித்துவிடும் போலாகி விட்டது. வியர்த்து வியர்த்துக் கொட்டியது. எங்கோ அமிழ்ந்தது போன்ற உணர்ச்சி. என்னைச் சுற்றிக் கூடி நின்ற டாக்டர்களிடையே என் பிள்ளை—மருமகள் இருவரையும் என்னால் இனம் கண்டு கொள்ள முடிந்தது. அவர்கள் இருவரும் மௌனமாய்க் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தனர். பேரனை என் பிள்ளை தூக்கி வைத்துக் கொண்டிருந்தான். அது பாவம், திகிலுடன், என்னையும் அப்பாவையும், அம்மாவையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தது.

''பத்தியத்தில் ஏதோ பிசகு நேர்ந்து விட்டது'' என்றார் டாக்டர். இதனால் எனக்கு மீண்டும் ஆகாரம் பால்... கொழுப்புச் சத்து நீக்கப்பட்ட பால்... என்னால் உட்காரக்கூட முடியவில்லை. மருந்து குடித்தால்கூட மூச்சு வாங்கியது. மெல்ல ரொம்ப சிநேக பாவத்துடன் டாக்டருக்கு ஒரு யோசனை கூறினேன். ''டாக்டர்! ஏதாவது மருந்து கொடுத்துக் கொன்று விடுங்கள்! இப்படி ஏன் என்னைப் பட்டினி போட்டுக் கொல்லுகிறீர்கள்?''

டாக்டர் சிரித்தார். ''நாங்கள் உங்களுக்கு வைத்தியம் செய்து கொண்டிருக்கிறோம். வேண்டுமென்றேதான் உங்களை இளைக்கச் செய்து கொண்டிருக்கிறோம். உங்கள் சதையைக் கரைத்துக் கொண்டிருக்கிறோம்'' என்றார்.

அன்று மாலை என் பிள்ளை என்னைப் பார்க்க வந்ததும், ''என்னை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போ'' என்றேன்.

''டாக்டர் சம்மதிக்க மாட்டார்'' என்றான் அவன்.

''சம்மதிக்கா விட்டால் போகிறார்!'' என்றேன் நான். ''என்னை அவசியம் வீட்டுக்கு நீ அழைத்துக் கொண்டு போ!''

'' இங்கு உங்களுக்கு வைத்தியம் நடக்கிறது!''

''இவர்கள் கொஞ்சம் கொஞ்சமாய் என்னைச் சாகடித்துக் கொண்டிருக்கிறார்கள்!'' தாழ்ந்த குரலில் நான் அவனிடம் கூறினேன். ''இவர்கள் என் சதையைக் குறைத்துக் கொண்டிருக்கிறார்கள். பிறகு என் எலும்பைக் கரைப்பார்கள். இவர்கள் என்னை உயிரோடு விட்டு வைக்க மாட்டார்கள். இனி தினம் தினம் இங்கு வராதே. என் சடலத்தைப் பெற்றுக் கொள்ள என்றைக்கு வர வேண்டும் என்று இவர்களிடம் கேட்டுக் கொண்டு போய்விடு.''

என் பிள்ளை அழுதே விட்டான். என் கையைப் பிடித்துக் கொண்டு, ''அப்பா! இப்படியெல்லாம் நினைக்காதீர்கள் அப்பா!'' உங்களுக்கு எல்லாம் சரியாகி விடும். இங்கு உங்களுக்குச் சிறந்த முறையில் வைத்தியம் நடக்கிறது. நீங்களே பார்க்கப் போகிறீர்களே!'' என்றான் உற்சாகத்துடன்.

அவன் புறப்பட்டுப் போயாகி விட்டது. நான் சிந்தனையில் ஆழ்ந்தேன். என் பிள்ளை நான் சொல்வதைக் கேட்கப் போவதில்லை. என் மேல் அவனுக்குக் கொள்ளை அன்பு. எப்படியாவது என்னைக் காப்பாற்றிப் பத்திரமாக வைத்துக் கொள்ளத்தான் விரும்புகிறான். என் கொள்ளுத் தாத்தாவின் கடிகாரத்தை ஒரு பெட்டியில் போட்டுப் பத்திரப் படுத்தி இரும்பு அலமாரியில் பூட்டி வைத்திருக்கிறேனே! அதுமாதிரிதான் அவனும் என்னைப் பாதுகாக்க விரும்புகிறான். அந்தக் கடிகாரம் ஓடாது... சும்மா கிடக்கிறது.

டாக்டர் வந்தார். அவர் வந்ததும் எனக்குள்ளே இருந்து ஒரு குரல் ''டாக்டர் டாக்டர்......! எனக்குச் சாப்பிட ஏதாவது கொடுங்களேன்'' என்று கெஞ்சியது.

''உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று வினவினார் டாக்டர்.

''டாக்டர்! பாலைக் குடித்துக் குடித்துச் சலித்து விட்டது.'' — இதைச் சொல்லியது என்னமோ நான்தான். இதற்குப் பின் பேசியதோ என்னுள்ளே இருந்த அந்த அறிமுகமற்ற குரல்தான். ''டாக்டர்! எனக்கு ஏதாவது தாருங்களேன்! ஏதாவது உப்பு உறைத்த பண்டம்... ஒன்றுமில்லாவிட்டாலும் ஒரு ஸ்பூன் உப்பாவது கொடுங்கள்...''

நாவில் இதைக் கூறும்போது நீர் ஊறியது.

''உப்பு உங்களுக்கு விஷம்'' என்றார் டாக்டர். ''உங்களுக்கு உப்புத் தர முடியாது. ரொட்டியில் ஒரு சாதா ஸ்லைஸ்... வேக வைத்த, உப்புப் போடாத காய் கொடுக்கப்படும்.''

வேகவைத்த பப்பாளி, வேகவைத்த பீன்ஸ் என்னால் இரண்டு நாட்கள் கூட இதைச் சாப்பிட முடியவில்லை.

அன்று மாலை என் பிள்ளை என்னைப் பார்க்க வந்ததும் அவன் மீது சீறி விழுந்தேன். ''என்னை வீட்டுக்கு அழைத்துப் போக நீ விரும்பவில்லை. ஆஸ்பத்திரியிலேயே நான் சாவதைப் பார்க்கத்தான் நீ ஆசைப்படுகிறாய். எனக்குச் சாப்பிட எதுவுமே தருவதில்லை. பட்டினி போட்டுக் கொல்லுகிறீர்கள். சாப்பிடப் பறக்கும் பிரேதமாக அலைவேன்'' என்று கத்தினேன்.

என் பிள்ளை ஒன்றும் பேசவில்லை. மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். நான் கத்தி ஓய்ந்து அமைதி அடைந்த பின் தன் காரியாலயத்தைப் பற்றி ஏதேதோ பேசலானான். அவன் சென்ற பிறகும் என் மனத்துக்குள் ஒரே குமைச்சல். டாக்டர் வந்ததும் என்னுள்ளே இருந்த அந்தப் புதிய குரல் விழித்துக் கொண்டு பணிவு மிகுந்த குரலில், 'டாக்டர், என்மீது தயவுகாட்டுங்கள்' என்று வேண்டிக்கொண்டது.



"என்ன, கலவரம் நடக்கிற பகுதியில் உடனே நான் கச்சேரி செய்ய வேண்டுமோ.....?"

"ஆமாம், கண்ணீர்ப் புகைக் குண்டு ஸ்டாக் இல்லையாம்!"

— சந்திரசேகரன்

டாக்டர் மிகுந்த வியப்புடன் என்னை நோக்கினார். இன்று வரை அவரிடம் இந்தக் குரலில் நான் பேசியது இல்லை.

"உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று வினவினார் அவர்.

ஸ்டேஷனுக்குப் போகும் பாதை முனையில் குவியலாகத் துணியைப் பரப்பிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் ஒரு கிழவனை நான் பல முறை பார்த்திருக்கிறேன். கண்களிலே புளிச்சை கட்டி நிற்க வாயின் இரு ஓரத்திலிருந்து உமிழ்நீர் வழிந்து கொண்டிருக்கும். தரையிலே படும்படியாகக் குனிந்து குனிந்து 'ஐயா ஒரு பைசா! ஒரு பைசா!...' என்று இறைஞ்சிய வண்ணம் இருப்பான்.

அந்தக் கிழவன் தன் கந்தையைச் சுருட்டிக் கொண்டு என்னுள்ளே வந்தமர்ந்து விட்டது போல் எனக்குத் தோன்றியது.

அந்தக் கிழவன்தான் இப்பொழுது டாக்டரிடம், "என்னைப் பட்டினி போட்டுக் கொல்லாதீர்கள்! எனக்குச் சாப்பிட ஏதாவது கொடுங்கள்! இதையெல்லாம் என்றால் சாப்பிட முடியவில்லை!" என்று இறைஞ்சிக் கொண்டிருந்தான்.

"மீன் சாப்பிடுவீர்களா?" என்று வினவினார் டாக்டர்.

"மீனு?" — என் நாவில் நீர் ஊறியது. "மீன்!... சரி, டாக்டர்... மீன்!"

டாக்டர் காகிதத்தில் எழுதிவிட்டுப் போய் விட்டார்.

கட்டிலில் படுத்துக் கொண்டே நான் மீனின் ருசியை நினைவுபடுத்திக் கொள்ள முயன்று கொண்டிருந்தேன். மீன் சாப்பிட்டு நெடு நாட்கள் ஆகிவிட்டன. அதன் ருசியே நினைவு வரவில்லை.

என் மனத்தில் மீன் மிதக்க ஆரம்பித்தது. என்னுள்ளே அந்தத் தெரு முனைக் கிழவன் வந்து உட்கார்ந்து விட்டிருந்தான். மீன் சில சமயம் மேலேமிதக்கும். சில சமயம் அடியிலே போய்விடும். சிலசமயம் அதன் உடல் முழுவதும் தெரியும். சிலசமயம் வாய் மட்டும்தான் தெரியும்.

சாப்பாடு கொடுக்க வரும் நர்ஸ் டிராலியை என்னருகே நிறுத்தி என் தட்டில் மீனை வைத்ததும் நான் கண்ணிமைக்காமல் அதையே பார்த்துக் கொண்டிருந்தேன். வேகவைத்த மீன். வெள்ளை வெளேர் என்று உப்புப் போடாமல்... பச்சையாய் இருப்பது போன்ற மீன்.

அன்றிரவு முழுவதும் தண்ணீரில் நீந்தும் மீன்களைப் பற்றிய கனவுதான்.

மறுநாள் சாப்பாட்டு டிராலியுடன் வந்தவன் புதிய நர்ஸ். வார்டில் அவன் நுழைந்ததுமே அவன் புதியவன் என்பதைத் தெரிந்து கொண்டேன். இதற்கு முன் இந்த வார்டில் அவனை நான் பார்த்ததேயில்லை. உடனே என்னைத் தயார் செய்து கொள்ளத் தொடங்கினேன். அவனுக்குக் கொஞ்சம் சந்தேகம் வந்துவிட்டாலும் அவ்வளவுதான், காரியம் கெட்டுவிடும். சந்தேகம் ஏன் வரப் போகிறது?

சுற்றும் முற்றும் பார்த்தேன். யாரும் என்னைக் கவனித்ததாகத் தெரியவில்லை. என் கட்டிலின் கால்மாட்டுப் பக்கமிருந்த தட்டைக் கையில் எடுத்துக் கொண்டு மெல்ல நகர்ந்து பக்கத்துக் கட்டிலில் போய் உட்கார்ந்து கொண்டேன். அந்தக் கட்டிலின் நோயாளிக்குஅன்றுதான் டிஸ்சார்ஜ் ஆகி இருந்தது. அப்பொழுதிலிருந்தே என் மனத்தில்இதே எண்ணம்...இதே யோசனை.

சாப்பாட்டு டிராலியைத் தள்ளிக்கொண்டு அவன் என் கட்டிலருகே வந்தான். என் தட்டிலும் ரொட்டி... உப்புப்போட்ட உருளைக் கிழங்குச் சட்டினி, மசால் போட்ட மாமிசத் துண்டுகள்... எல்லாம் போட்டுவிட்டுப் போய்விட்டான்.

அவன் மேலே நகர்ந்ததும் நான் மெல்லப் பழையபடி என் கட்டிலுக்கு நகர்ந்துவிட்டேன். ரொட்டிகளை நான் தொடக்கூட இல்லை. ஒரு ஸ்பூன் மாமிசத்தை எடுத்து வாயில் போட்டுக் கொண்டேன். நாவில் நீர் சொட்டியது. இரண்டு மாதங்களுக்குப் பின் வாய்க்கு உப்புப் போட்ட ஒரு பண்டம் கிடைத்திருக்கிறது. உப்பு என்றால் உப்புத் தான்....அதுவும் இதில் மசாலா வேறு!

திடீரென்று என் முதுகுத்தண்டில் பயம். பல்லி மாதிரி விறுவிறுவென்று ஊறியது. யாராவது என் தட்டில் ரொட்டியையும், உருளைக் கிழங்குச் சட்டினியையும், மாமிசத்தையும் பார்த்து விட்டால் அவ்வளவுதான். என் தட்டு பறி முதலாகி விடும்.

அந்தப் புதிய நர்ஸ் வார்டின் கோடி வரை தான் சென்றிருப்பான். அதற்குள் அவனுக்குத் தன் தவறு புலப்பட்டு விட்டது போலும். அவசரம் அவசரமாய் மாமிசத் துண்டுகளை விழுங்கியவாறே ஓரக்கண்களால் பார்த்தேன். அவன் தன் கையில் உள்ள 'டையட் ஷீட்'டைப் புரட்டிப் புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்தான். மறுநிமிடம் அவன் வேகமாகத் திரும்பி வந்து என் கட்டிலருகில் நின்றான். பயம் என்னைக் கவ்விக் கொண்டது. தட்டை என் கரங்கள் கெட்டியாகப் பற்றிக் கொண்டன.

நர்ஸ் என்னை நெருங்கவில்லை. என் தட்டைப் பிடுங்கவில்லை என்பதைக் கவனித்தேன். கையில்'டையட் ஷீட்டை'ப் பிடித்த வண்ணம் திக்பிரமை பிடித்தவன் போல் நின்றுகொண்டிருந்தான். அவசரம் அவசரமாய் மாமிசத் துண்டுகளை விழுங்குவதைப் பார்த்தவாறு தன் கையிலிருந்த காகிதத்தைப் புரட்டிக்கொண்டிருந்தான். அவனது பார்வை என் கட்டிலில் தொங்க விடப்பட்டிருந்த அட்டையின் மீது பதிந்திருந்தது. அதில் 'வேகவைத்த பண்டம்' என்று எழுதப்பட்டிருந்தது.

"சிஸ்டர்! பயப்படாதீர்கள்! நான் யாரிடமும் சொல்ல மாட்டேன்!" என்றேன்.

வேலை நேரங்களிலும், விளையாட்டு வேளைகளிலும் அணிய வசதியான சிறந்த உள்ளுடைகள்

# டான்டெக்ஸ்



பனியன்கள்,
வெஸ்ட்கள்,
அண்டர்பேண்ட்கள்





அலுவல் நேரத்தில், பிரயாணத்தின்போது, விளையாடும் பொழுது, வீட்டிலிருக்கையில் டான்டெக்ஸ் உள்ளுடைகள் அணியுங்கள்.

பனியன்கள், வெஸ்ட்கள், அண்டர்பேண்ட்கள் பல சைஸ்களில் பிளீச் செய்யப்பட்டும், பிளீச் செய்யப்படாமலும் கிடைக்கின்றன.

உயர்ரக எகிப்தியப் பஞ்சாலானவை, அதிக வெண்மையானவை, கச்சிதமாகப் பொருந்துபவை, தொய்ந்து கொடுக்கும் தன்மையுடையவை, நன்றாகப் பிடிப்பவை.

ஒரு முறை டான்டெக்ஸ் அணிந்தால் எப்பொழுதும் டான்டெக்ஸ் அணிய விரும்புவீர்கள்.



இன்றே டான்டெக்ஸ் உள்ளுடைகள் வாங்குங்கள்.

எல்லாப் பிரதான ஜவுளிக்கடைகளிலும் கிடைக்கும்.

பூரண விற்பனையாளர்கள்:
**T. T. கிருஷ்ணமாச்சாரி & கம்பெனி,** மதராஸ்-6

# வெல்டிங் ஒரு மூன்றெழுத்து வார்த்தை

***அதற்குச் சிறிது விளக்கம் தேவை***

**அந்த மூன்று எழுத்துக்கள் ஐஓஎல் என்பது தெளிவு. ஏனெனில் ஐஓஎல் (இந்தியன் ஆக்ஸிஜன் லிமிடெட்) வெல்டிங் தொழில் நுட்பத்தில் முன்னேற்றத்துக்கு எப்போதும் முன்னோடியாக இருந்து, இந்த நாட்டில் புதிய வெல்டிங் உத்திகளை புகுத்தியுள்ளது. அதே சமயத்தில் ஐஓஎல் நம் நாட்டிலேயே பலவகை வெல்டிங் சாதனங்களையும் அதற்குச் சம்பந்த முள்ள வேறு பொருள்களையும் செய்துள்ளதோடு வேறு எங்கும் உள்ள சிறந்த தொழில் நுட்ப வாதிகளுக்குச் சமமான வெல்டிங் தொழில் நுட்பவாதிகள் பலரையும் பயிற்றுவித்துள்ளது.**

**இன்று நாட்டின் ஒவ்வொரு பெரிய தொழில் பிரதேசத்திலும் 60-க்கும் அதிகமான தொழிற் கூடங்கள், அலுவலகங்கள், டிப்போக்கள், கம்பிரஸிங் நிலையங்களை நிறுவி செயல்பட்டு வருகிறது. ஒரு விரிவான விநியோகிப்புப் பணியையும் அது செய்து வருகிறது. வெல்டிங் சம்பந்த மாக எழக்கூடிய எந்த ஒரு பிரச்னையையும் தீர்த்துவைக்க இந்தியா முழுதும் ஐஓஎல் தொழில் நுட்ப நிபுணர்களும், சர்விஸ் இன்ஜினியர்களும் பணியாற்றுகின்றனர்.**

***வெல்டிங் துறையில் முதல்வர்கள் :***

IOC-1786 TAH

**IOL**

பிரமித்து நின்ற அந்நிலையி லிருந்து சற்றே மீண்ட அவன் ''ப்ளீஸ்! யாரிடமும் சொல்லா தீர்கள்'' என்றான் மெல்ல.

நான் சரியென்று தலையைத் ததும் அவன் போய்விட்டான்.

இனி எந்த அவசரமும் இல்லை. நான் என் கையிலிருந்த தட்டைப் பார்த்தேன். மாமி சத் துண்டுகளைக் காலி செய் தாகிவிட்டது. உருளைக் கிழங் குச் சட்டினியை ரசித்துச் சாப் பிட்டுக் கொண்டிருந்தேன்.

எத்தனையோ நாட்களுக்குப் பின் நான் சிரித்தேன். உரக்க, பலமாகச் சிரிக்க வேண்டும் போலிருந்தது. வார்டு முழுதும் ஓடியாடி ''டாக் டர்களே! நீங்கள் பைத்தியக் காரர்கள்!'' என்று உரக்கக் கூவ வேண்டும் போலிருந்தது.



''அப்பா நீங்க தர்ற 'பாக்கெட் மணி' எனக்குப் போதுவதில்லே. அதனாலே இனிமே 'சாக்கெட் மணி' யாத் தாங்கோ''

''என்னிடம் நிறைய இருக் கிறது'' என்றேன். அவன் கேட்கவில்லை. வலுக்கட்டாய மாகத் தன் தட்டில் இருந்த முட்டைக்கோசுக் கறியை என் தட்டில் போட்டுவிட்டான்.

மஞ்சள் பொடி போட்டு வேக வைத்து, உப்பும் காரமும் போட்ட கோசுக் கறி என் தட்டுக்கு வந்து விட்டது. மெல்ல நாக்கை நீட்டி, உலர்ந்த உதடுகளை ஈரமாக்கிக் கொண்டு வாயில் ஊறிய உமிழ்நீரை விழுங்கிக் கொண்டேன். கட் டிலை விட்டு இறங்கிப் போய்ப் பக்கத்துக் கட்டில் நோயாளி யிடம் ''இதுபோல் தினமும் எனக்குக் கொஞ்சம் காய்கறி தந்து கொண்டு இரப்பா'' என்று வேண்டிக் கொள்ள வேண்டும்போல் தோன்றியது.

அன்று மாலை பழைய நர்ஸ் டியூட்டிக்கு வந்துவிட்டாள். டிராலி என்னருகே வந்து நின்றதும், வேகவைத்த பீன்ஸுடன் வேக வைத்த மீன் துண்டங்கள் சிலவும் என் தட் டில் விழுந்தன.

''சிஸ்டர் ப்ளீஸ்'' என்றேன். என்னுள்ளே இருந்த நானே அறியாத அந்தப் புதிய குரல் இப்பொழுது என்னுடன் இரண்டறக் கலந்து விட்டது போல் எனக்குப் பட்டது. இப் பொழுது அதை என்னிலிருந்து பிரித்து வேறுபடுத்திப் பார்க்க என்னால் இயலவில்லை.

''என்ன வேண்டும்?'' என்றாள் நர்ஸ்.

''சிஸ்டர்! ஏதாவது உப்புப் போட்ட பண்டம்...'' என்று குழைந்தேன்.'' கொஞ் சம் ருசிக்காக... ஒரு மாறுதலுக்காக...''

''ஓ... நோ...'' டிராலி மேலே நகர்ந்தது. ''நாட் ஃபார் யூ...''

தட்டோடு அந்த ஆகாரத்தை அவள் தலை யில் கொட்டி விட்டெறியாமலிருக்க நான் மிகுந்த சிரமத்துடன் என்னைக் கட்டுப்படுத் திக்கொள்ள வேண்டியிருந்தது.

எனது இடப்புறமிருந்த கட்டிலுக்குப் புதிய நோயாளி வந்து விட்டான். வலது புறக் கட்டிலிலிருந்த நோயாளியுடனும் உறவு கொண்டாடினேன். பழகினேன். ஏன் என்றால் அன்று பொழுது விடிந்ததிலிருந்து என்னுள் ஒரு திட்டம் உருவாகிக் கொண்டிருந்தது.

நர்ஸ் ஆகாரத்தை வழங்கிவிட்டுப் போய் விட்டாள்.

''அப்பா... எத்தனை அதிகம்!...'' என் றேன் மெல்ல.

இடதுபுறக் கட்டிலில் இருந்த நோயாளி யின் காதில் இது விழுந்ததையும் கவனித்துக் கொண்டேன். அவன் தட்டையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''நீங்கள் மீன் சாப்பிடுவீர்களா?'' — புன் சிரிப்புடன் கனிவு பொங்க வினவினேன்.

அவன் ஒன்றும் பதில் கூறவில்லை. மெல்லக் கட்டிலை விட்டிறங்கி அவன் தட்டில் மூன்று நான்கு மீன் துண்டங்களைப் போட்டேன்.

''நீங்கள் செய்தது சரியல்ல'' என்றான் அவன். ''அப்புறம் நீங்கள் எதைச் சாப்பிடு வீர்கள்?''

அன்று மாலையே என் பிள்ளை என்னை வீட் டுக்கு அழைத்து வந்து விட்டான். வீட்டுக்கு வந்த பின்தான் அவன் என்னிடம் சொன் னான். சில நாட்களுக்கு முன்னரே டாக்டர் என்னை 'டிஸ்சார்ஜ்' செய்துவிடலாம் என்று தான் யோசித்துக் கொண்டிருந்தார். நான் அவசரப்படப் போகிறேன் என்று அவன் தான் என்னிடம் இது பற்றிக் கூறவில்லையாம்.

வீட்டுக்கு வந்ததும் எனக்கு ஒரே மகிழ்ச்சி. டினிக்கொரு முறை ஆஸ்பத்திரி நச்சரிப்பிலி ருந்து விடுதலை... அப்பாடா என்றிருந்தது.

வீட்டிலும் உப்புப் போடாமல் வேக வைத்த காய்கறியைக் கண்டதும் எனக்குப் பற்றிக் கொண்டு வந்தது. தட்டைத் தூக்கி வீசி எறிந்தேன். 'டண் டண்' என்ற ஓசை யுடன் அந்தப் பீங்கான் தட்டு துண்டு துண் டாகி விட்டது. அறை முழுவதும் காய்கறிகள் சிதறிவிட்டன. மருமகள் இடது பாதத்தை அடிக்கடி அழுத்திக் கொள்வது என் கண் ணில் பட்டது. உடைந்த துண்டு ஏதோ பாதத்தில் குத்திவிட்டது போலிருக்கிறது. ஆனால் என் மனம் சற்றுக்கூட இரங்கவில்லை. எனக்கு அத்தனை ஆத்திரம், கோபம். அவள் மட்டும் என் மருமகளாய் இல்லாமலிருந் தால், வேறு யாராவதாக இருந்திருந்தால் அந்த உடைந்த துண்டுகளைப் பொறுக்கிப் பொறுக்கி, எடுத்து அடித்து இருப்பேன்.

''இதையேதான் கொடுப்பது என்றிருந் தால் என்னை ஏன் வீட்டுக்கு அழைத்து வந் தீர்கள்?'' என்று கத்தியவாறே பொருமிய வண்ணம் படுத்துக் கொண்டு விட்டேன்.

மருமகள் வாயே திறக்கவில்லை. போய்த்தன் கணவனை அழைத்து வந்தாள். அவனைக் கண்ட தும் நான் எழுந்து உட்கார்ந்து கொண்டேன். அவன் என்னையே பார்த்தவாறு நின்றிருந் தான். பேசவில்லை. ஒன்றும் சொல்லவில்லை.

''பட்டினி கிடந்து உயிர் வாழ்வதை விட நன்றாகச் சாப்பிட்டுவிட்டுச் சாவது மேல்'' என்றேன் நான்.

''அப்பா! நீங்கள் எங்களது சங்கடமான நிலைமையைப் புரிந்து கொள்ள வேண்டும்'' என்றான் அவன் நிதானமாக. அவன் கண் களில் நீர் பனித்தது. ''எங்கள் கையால்

உங்களுக்கு விஷத்தைக் கொடுக்க எங்களால் இயலாது!''

இதைக் கூறியதும் இருவரும் அறையை விட்டு வெளியே போய்விட்டார்கள். நான் ஏதாவது சொல்லவே அவர்கள் சந்தர்ப்பம் அளிக்கவில்லை. பொருமிய வண்ணம் நான் மீண்டும் படுத்தேன்.

வேலைக்காரி வந்து அறையைச் சுத்தம் செய்தாள். மருமகள் மீண்டும் எனக்கு ஆகாரம் எடுத்து வந்தாள். இந்தத் தடவையும் அதே உப்புப் போடாத வேகவைத்த காய்கறிகள். ஆனால் தட்டுத்தான் எவர்சில்வர்... நான் உடைக்க முடியாத பொருள்!

சரி. இவர்கள் இருவரும் உறுதியாக இருக்கிறார்கள் என்பது எனக்குப் புரிந்துவிட்டது.

மறுநாள் பிள்ளை காரியாலயத்துக்குப் போயாகி விட்டது. மருமகள் தன் அறையில் ஏதோ படித்துக் கொண்டிருந்தாள். விளையாட்டுக் காட்டும் சாக்கில் மெல்லப் பேரனை என்னருகே கூப்பிட்டுக் கொண்டேன். நான் ஆஸ்பத்திரியில் இருந்தவரைக்கும் பேரன் என்னருகே வரவேயில்லை. என் உடம்பைப் பற்றிய கவலையில் இருந்த அவர்கள் இருவருக்கும் அவனைப் பற்றிய நினைவே இல்லை போலும். நான் கூப்பிட்டதும் அவன் ஆசையோடு ஓடி வந்தான்.

அவனை மடியில் எடுத்து வைத்துக்கொண்டு ''சாக்லேட் யார் சாப்பிடப் போகிறார்களாம்?'' என்றேன் மெதுவாக.

''பப்லூ...'' என்றான் குழந்தை.

''அப்படியானால் ... பப்லூ ...முதல்லே சமையல் அறையிலிருந்து கொஞ்சம் உப்புக் கொண்டு தரணும்'' என்று கெஞ்சலாகக் கூறியவாறே கீழே இறக்கி விட்டேன்.

மூன்று வயதுக் குழந்தையான பப்லூ உப்பு எப்படிக் கொண்டு வருவான் என்பது எனக்குச் சந்தேகம்தான். ஆனால் முயற்சி செய்வதில் என்ன தப்பு? நான் பப்லூவின் வருகையை எதிர்நோக்கிக் காத்திருந்தேன்.

பப்லூ வந்தான். அவன் கைப்பிடி நிறைய உப்பு. ரொம்பப் பத்திரமாக அவன் கையிலிருந்த உப்பையெல்லாம் எடுத்துக்கொண்டு நான் அந்தச் சின்னஞ் சிறு கையை நாவினால் நக்கிக் கொண்டேன். பிறகு உப்பை விரலால் தொட்டுத் தொட்டுச் சுவைத்தேன்; மீதியைக் காகிதத்தில் பொட்டலமாக மடித்துத் தலையணையின் கீழே பத்திரமாக வைத்துக் கொண்டேன்.

''பப்லூ குட்டி! உப்பு எங்கே யிருந்து கொண்டு வந்ததாம்?'' என்று மெல்ல வினவினேன்.

''மீனு கொடுத்தா!''

மீனு எங்கள் வீட்டு வேலைக்காரி.

இந்த உபாயம் நன்றாக வேலை செய்யக் கூடும். நான் யோசனையில் ஆழ்ந்தேன். மீனுவுக்கே ஒரு ரூபாய் இரண்டு ரூபாய் கொடுத்தால் அவள் எனக்கு உப்புறைத்த பண்டங்களை வாங்கித் தரலாம் அல்லவா? எனக்குச் சிகரெட்டும் வாங்கித் தரலாம்.

''சாக்லேட்...'' பப்லூ தன் பிடியை விடவில்லை.

''அப்பா சாயங்காலம் கடையிலிருந்து வாங்கிண்டு வருவா'' என்று சொல்லிக் குழந்தையை மெல்ல அறையிலிருந்து வெளியேற்றி விட்டேன். என் மனத்தில் சிகரெட்டும் அதன் மணமும் புகையும் வியாபித்து நின்றன.

பப்லூ முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு போனான். நான் இப்படி ஏமாற்றுவேன் என்று குழந்தை எதிர்பார்க்கவில்லை.

சிகரெட்...நான் யோசனையில் ஆழ்ந்தேன். என்னை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்ற தினம் நான் சிகரெட் பத்துப் பாக்கெட்டுகள் வாங்கி வந்திருந்தேனே! அவை என் அலமாரியில்தான் இருக்க வேண்டும்.

அறைக் கதவைத் தாழிட்டேன். மெதுவாக அலமாரியைத் திறந்தேன். கண் எதிரே பத்துப் பாக்கெட்டும் இருந்தன. தீப்பெட்டியும் இருந்தது. ஒரு பாக்கெட்டை எடுத்துக் கொண்டேன். எப்பொழுதும் திறந்தே கிடக்கும் அலமாரியைப் பூட்டிச் சாவியை என் ஜேபியில் வைத்துக் கொண்டேன். இனி என் சிகரெட் பாக்கெட்டுகளைப் பிள்ளை என்னிடமிருந்து பிடுங்கிக் கொள்ள முடியாது.

அன்று மாலை நான் சிகரெட் புகைத்துக் கொண்டிருந்தேன். என் பிள்ளையின் காலடி ஓசை கேட்டது. சட்டென்று சிகரெட்டைத் தேய்த்து அணைத்தேன். பளிச்சென்று ஒரு யோசனை மின்னல் போல் உதயமாகியது. சிகரெட்டை மீண்டும் பற்ற வைத்துக் கொண்டு சுவரில் சாய்ந்தவாறு நிம்மதியாகப் புகையை ஊதலானேன்.

பிள்ளை என் அறைக் கதவருகே வந்து நின்றான். திரையை ஒதுக்கியவாறே ''எப்படி இருக்கிறீர்கள் அப்பா!'' என்று விசாரித்தவன் நான் சிகரெட் பிடிப்பதைக் கண்டதும் பரபரக்க ஓடிவந்து என் கையிலிருந்த சிகரெட்டைப் பிடுங்கினான்.

''உங்களுக்குச் சிகரெட் எங்கே யிருந்து கிடைத்தது?''

நான் அதிகமாகச் சிரமப்படுத்திக்கொள்ளவில்லை. சாதாரணமாக ''உன் மனைவிதான் வாங்கித் தந்தாள்'' என்றேன்.

உப்புக்கடிமையான எனக்குப் பொய் பேசுவது கஷ்டமாகவே இருக்கவில்லை.

அவன் ஒரு கணம் கூட அறையில் தாமதிக்கவில்லை. போய்விட்டான். என் அறையில் இருந்தபடியே என் பிள்ளையும் மருமகளும் சச்சரவிட்டுக் கொள்வதைக் கேட்டுக்கொண்டிருந்தேன். பிள்ளை பலமாகக் கத்திக்கொண்டிருந்தான். மருமகள் முதலில் தாழ்ந்த குரலில்தான் பதில் கூறிக் கொண்டிருந்தாள். வர வர அவள் குரலும் உயர்ந்து விட்டது. அவள் எதையோ அடிக்கடி மறுத்துக் கொண்டிருந்தாள்.

என் பிள்ளை அவளைக் கன்னத்தில் அறைந்து விட்டான் என்று தோன்றியது. கூச்சல் அடங்கி விட்டது. சண்டை ஓய்ந்து விட்டது.

படுக்கையில் படுத்தவாறே நான் எனக்குள் சிரித்துக் கொண்டேன். என் மருமகளைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். நாளைக்கு எனக்கு உப்பிட்ட காய்கறிகள் கிடைக்கும். ஆமாம், சிகரெட்டும்கூடத்தான்.

என் பிள்ளை வெறும் முட்டாள்; அடிமுட்டாள்... மனத்துள் கூறிக் கொண்டேன் நான். தமிழாக்கம்: **சரஸ்வதி ராம்நாத்**

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# ‘அவள் படிப்பிலும் விளையாட்டுக்களிலும் ஒரே போல் கெட்டிக்காரி !’



ஆனால், சில நாட்களுக்கு முன் அவளுக்கு ஒரே மந்தம். நான் டாக்டரை விசாரித்தேன்.

டாக்டர் சொன்னார்: “அவளுக்கு தினமும் ஹார்லிக்ஸ் கொடுங்கள்.”

ஹார்லிக்ஸ் சாப்பிட்ட பின் அவள் படிப்பிலும் விளையாட்டுக்களிலும் ஒரேபோல் கெட்டிக்காரியாக மாறிவிட்டாள்!



**ஹார்லிக்ஸ் அவளைக் கெட்டிக்காரியாக மாற்றிற்று!**

வளரும் குழந்தைகளுக்கு தெம்புடன் திகழத் தேவையான அதிக சக்தியை அளிக்க ஹார்லிக்ஸ் உதவுகிறது. டாக்டர்கள் குழந்தைகளுக்கு ஹார்லிக்ஸ் சிபார்சு செய்கிறார்கள். உங்கள் மகளுக்கும் ஹார்லிக்ஸ் தேவை!

HL. 7773 A

ஆடைச்சத்து நிறைந்த பாலுடன் கோதுமை மாவு மற்றும் மால்டெட் பார்லியின் போஷாக்குச் சத்துக்கள் சேர்ந்தது




# ஹார்லிக்ஸ் அதிக சக்தியை அளிக்கிறது!

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon